செய்யப்பட்ட வெண்ணைத்திரிருந்த அன்னி உலகமெல்லாம் ப
டைத்துக் காத்தருளிய பார்வதியாரது முலைப்பாலோடு உண்
ட சம்பந்தஸ்வாமிகளுக்குச் சிநேகிதராகிய பெருமையும்
அடைந்தார்.—(எ-று) (௰௨)

அன்னமருந்திருமுருகனார்புகலிப்பிள்ளையார் .... ..*
பொங்குமணத்தின்முன்செய்தபூசையதனூடுபுக்கருளிச் ...*
செங்கண்டலேறுயர்த்தவர்தாளுஞ்சிறந்தவருளின் பொருளிற்
தங்கள்பெருமானடிநீழற்றலையாநிலைமைசார்வுற்றார் ....[௧௰

(இதன்பொருள்)

அவ்வாறு இருக்கும் முருகநாயனார்-அழகுபெற்ற சீகாழியி
ல் அவதரித்த சம்பந்தமூர்த்திஸ்வாமிகளது சிறப்பாகிய திரு
க்கலியாணத்தில் முன்செய்த பூசாபலத்தினால் அவ்விடத்தி
னுட்சென்று சிவந்தகண்களையும் வல்லமையும் உடைய ரிஷபத்
தை வாகனமாகக்கொண்ட பரமசிவன்-மேன்மைபொருந்திய
கிருபையாகிய பொருளை அனுக்கிரகம்பண்ணினதினாலே தம
க்கிறைவராகிய ஆண்டவரது திருப்பாதநிழலில வாசஞ்செய்
யுந்தலைமையாகிய நிலைமையை அடைந்தார்.—(எ-று)(௰௩)

அரவமணிந்தவரையாரையர்ச்சித்தவர்தங்கழனிழற்கீழ் .....*
விரவுபுகலூர்முருகனார்மெய்மைத்தொண்டின்திறம்போற்றிக்
காவிலவர்பால்வருவாரைக்கருத்திலுருத்திரங்கொண்டு ....*
பரவுமன்பர்பசுபதியார்பணிந்தபெருமைபரவுற்றேன் ....*

(இதன்பொருள்.)

பாம்பினைத்தரித்த இடையை உடைய கைலாசபதியை அர்ச்
சனைசெய்து அவரது திருப்பாதநிழலின்கீழ் அடைந்திருக்கின்
ற திருப்புகலூர் முருகநாயனார்செய்த மெய்ம்மையான திருத்
தொண்டின் பெருமையைப்புகழ்ந்து மனதில்வஞ்சகமில்லாத
வரிடத்தில் வந்தருள்செய்கின்ற சுவாமியை மனதோடு உருத்
திரத்தைக்கொண்டு ஸ்தோத்திரஞ்செய்கின்றபசுபதிநாயனார்-
பரவுகின்ற பத்தியின் பெருமையைக்குறித்துச் சொல்லத்தொ
டங்கினேன்.—(எ-று) உருத்திரமாவது-யசுர்வேதத்தினாலா
ங்காண்டத்தில் பரமசிவனை ஸ்தோத்திரம்செய்யும் ஒருபாகம்.

முருகநாயனார்புராணம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௩௱௰௫.

———

(இதன்பொருள்)

அழகிய இடத்தையுடைய அந்தநகரத்தில் அரிதாகிய வேதங்களை ஓதுதலால் சிறந்தபிராமணர்குலத்தில் அவதரித்த பரிசுத்தரானவர் சிவந்தகண்களையுடைய விஷ்ணுவாகிய ரிஷபத்தைவாகனமாகக்கொண்டவரும் செழுமைபொருந்திய பொன்னையுடைய இமாசலராசன் புத்திரியாராகியபார்வதியாரைப் பாகத்தில் உடையவருமாகிய பரமசிவனுக்கு அடிமைத்திறத்தைச் செய்கின்ற பசுபதியாரென்று ஒருவரிருந்தார்.—(எ-று) (௧)

ஆயவந்தணரருமறையுருத்திரங்கொண்டு .... .... ....*
மாயனாரறியாமலர்ச்சேவடிவழுத்துந் .... .... ......*
தூயவன்பொடுதொடர்பினிவிடையறாச்சுருதி .... ....*
நேயநெஞ்சினராகியதொழிறலைநின்றார் .. .. .. .. ..*

(இதன்பொருள்)

அப்படிப்பட்ட உருத்திரபசுபதிநாயனார் அரிதாகியவேதசம்பத்தமாகிய உருத்திரமந்திரத்தைக்கொண்டு விஷ்ணுவால் அறியப்படாத தாமரைமலர்போன்ற திருவடிகளைத் துதிக்கின்ற பரிசுத்தமாகிய அன்புடனே தொடர்ச்சியாக இடைவிடாமல் ஓதி இளகின மனத்தையுடையவராகிய தொழிலில் சிறந்தவரானார்.—(எ-று) (௨)

கரையில்கம்பலைப்புள்ளொலிகறங்கிடமருங்கு .... ......*
பிரசமென்சுரும்பறைந்திடக்குருவரால்பிறழு .. .. .. .. *
திரைநெருங்குபுநீரிடைநெருப்பெழுந்தனைய .... .......*
விரைநெகிழ்ந்தசெங்கமலமென்பொய்கையின்மேவி ...*

(இதன்பொருள்.)

கரையில் பட்சிகள் முழக்கத்தை உண்டாக்கப் பக்கத்தில் தேனையுண்ணவந்த வண்டுகள்முழங்கப் பெரியவரால மீன் துள்ளுகின்ற அலைகளையுடைய நீண்டகுளத்திலுள்ள ஜலத்தில் நெருப்பின்சுவாலையெழும்பினதுபோன்ற வாசனைவிரிந்த செந்தாமரை மலர்களையுடைய தடாகத்துக்குப் போய்.—(எ-று)

தெள்ளுதண்புனல்கழுத்தளவாயிடைச்செறிய ... .. .....*
வுள்ளுறப்புக்குநின்றுகையுச்சிமேற்குவித்துத் .... ....*
தள்ளுவெண்டிரைக்கங்கைநீர்ததும்பியசடையார் .........*
கொள்ளுமன்பினிலுருத்திரங்குறிப்பொடும்பயின்றார் ......*

பாடுபெற்றசீ ருருத்திரபசுபதியாராக் .. .. ... .. .....*
கூடுநாமமுந்தந்தனருலகெலாம்போற்ற . .. .. .. .. *

(இதன்பொருள்.)

மிகுந்த அன்போடு உருத்திரத்தை ஓதியதன்மையினால் நர்த்தனஞ்செய்தருளுகின்ற சுவாமியின் திருவடிகளின் அருகில் அடைந்தார்-ஆதலால் அந்த அடியார்க்குப்பெருமைபொருந்திய சிறப்பை உடைய பசுபதியாரென்கிற நாமமும் உலகத்தார் புகழும்படியாக உண்டாயிற்று.—(எ-று) (௬)

அயில்கொண்மூக்குடுமிப்படையார்மருங்கருளாற் .....*
பயிலுருத்திரபசுபதியார்திறம்பாடி .... .. .. .. ...*
யெயிலுடைத்தில்லை யெல்லையினுளைப்போவாராஞ் . ....*
செயலுடைப்புறத்திருத்தொண்டர்திறத்தினைமொழிவாம் ..*

(இதன்பொருள்.)

கூர்மையைப்பெற்ற மூன்றுகவராயிருக்கும் சூலாயுதத்தை உடையவர் பால் அன்புசெய்கின்ற உருத்திரபசுபதிநாயனாருடைய அடிமைத்திறத்தை ஸ்தோத்திரம்பண்ணி மதில்சூழ்ந்த தில்லைமாநகரத்தினெல்லையில் நாளைப்போவாரென்கிற புறத்திலிருந்து வணங்குகின்ற அடியவருடைய பத்தியின் முதிர்ச்சியைச்சொல்வாம்.—(எ-று) (௭)

உருத்திரபசுபதிநாயனார்புராணம்-முற்றிற்று.

ஆ- திருவிருத்தம்-௩௪௰௫.





# திருநாளைப்போவார்நாயனார்புராணம்.

பகர்ந்துலகுசீர்போற்றும்பழையவளம்பதியாகும்.... .. *
திகழ்ந்தபுனற்கொள்ளிடம்பொன்செழுமணிகடிரைக்கரத்தா
முகந்துதரவிருமருங்குமுளரிமலர்க்கையேற்கும் . .... ..[ன்
அகன்பணைநீர்நன்னாட்டுமேற்காநாட்டாதனூர் .. ... .. *

(இதன்பொருள்)

உலகத்தார் விரித்துச்சொல்கின்ற சிறப்பினையுடையதாய்ப் புராதனமாகிய நகரமாயிருக்கின்றது-பிரகாசிக்கின்றதிரையுடை

யு கொள்ளிடநதியானது பொன்னையும் காந்தியுள்ளமணிகளை யும் அலையாகிய கையினால்வாரிக்கொடுக்க-இருபுறத்திலும் தாமரை தனதுபுஷ்பமாகிய கையினால் எற்றுக்கொள்கின்றவிசாலமாகிய வயலகளையுடைய சோழநாட்டில் மேற்காநாட்டில் ஆற்றானது —(எ-று) (க)

நீற்றலர்பேரொளிநெருங்குமப்பதியினிறைகரும்பின் .. *
சாற்றலைவன்குலைவயலிற்றகட்டுவராலெழப்பகட்டே .... *
ஏற்றலவன்கொழுக்கிழித்தசால்வழிபோயமைந்தேறிச் .. *
சேற்றலவன்கருவுயிர்க்கமுருகுயிர்க்குஞ்செழுங்கயலம் ... *

(இதன்பொருள்.)

திருநீறுதரித்தலால்-விரிந்த பெரிய ஒளியானது நெருங்கியஅந்நகரத்தில் முற்றியகரும்பின்சாற்றினால் அலைகின்ற வலிய நெற்குலைகளையுடைய வயலில்-தகட்டுவடிவையுடைய வரால் மீனானது எழும்ப எருமைக்கடாக்கள்பூட்டிய ஒப்பற்ற கலப்பையினுனியிலிருக்கும் கொழுவினாற்பிளக்கப்பட்ட சால்வழியாகப்போய் அமைந்து எற்சேற்றில்நண்டுகள் கருவையின-செழுமையெபாருந்திய தாமரைப்பூ தேனைச் சொரியும்.—(எ-று) (உ)

நாளமருவுஞ்சினைபொதுளிநறவிரைகுஞ்செறிதளிரிற் ....*
றிளைசாலமலைடலம்வருந்திச்செழுந்தருவின்குலம்பெருகிக் *
கனமருவியலைந்தசையகளிவண்டுபுடைசூழப் .... ... *
புனன்மழையோமதுமழையோபொழிவறாபூஞ்சோலை

(இதன்பொருள்)

அரும்புகளையுடைய கிளைகளில் நெருங்கி நல்ல வாசனையுற்று மேலாகத்தில் இருக்கும் தளிர்களால் சூரியனுடைய வட்டமாகியவடிவத்தைத்தடவுகின்ற செழுச்சியாகியவிருட்சகூட்டங்கள் நிறைந்து கீழ்ப்புறத்தில் மேகக்கூட்டங்கள் அலைந்து சஞ்சரித்தலாலும் வண்டுகள்சுற்றிமொய்த்தலாலும், பூஞ்சோலைகள் பொழிதல் ஒழியவில்லை அப்படிப்பொழியப் படுவது நீர்மாரியோதேன்மாரியோ அறியோம்.—(எ-று) புனன்மழையோ மதுமழையோ வென்றது-தூரத்திலிருந்துஅச்சோலையைப்பார்த்தோர்சொல்லியதாம் - ஒகாரங்களைநீக்கி- ஐகாரவுருபை விரித்துரைசொல்வதுமுண்டு. (ங)

பாளைவிரிமணங்கமழும்பைங்காய்வன்குலைத்தெங்கின் ....*
குளதிரம்புசமுட்டிடத்தடக்கிடங்கிலெழப்பாய்ந்த .......*

வாளைபுதையச்சொரிந்தபழமிதப்பவண்பலவி ........ *
னீளமுதிர்கனிகிழிதேனித்தியெழுந்துகளும் .... ....*

(இதன்பொருள்.)

பாளைகள்விரிந்து மணக்கின்ற பசுமையாகியகாய்கள் நிறைந்த குலைகளையுடைய தென்னமரங்களின் அடிப்புறமானது அதிரும்படி முட்டி-அகலமாகிய குளங்களிலிருந்து எழும்பிப்பாய்ந்த வாளைமீனானது புதைந்துபோகும்படி அந்தத்தென்னமரங்கள் சொரிந்த தெற்றுக்கள்மிதக்கப்பின்பு பலாமரத்தினது நீண்டு முதிர்ந்த பழங்கள் வெடித்துச்சொரிந்த தேன்பிரவாகத்திலுமேலே யெழும்பிக் குதித்து விளையாடும்.—(எ-று) (௩)

வயல்வளமுஞ்செயல்படுபைந்துடவையிடைவருவளமும் .. *
வியலிடமெங்கணுநிறையமிக்கபெருந்திருவினவாம் .... *
புயலடையுமாடங்கள்பொலிவெய்தமலிவுடைத்தா ..... *
யயலிடைவேறடிநெருங்கக்குடிநெருங்கியுளவவ்வூர் .... *

(இதன்பொருள்)

வயல்களால் உண்டானவளங்களும் வைத்துவளர்க்கப்பட்ட பசுமைபொருந்திய சோலைகளால் உண்டாகியவளங்களும் அகன்ற இடமெங்கும் நிறைய அதனால் மிகுந்தபாக்கியத்தையுடைய மேகங்கள்தவழும்மேல்வீடுகள் சிறப்படையச்சந்தோஷமுடையதாய்ப்பக்கத்தில் அடிக்கொருகுடியாக நெருங்கியுள்ளது அந்தஊர்.—(எ-று) அடிநெருங்கக்குடிநெருங்குதலாவது-நடுவில் நடுவில் இடம்விடாமல் நெருங்ககட்டியிருப்பது.

மற்றவ்வூர்ப்புறம்பணையின்வயன்மருங்குபெருங்குலையிற் .. *
சுற்றம்விரும்பியகிழமைத்தொழிலுழவர்கிளைதுவன்றிப் .. *
பற்றியபைங்கொடிச்சுரைமேற்படர்ந்தபழங்கூரையுடைப்.*
புற்குரம்பைச்சிற்றில்பலநிறைந்துளதோர்புலைப்பாடி ....*

(இதன்பொருள்.)

மேற்சொல்லிய வளங்களையுடைய அந்தஊரின் வயல்களின்புறத்தில் ஒப்பற்றகுலையாகச் சுற்றத்தாரால் விரும்பப்பட்டுத்தமக்கு உரிமைத்தொழிலாகிய உழுதுநாற்றுநடுதல்முதலானவற்றை உடைய உழவர்களதுகூட்டம்நெருங்கிப் பசுமைபொருந்திய சுரைக்கொடியானது மேலே படர்ந்திருக்கின்ற விழலால்வேயப்பட்ட பழங்கூரையையுடைய சிறுகுடிசைகள் அநேகம்நிறைந்திருக்கின்றது ஒரு நீஷ்டாதார்சேரி.—(எ-று)

கூருகிர்மெல்லடியளகின்குறும்பார்ப்புக்குழுச்சுழலும்... *
வார்பயின்முன்றிலினின்றவள்ளுகிர்நாய்த்துள்ளுபறழ் ... *
காரிரும்பின்சரிசெறிகைக்கருஞ்சிறார்கவர்ந்தோட ..... *
வார்சிறுமென்குரைப்படக்குமரைக்கசைத்தவிருப்புமணி. *

(இதன்பொருள்)

கூர்மையாய் மென்மைபொருந்திய அடியையுடையகோழிப் பேடுகளின்சிறிய குஞ்சுகளின் கூட்டங்கள் சுழன்றுகொண்டிருக்கும்வார்தொங்குகின்ற முற்றத்தில்நிற்கும் கூரிய நகத்தையுடையநாய்களின் துள்ளுகுட்டிகள்கரியஇரும்பினாற் செய்யப்பட்டகாப்பிலேகையிலணிந்த தீண்டாதார்பிள்ளைகள் பிடித்துக்கொண்டோட- அவர்களிடுப்பிற்கட்டிய இருப்புமணியினோசையானது அந்தச்சிறுநாய்களின்குரைக்கின்ற ஓசையை அடக்கும்.—(எ-று) (எ)

வன்சிறுதோன்மிசையுழத்திமகவுறக்குநிழன்மருதுந் .... *
தன்சினைமென்பெடையொடுங்குந் தடங்குழிசிப் புதைநீழன் *
மென்சினையவஞ்சிகளும்விசிப்பறைதூங்கினமாவும்... [கும்
புன்றலைநாய்ப்புனிற்றுமுழைப்புடைத்தெங்கு முடைத்தெங்

(இதன்பொருள்.)

உறுதியான சிறியதோலின்மேல் உழத்தியர்கள் பிள்ளைகளைத் தூங்கும்படி செய்தற்கிடமாகிய நிழலையுடைய மருதமரமும்—சூலாகிய மெலவியபேடைகள் ஒடுங்குகின்ற- அகலமாகியபானையைப்புதைத்திருக்குர் நிழலையுடைய கிளைகள்பொருந்திய வஞ்சிமரங்களும், வாரினாற்கட்டப்பட்ட பறையானது தொங்குகின்ற கூடமாகிய மாமரங்களும், சிறியதலையை உடைய நாய்க்குட்டிகளுக்கு இருப்பிடமாகிய பள்ளத்தைப் பக்கத்தில் உடைய தென்னமரங்களும், எங்குமுடைத்தா யிருக்கின்றது—(எ-று) உழத்தியர்-தீண்டாதாருடையபெண்கள். (அ)

செறிவலித்திண்கடைஞர்வினைச்செயல்புரிவைகறையாமக் .. *
குறியளக்கவழைக்குஞ்செங்குடுமிவாரணச்சேக்கை ..... ...*
வெறிமலர்த்திண்சினைக்காஞ்சிவிரிநீழன்மருங்கெல்லா ....*
நெறிகுழற்புன்புலைமகளிர்நெற்குறுபாட்டொலிபரக்கும் . *

(இதன்பொருள்.)

மிகுந்தபலத்தையுடைய கடையர்கள் தங்களுடைய வேலையைச்செய்வதற்குப் புறப்பட விடியற்காலமாயிற்றென்று தெரிவிக்கக்கூவுகின்ற சிவந்த உச்சிக்கொண்டையையுடைய கோழி

ளுக்குப் படுக்கையிடமாகிய வாசனைபொருந்திய மலர்களையு
டைய கிளைகளுள்ள காஞ்சிமரத்தினது அகன்ற நிழலின் இட
மெல்லாம் செறிந்தெழுந்த தலைமயிரினையுடைய பெண்கள்
நெல்லுக் குத்தும்போது பாடுகின்ற பாட்டுமுழங்கும்.—
(எ-று) வாரணம்-கோழி. (௯)

புள்ளுந்தண்புனற்கலிக்கும்பொய்கையுடைப் புடையெங்குந்
தள்ளுந்தாணடையசையத்தளையவிழ்பூங்குவளைமது. ....*
ள்ளுறங்கைக்குழந்கதிர்செந்நெல்மிலைச்சிய புன்புலைச்சியர்கள்..*
ரேண்டுகளிதூங்கக்கறங்குபறையுங்கலிக்கும் .... ....*

(இதன்பொருள்)

ட்சிகள் முழங்குகின்ற நீரையுடைய குளங்களின் இடமெல்
ம் அப்பறவைகளின்கால்கள்படுதலால் இதழ்களின் கட்டுவி
நீலோற்பலமலர்களிலிருந்து தேன்சிந்தும்கரியகூத்தவி
திர்களினை அலங்காரமாகத்தரித்த சிறிய உழத்தியர்கள்-
ளைக்குடித்து மயக்கங்கொள்ளப் பறையென்னும்வாத்திய
மு முழங்கும்.—(எ-று) (௰)

*

இப்படித்தாகியகடைஞரிருப்பின் வரைப்பினில் வாழ்வார் .*
மெய்ப்பரிவுசிவன்கழற்கீழ் விளைத்தவுணர்வொடும்வந்தார் ..*
அப்பதியிலூர்ப்புலைமையான்றொழிற்றுறையத்தா........*
ஒப்பிலவர்நந்தனாரெனவொருவருளரானார் ...........*

(இதன்பொருள்)

இத்தன்மையையுடைய தீண்டார்குலத்தில் அவதரித்து அவர்
களுடைய இருப்பிடத்தில் வாழ்கின்றவர்-பரமசிவனுடைய பா
தக்கே உண்மையான அன்பைச்செலுத்துகின்ற அறிவை
டையவர்-அவ்வூரின் வெட்டிமைத்தனமாகிய காணியாட்சி
யையுடையவர் ஒருவரும் ஒப்பில்லாதவர் இப்படிப்பட்ட நந்
தனென்று ஒருவரிருந்தார்.—(எ-று) (௰௧)

பிறந்துணர்வுதொடங்கியபின்பிறைக்கண்ணிப்பெருந்தகைபா
ற்சிறந்தபெருங்காதலினாற்செம்மைபுரிசிந்தையராய் .... *
மறந்துமயனினைவின்றிவருபிறப்பின்வழிவந்த .........*
அறம்புரிகொள்கையராயேயடித்தொண்டினெறிநின்றார் .. *

(இதன்பொருள்)

பிறந்து விவேகம்வந்தபின்பு சந்திரனைத்தரித்த பரமசிவனிட
த்தில்வைத்த மிகுந்த அன்பினால் நல்ல வழியில் நடக்கு மன

நினையுடையவராய் மறந்தும் வேறுநினைப்பு இல்லாமல் கவ
மிலையே தியானஞ்செய்துகொண்டு தமது குலாசாரத்து
கு ஏற்றபடிசெய்யவேண்டிய தர்மத்தைச்செய்யுந் தன்மை
யை உடையவராய் ஆண்டவருடைய பாதத்துக்கு விரும்புந்
தொண்டுசெய்வதில் சிறந்தவரானார்.—(எ-று) (௰௨)

ஊரில்விடும்பறைத்துடவையுணவுரிமையாக்கொண்டு .... *
சார்பில்வருந்தொழில்செய்வார்தலைநின்றார்தொண்டினால்..
கூரிலையமுக்குடுமிப்படையண்ணல்கோயிறோறும் .... ..
பேரிகையேமுதலாயமுகக்கருவிபிறவினுக்கும்.. ....

(இதன்பொருள்)

ஊரில் வெட்டிமைக்காக விட்டிருக்கும் மானியமாகிய நிலத்தி
ல் விளையுந் தானியத்தைத் தமக்கு உரிய உணவாகப்பெற்று
கொண்டு அவர்சார்பிற்குச்செய்யவேண்டியவேலையைநட
த தொண்டிற்சிறந்தவராய்க்கூர்மைபொருந்திய மூன்றுகவை
யிருக்கும் சூலாயுதத்தைத்தாங்கிய பரமசிவன் வீற்றிருக்கு
கோயில்களிலெல்லாம்பேரிவாத்தியமுதலாகிய * ஒருமுகக்க
ருவிக்கும்- மற்றைமத்தளமுதலாகியவிரண்டுமுகக்கருவிகளு
க்கும்.—(எ-று) (௰௩)

போர்வைத்தோல்விசிவாரென்றினையனவும்புகலுமிசை ....
நேர்வைத்தவீணைக்கும்யாழுக்குநிலைவகையிற்.... ......
சேர்வுற்றதந்திரியுந்தேவர்பிரானர்ச்சனைக்கு.... .... *
ஆர்வத்துடன்கோரோசனையுமிவையளித்துள்ளார் ...

(இதன்பொருள்)

போர்வையாயிருக்கிறதோலும்- கட்டுகிறதற்காகவேண்டிய
வாருமாகிய இப்படிப்பட்டவைகளும்- இசையைக்காட்டு
ம் நல்லவீணைக்கும் யாழ்வாத்தியத்துக்கும்அதற்கு ஏற்றவகை
யாகிய வேண்டிய நரம்புகளும்-தேவர்களுக்கு நாதராகிய ப
ரமசிவனது அர்ச்சனைக்குக் கோரோசனையும் - ஆசையோடு
கொடுக்கின்றவரானார்.—(எ-று) (௰௪)

இவ்வகையாற்றந்தொழிலினியன்றவெலாமெவ்விடத்துஞ்..*
செய்வனவுங்கோயில்களிற்றிருவாசற்புறநின்று .... .... *
மெய்விரவுபேரன்புமிகுதியினாலாடுதலும்.... ........... *
மெய்வியல்பிற்பாடுதலுமாய்நிகழ்வாரந்நாளில் ...... .... *

* ஒருமுகக்கருவி- ஒருபக்கத்திலே முழக்கப்படுவது.

(இதன்பொருள்)

இந்தப்பிரகாரம் தம்முடைய தொழிலால் நடந்தேறிய எல்லாவற்றையும் எல்லாக்கோயில்களுக்கும் கொடுத்தலும்- கோயில்களின் திருவாசலின்புறத்தில் நின்றுகொண்டு உண்மையாக அடைந்த உயர்ந்த அன்பின்மிகுதியால் ஆனந்தக்கூத்தாடுவதும்-அத்தன்மையாகவே சுவாமியைப்பாடுதலுமாகிய குணங்களைப்பொருந்தி வாழ்ந்துகொண்டிருந்தார் அந்தநாளில் ஒருநாள் —(எ-று) (௰௫)

திருப்புன்கூர்ச்சிவலோகன் சேவடிகண்மிகநினைந்து ...... *
விருப்பினொடுந்தம்பணிகள் வேண்டுவனசெய்வதற்கே .... *
யருத்தியினாலொருப்பட்டங்காதனூர்தனினின்றும் ..... *
வருத்தமுறுங்காதலினால் வந்தவ்வூர் மருங்கணைந்தார் ...... *

(இதன்பொருள்)

திருப்புன்கூரில் எழுந்தருளியிருக்கும் கைலாசபதியின் பாதங்களை மிகவும் நினைத்து அன்புடனே தாம் செய்யவேண்டிய திருப்பணிவிடைகளைச் செய்வதற்காக ஆசையோடு பிடிப்பாய் அந்த ஆதனூரிலிருந்து எப்போதுபோவோமென்றும் எண்ணம் வருந்த அந்தத்திருப்புன்கூருக்குவந்துசேர்ந்தார் (எ-று)

சீரேறுமிசைபாடித்திருத்தொண்டர் திருவாயி .... ...... *
னேரேகும்பிடவேண்டுமெனநினைந்தோர்க்குநேர்வார் .. *
காரேறுமெயிற்புன்கூர்க்கண்ணுதலார் திருமுன்பு .... ... *
போரேற்றைவிலங்கவருள்புரிந்தருளிப்புலப்படுத்தார் .... *

(இதன்பொருள்)

திருநாளைப்போவார்-சுவாமியின் சிறப்புற்ற கீர்த்தியைப்பாடித் திருவாசலில் நின்றுகொண்டு சுவாமியைநேராகவே தரிசித்துக் கும்பிடவேண்டுமென்று நினைத்தார்- அவர்க்கு அப்படியே அருள்செய்யவிரும்பி- மேகங்கள் தவழ்கின்ற மதிலையுடைய திருப்புன்கூரில் எழுந்தருளியிருக்கும் சுவாமி தமது சந்நிதிக்குமுன்னேயிருக்கின்ற வலிமைபொருந்திய நந்திகேசுரரை விலகும்படிசெய்து காட்சிகொடுத்தருளினார்.—(எ-று)

சிவலோகமுடையவர் தந்திருவாயின்முன்னின்று .... .... *
பவலோகங்கடப்பவர் தம்பணிவிட்டுப்பணிந்தெழுந்து ... *
சுவலோடுவாசலையப்போவார் பின்பொருளுமழ .... ... .... *
ல்வலோடுமெடுத்தது கண்டாதரித்துக்குளத்தொட்டார் .... *

(இதன்பொருள்)

சிவலோகத்தையுடைய பரமசிவனது ஆலயத்தின் திருவாசல் முன்னே நின்று பாவம்நிறைந்த இந்தலோகத்தினின்றும் நீங்கப்போகின்ற திருநாளைப்போவார்-தம்முடைய பணிவிடையைவிட்டு வணங்கியெழுந்திருந்து முதுகின்புறத்தில் வாரானது அலையும்படி போய்க்கொண்டிருப்பார்-பின்பு ஓரிடத்தில் ஒருபள்ளமிருப்பதைக்கண்டு ஆசையோடு குளமாகவெட்டினார்.—(எ-று) (௰௮)

வாடங்கொண்டபொன்னிதழிமணிமுடியார்திருவருளாற் ... *
றடங்கொண்டகுளத்தளவுசமைத்ததற்பின்றம்பெருமா .... *
னிடங்கொண்டகோயில்புறம்வலங்கொண்டுபணிந்தெழுந்து *
நடங்கொண்டுவிடைகொண்டுதம்பதியினண்ணினார் ..... *

(இதன்பொருள்.)

பொன்போலும்நிறமுள்ளகொன்றைப்புஷ்பங்களாற்கட்டப்பட்ட மாலையைத்தரித்த அழகியமுடியை உடைய பரமசிவன் அனுக்கிரகத்தினால் தாம்கண்டபள்ளத்தை விசாலமாகிய குளத்தினளவாகவெட்டி யேற்படுத்தினபின்பு தமக்குப் பிரானாகிய சுவாமியினது இடமகன்ற கோயிலைப்புறத்தில் வலங்கொண்டு வணங்கி யெழுந்து ஆனந்தத்தால் கூத்தினைச்செய்து உத்தரவுபெற்றுக்கொண்டு தம்முடைய ஊருக்குவந்தார். (எ-று) (௰௯)

இத்தன்மையிசார்மகிழ்பதிபலவுஞ்சென்றிறைஞ்சி .. .. .. *
மெய்த்ததிருத்தொண்டுசெய்துவிரவுவார்மிக்கெழுந்த .... *
சித்தமொழுந்திருத்தில்லைத்திருமன்றுள்சென்றிறைஞ்சி .... *
யுய்த்தபெருங்காதலுணர்வொழியாதுவந்துதிப்ப .... .. *

(இதன்பொருள்.)

இவ்வாறாகப்பரமசிவன் களிப்புற்றிருக்கும் பலஸ்தலங்களுக்கும்போய் வணங்கி-உண்மையான திருப்பணிவிடைகளை அங்கங்குசெய்து இனிச்சுவாமியை அடையப்போகிற திருநாளைப்போவார்-விரைவாயெழுந்த மனதோடு சிதம்பரத்தில் நடனசபைக்கும்போய் வணங்கும்படி தூண்டுகின்ற பெருமை பொருந்திய ஆசையோடுகூடிய விவேகமானது அடிக்கடி தோன்றிக்கொண்டிருப்ப—(எ-று) (௨௰)

அன்றிரவுகண்டுயிலார்புலர்ந்ததற்பினங்கெய்த ........ *
வொன்றியணைதருந்தன்மையுறுகுலத்தோடிசைவில்லை .. .. *

யென்றிரவுமெம்பெருமானையுலகப்போக்கொழிவார் .*
நன்றுமெழுங்காதன்மிகநாளைப்போவேனென்பார் .....*

(இதன்பொருள்.)

அன்று இராத்திரியில் நித்திரைகொள்ளாதவராய்ப் பொழுது விடிந்தபின்பு சிதம்பரத்துக்குப் போனால் கோயிலுக்குப் போகும்படியான யோக்கியதை நம்முடையசாதிக்குப்பொருந்தஇல்லையேயென்று விசனமுற்று இப்படிப்போகக்கூடாமையும்-எமது ஆண்டவருடைய திருவுள்ளத்தாலேயே என்று போகாமல்நின்றார்-பின்பு நன்றாயுண்டாகிய ஆசையானது தூண்ட - நாளைக்குப்போவேனென்று சொன்னா.—(எ-று)

நாளைப்போவேனென்றுநாள்கள்செலத்தரியாது ......*
பூளைப்பூவாம்பிறவிப்பிணிப்பொழியப்போவாராய் ....*
பாளைப்பூங்கமுகுடுத்தபழம்பதியினின்றுபோய் .....*
வாளைப்பாந்தெழும்பழனஞ்சூழ்தில்லைமருங்கணைந்தார் ..*

(இதன்பொருள்)

நாளைக்குப்போவேனென்றுசொல்லி அனேகநாள் ஒழியச்சபாநாதனைத் தரிசனம்பண்ணவேண்டுமென்னும் ஆசையை அடக்கக் கூடாதவராய்ப்பூளைப்பூவைப்பொருந்தநிலையாமையையுடைய பிறப்புகளால் உண்டாகிய சம்பந்தம் நீங்கும்பொருட்டுப் போகின்றவராய்ப் பாளையை உடைய பொலிவாகிய கமுகமரங்கள் சூழ்ந்திருக்கும் பழமையுற்ற தம்முடைய ஊரில் நின்றும்புறப்பட்டு ஆண் வாளைமீனானது எழும்பிவிளையாடும்வயல்களையுடைய சிதம்பரத்தின் எல்லையை அடைந்தார்.(எ-று)

செல்கின்றபோழ்தந்தத்திருவெல்லைபணிந்தெழுந்து. .....*
பல்குஞ்செந்தீவளர்த்தபயில்வேள்வியெழும்புகையு. ....*
மல்குபெருங்கிடையோதுமடங்கணெருங்கினவுங்கண் ....*
டல்குந்தங்குலநினைந்தேயஞ்சியணைந்திலர்நின்றார் .. ......*

(இதன்பொருள்)

திருநாளைப்போவார்- சிதம்பரத்துக்குப்போனபொழுது அந்தஎல்லையைக்கண்டு நமஸ்கரித்து எழுந்து விருத்தியாகச் செலுத்த அக்கினியைவளர்த்து ஆகுதிசெய்கின்ற யாகத்தால்உண்டாகிய புகையும்-மிகுந்த பிராமணப்பிள்ளைகளின்கூட்டம்வேதமோதுகின்ற அடிக்கடி நெருங்கியிருக்கு மடங்களையுங்கண்டு குறைவாகிய தம்முடைய குலத்தை நினைந்து பயந்து உள்ளேபோவதற்குப் பயந்துபோகாமல் நின்றுவிட்டார்.(எ-று)

நின்றவர்க்கெய்தரியபெருமையினைநினைப்பார்முன். .... *
சென்றெல்லையுங்கடந்தார்சூழெயிற்றிருவாயிலைப்புக்கார். ... *
குன்றனையமாளிகைகடொறுங்குலவும்வேதிகைக.......... *
ளொன்றியமூவாயிரமங்குளவென்பாராகுதிகள் .... .. .. *

(இதன்பொருள்)

எல்லையில் நின்றுகொண்டிருந்த திருநாளைப்போவார்-தாமு ள்ளே அடையக்கூடாத அககோயிலின் பெருமையை நினைப் பாராகி முதலில் அந்த எல்லையையுங்கடந்து ஊரைச்சுற்றியி ருக்கு மதிலின் திருவாசலை அடைந்தார்- அங்கே திண்ணைகள் பொருந்திய மலைகள்போலுயர்ந்த மூவாயிரம் வீடுகடோ றும் ஓமங்கள் செய்யப்படுகின்றனவென்று சொல்லிக்கொள் வார்.—(எ-று) சுவாமியைப்பூசிக்கின்றதில்லைமூவாயிரவருடை யவீடுகளோ மாளிகைகள் மூவாயிரமென்றார். வேதவிதிப்படி யாகுதிசெய்யும் பிராமணர்களுடைய வீதியில் தாம்போகக் கூடாதபடியால் அதைநினைந்து நடைபட்டவர்-அங்கு-ஆகுதி களுளவென்றார். (௨௪)

இப்பரிசாயிருக்கவெனக்கெய்தலரிதென்றஞ்சி .... .. .. *
யப்பதியின்மதிற்புறத்தினாராதபெருங்காத.... ........ *
லொப்பரிதாய்வளர்ந்தோங்கவுள்ளுருகிக்கைதொழுதே .. *
செப்பரியதிருவெல்லைவலங்கொண்டுசெல்கின்றார் .. .... *

(இதன்பொருள்.)

இந்தப்பிராமணர்களுடைய வீடுகள் இந்தன்மையாயிருக்க-என க்கு அவ்விடத்திற்குப்போகுத லரிதென்று பயந்து அந்த ஸ்தலத்தின் மதிலின்புறத்தில் அளவற்ற பேரன்பு சமானமில் லாமல் வளர-மனமுருகிக் கும்பிட்டுக்கொண்டு சொல்லுதற்க ரிய எல்லையை வலஞ்செய்துகொண்டு போவார்.—(எ-று)

இவ்வண்ணமிரவுபகல்வலஞ்செய்தக்கெய்தரிய.......... *
வவ்வண்ணநினைந்தழிந்தவடித்தொண்டரயர்வெய்தி .. ... *
மைவண்ணத்திருமிடற்றார்மன்றினடங்கும்பிடுவ.... .... *
தெவ்வண்ணமெனவெழுந்தேயேசறவினொடுந்துயில்வார். *

(இதன்பொருள்.)

இந்தப்பிரகாரம் இராப்பகலாக வலம்வந்துகொண்டு உள்ளே போகக்கூடாத தன்மையைநினைத்து வருத்தப்பட்ட உயர்வு பொருந்திய அடியவர் வேசரி-கரியநிறமுள்ள கழுத்தினையு டைய சுவாமி-கனகசபையில் ஆடுகின்ற கூத்தை எப்படித்தரி சிக்கலாமென்று விசனத்தோடும் நித்திரைசெய்வார்.(எ-று)

இன்னறுமிழிபிறவியிதுதடையென்றேதுயில்வா .... ..*
ரந்நிலைமையம்பலத்துளாடுவாரதிர்ந்தருளி .... .... ..*
மன்னுதிருத்தொண்டரவர்வருத்தமெலாந்தீர்ப்பதற்கு . . .*
முன்னணைந்துகனவின்கண்முறுவலொடுமருள்செய்வார் ..*

(இதன்பொருள்.)

துன்பத்துக்கு ஏதுவாகிய இந்த இழிந்த பிறப்பானது தடையாயிருக்கின்றதென்று நித்திரைசெய்தார்-அப்போது அவருடையமனதில் தோன்றியதோற்றத்தை யம்பலத்தில் நடனஞ்செய்கின்ற சபாநாதர் அறிந்து அந்த அடியவருடையவருத்தமெல்லாந்தீர்க்கும்படி சொப்பனத்தில் அவர்க்குமுன்னேவந்து புன்சிரிப்புடனேயருள்செய்கின்றார்.—(எ-று) (உஎ)

இப்பிறவிபோய்நீங்கவெரியினிடைநீமூழ்கி .... .... ..*
முப்புரிநூன்மார்பருடன்முன்னணைவாயெனமொழிந்து ..*
வப்பரிசேதில்லைவாழந்தணர்க்குமெரியமைக்க .... ....*
மெய்ப்பொருளானாருளியம்பலத்தேமேவினார். .... ..*

(இதன்பொருள்.)

மெய்ப்பொருளாயிருக்கின்ற கடவுள் இந்தப்பிறப்பு ஒழியும்படிநீ நெருப்பிலமூழ்கியெழுந்து முன்னூற்புரியாகிய பூணூலைத்தரித்த மார்பினையுடைய பிராமணர்களோடு நம்முடைய சபைக்குமுன்னேவருவாயென்று அருள்செய்து அந்தப்பிரகாரமே கனவில தில்லையில்வாழும் பிராமணர்களுக்கும் நெருப்பினைவளர்க்க-கட்டளையிட்டு அம்பலத்தில்எழுந்தருளினார். (எ-று) (உஅ)

தம்பெருமான்பணிகேட்டதவமறையோரெல்லாரு .... ..*
மம்பலவர்திருவாயின்முன்பச்சமுடனீண்டி. .... .......*
யெம்பெருமானருள்செய்தபணிசெய்வோமென்றேத்தி ..*
தம்பரிவுபெருகவருந்திருத்தொண்டர்பாற்சார்ந்தார் ....*

(இதன்பொருள்.)

தமது பிரானாகிய சபாநாதரிட்ட கட்டளையைக்கேட்ட தவம்பொருந்திய பிராமணர்களெல்லாரும் அம்பலவாணரது கோயித்திருவாசலின் முன்பு கூடிப்பயத்தோடு தம்முடைய ஆண்டவாருள்செய்த ஊழியத்தைச்செய்வோமென்று வணங்கி அன்புமேற்பட்டு இருக்கும் திருநாளைப்போவாரிடத்தில் அடைந்தார்கள்.—(எ-று) (உகூ)

ஐயரேயம்பலவரருளாலிப்பொழுதணைந்தோம் .... ....*
வெய்யவழலமைத்துமக்குத்தரவேண்டியெனவிளம்ப ....*
மையுமனத்திருத்தொண்டர்நாயுய்ந்தேனெனத்தொழுதார்*
தெய்வமறைமுனிவர்களுந்தியமைத்தபடிமொழிந்தார் ....*

(இதன் பொருள்.)

ஐயரோ நடேசருடைய கட்டளையால் இப்போதுவெவ்விதாகி ய அக்கினியைமூட்டி உமக்கு அதில் முழுகும்படி கொடுக்கவ ந்தோமென்றுசொல்ல-இளகியமனதையுடைய திருநாளைப் போவார் அடியேன் கடைத்தேறினேன் என்று அவர்களைத் தொழுதார்-தெய்விகமாகிய வேதத்தையுணர்ந்த பிராமணர் களும் தீவளர்த்தோமென்று சொன்னார்கள்.—(எ-று) (௩௰)

மறையவர்கண்மொழிந்ததற்பின்றென்றிசையின் மதிற்புறத்து
பிறையுரிஞ்சுந்திருவாயின்முன்னாகப்பிஞ்ஞகர்தம் .... ..[ப்
திறையருளான்மறையவர்களொருப்பமைத்தகுழியெய்தி ..*
யிறையவர்தாண்மனங்கொண்டேயெரிசூழவலங்கொண்டார்.

(இதன் பொருள்.)

அப்படிப் பிராமணர்கள் சொல்லினபின்பு தென்றிசையிலுள்ள மதிலின்புறத்திலே சந்திரனுனது தவழ்ந்துபோகும்படி உயர் ந்திருக்குந் திருக்கோபுரவாசலுக்குமுன்னே சுவாமியின் றிரு த்தகிருபையோடுகூடிய கட்டளையால் வளர்த்திருக்கின்ற நெரு ப்பின்குழியை அடைந்து நடேசருடைய திருப்பாதத்தை ம னதில்தியானித்து அக்கினியைச்சுற்றி வலமாகவந்தார். (எ-று)

கைதொழுதுநடமாடுங்கழலுன்னியழல்புக்கா ... ....*
மெய்தியவப்பொழுதின்கண்ணெரியின்கணிம்மாயப் ....*
பொய்தகையுமுருவொழித்துப் புண்ணியமாமுனிவடிவாய்.*
மெய்திகழ்முந்நூல்விளங்கவேணிமுடிகொண்டெழுந்தார்.*

(இதன் பொருள்)

கையினாற்கும்பிட்டு நடனஞ்செய்கின்ற நடேசரது திருப்பா தங்களை மனதில் உறுதியாகநினைத்து அக்கினியிற்புகுந்தார்-அ ப்படிச்செய்தபோது அந்தநெருப்பில் இந்த உலகசம்பந்த மாகிய நிலையில்லாதஉடலத்தையொழித்துப்புண்ணியஞ்செய் கின்ற பெருமைபொருந்திய பிராமணமுனியின்வடிவமாய்த் தேகத்தில் பூணூல்விளங்கச் சடைமுடியோடு எழுந்தார்.— (எ-று) (௩௧)

செந்தீமேலெழும்பொழுதுசெம்மலர்மேல்வந்தெழுந்த. *
வந்தணன்போற்றோன்றினாந்தரதுந்துபிநாதம்.... .... *
வந்தெழுந்ததிருவிசும்பில்வானவர்கண்மகிழ்ந்தார்த்துப் ...*
பைந்துணர்மந்தாரத்தின்பனிமலர்மாரிகள்பொழிந்தார் ..*

(இதன்பொருள்)

சிவந்த நெருப்பில்நின்று எழுந்தபொழுது செந்தாமரைப்பு ஷ்பத்தின்மேல் உதயமாயெழுந்த பிரமாபோல் பிரகாசித் தார்-பெருமைபொருந்திய ஆகாயத்தில் அந்தரதுந்துபியின் கோஷமானது உண்டாயிற்று-தேவர்கள் சந்தோஷமாய் ஆர வாரித்து அழகாயிருக்கின்ற கற்பகவிருட்சத்தின் குளிர்ச்சி பொருந்திய மலர்களை வருஷமாகச்சொரிந்தார்கள் — எ-று) பிரமனுக்கு இடம் பொற்றாமரையாயிருந்தாலும் சான்றோர் செய்யுள்களில் செந்தாமரையென்று சொல்லப்பட் டிருப்ப து பொன்னிறத்துக்குஞ் சிவப்புநிறம் வழங்குகின்றபடியா லென்க. செம்பொன் என-மாற்றுயர்விலும்வரும். (௩௩)

திருவுடையதில்லைவாழந்தணர்கள்கைதொழுதார் ........*
பரவரியதொண்டர்களும்பணிந்துமனங்களிப்பயின்றார் ....*
அருமறைசூழ்திருமன்றிலாடுகின்றகழல்வணங்க .... ....*
வருகின்றார்திருநாளைப்போவாராமறைமுனிவர் .. .... ...*

(இதன்பொருள்)

ஞானசம்பத்தையுடைய தில்லைவாழும் பிராமணர்கள் கைகூப் பினார்கள்-பரவுதற்கரிய பத்தரைச் சிவபத்தர்களும் தொழுது மனதில்களிப்படைந்தார்கள்-வேதங்கள் முழங்குகின்றகனகச பையில் ஆடுகின்றபாதத்தைவணங்கும்பொருட்டுத் திருநாளை ப்போவாராகிய ஒருவேதமுனிவர் வருகின்றார்.(எ-று) (௩௪)

தில்லைவாழந்தணருடன்செல்லச்சென்றெய்திக் .... ..*
கொல்லைமான்மறிக்கரத்தார்கோபுரத்தைத்தொழுதிறைஞ்சி*
யொல்லைபோயுட்புக்காருலகுய்யநடமாடு .... .... ..*
மெல்லையினைத்தலைப்பட்டாரியாவர்களுங்கண்டிலரால் ....*

(இதன்பொருள்)

திருநாளைப்போவார்-தம்முடனேகூடச்சிதம்பரத்தில்வாழ்கி ன்றபிராமணர்களும்வரப்போய்முல்லைநிலத்தில் இருக்கும் ஆ ண்மானைத்தரித்த கரத்தையுடைய சுவாமியினதுகோபுரத்தை ப்பணிந்து விரைவாகப்போய் உள்ளேபுகுந்தார்-உலகத்தார் ஈடேறும்பொருட்டு நர்த்தனம்பண்ணுகின்ற சபையை அடை.

த்தாச்சரியப்பட அவ்வாயாவரும் காணுதவர்களானார்கள் (எ-று) சுவாமியின்கையிலிருக்கு மான் தாருகாவனத்து ரிஷிகள் சிவ பிரானை வெல்லும்பொருட்டு அபிசார ஓமஞ்செய்து பிறப்பித் து அனுப்பப்பட்டதாயிருந்தாலும் அதன்சாதிக்கிடமாகியஇ டத்தை விசேஷணமாக்கிக் கொல்லைமான் மறிக்கரத்தாரெ ன்றார். (௯௫)

அந்தணர்களதிசயித்தாரருமுனிவர் துதிசெய்தார் ...... *
வந்தணைந்ததிருத்தொண்டர் தம்மைவினைமாசறுத்து ... *
சுந்தரத்தாமரைபுரையுந்துணையடிகடொழுதிருக்க ...... *
அந்தமில்லாவானந்தப்பெருங்கூத்தரருள்புரிந்தார் ....... *

(இதன்பொருள்)

மறையோர்கள் ஆச்சரியப்பட்டார்கள் - அரியமுனிவர்கள் ஸ் தோத்திரஞ்செய்தார்கள் - முடிவில்லாத ஆனந்ததாண்டவஞ் செய்தருளுகின்ற சபாநாதர் - தமதுகட்டளையால்வந்தடைந்த திருநாளைப்போவார்க்குத்தீவினையாகிய களங்கத்தை நீக்கி - அ ழகாகிய தாமரைமலரையொத்த இரண்டுபாதங்களையுந் தொ ழுதிருக்கும்படி அருள்செய்தார் —(எ-று) (௯௬)

மாசுடம்புவிடத்தீயின்மஞ்சனஞ்செய்தருளியெழுந் ...... *
தாசின்மறைமுனியாகியம்பலவர்தாளடைந்தார் ......... *
தேசுடையகழல்வாழ்த்தித்திருக்குறிப்புத்தொண்டர்வினைப் *
பாசமறமுயன்றவர்செய்திருத்தொண்டின்பரிசுரைப்பாம் ..*

(இதன்பொருள்)

தமக்குமுன்னிருந்த உடலமாகிய மாசுதீரும்பொருட்டு அக் கினியாகிய திருமஞ்சனமாடியெழுந்து குற்றமற்ற பிராமண முனிவராகி நடேசருடைய திருவடியையடைந்தவராகிய திரு நாளைப்போவாருடைய பதத்தைப்புகழ்ந்து தீவினையாகிய க யிறு அறும்படி முயன்ற திருக்குறிப்புத்தொண்டநாயனார் திரு த்தொண்டின் தன்மையைச் சொல்வோம் —(எ-று) (௯௰௭)

திருநாளைப்போவார்நாயனார்புராணம்-
முற்றிற்று.

———

ஆ திருவிருத்தம்-௯௮௰௨.





# திருக்குறிப்புத்தொண்டநாயனார் புராணம்.

ஐயமாறுபல்லுயிர்களுக்கெல்லையில்கருணைத் .... ..... .. *
தாயாருடனியாயினதலைவரைத்தழுவப் ... .... ..... .... *
பாயுநான்மறைபோற்றநின்றருந்தவம்புரியத் .... .... *
தூயமாதவஞ்செய்ததுதொண்டைநன்னாடு .... .... .. *

(இதன்பொருள்)

அனேகம் உயிர்களுக்கு ஒப்பற்றகிருபை உண்டாகவுலகமாதாவாகியபார்வதியார் பிரிந்திருந்தமையால் நாயகராகியபரமசிவனை அடையும்பொருட்டுப்பொருள் ஏற்பயாழுக்கும்படி ஆர்ந்திருக்கும் நான்குவேதங்களும்புகழ அருமையாகிய தவசுசெய்யப்பரிசுத்தமாகிய தவஞ்செய்திருப்பது தொண்டைநாடாம்.—(எ-று) (க)

நன்மைநீடியநடுநிலையொழுக்கத்துநயந்த ........ .... *
தன்மைமேவியதலைமைசாலபெருங்குடிதழைப்ப........ .. *
வன்மையோங்கெயில்வளம்பதிபயின்றதுவரம்பின் .... .. *
றொன்மைமேன்மையினிகழ்பெருந்தொண்டைநன்னாடு .. *

(இதன்பொருள்.)

நன்மைமிகுந்த நடுவுநிலைமையாய் ஒருகாரியத்தை நடத்துவதில் விருப்பத்தைக்கொண்ட தலைமையாகிய பெரியகுடிகள் விருத்தியடையவலிமைபொருந்தியமதிற்காவலையுடையவரம்பில்லாநகரங்களுக்கு இடமாயிருக்கின்றது-நெறியோடு பழமையும் மேன்மையுமாகிய இவைகளால்விளங்கும் தொண்டைநாடு.—(எ-று) (உ)

நற்றிறம்புரிபழையனூர்ச்சிறுத்தொண்டர்நவைவந் .... .. *
துற்றபோதுதம்முயிரையும்வணிகனுக்கொருகாற் .... .. *
சொற்றமெய்மையுந்தூக்கியச்சொலையேயாக்கப் .. .... *
பெற்றமேன்மையினிகழ்ந்ததுபெருந்தொண்டைநாடு .. *

(இதன்பொருள்.)

நற்செய்கைகளைச்செய்யும் பழையனூரில் வாசஞ்செய்துசுவாமிக்குத்தேவல்செய்கின்ற அடியவராகிய வேளாளர்கள்-ஒருஅபாயம்நேரிட்டபோதுதங்கள்சீவனையும் ஒருவர்த்தகனுக்

ரு ஒருநாந்தாங்கள்சொல்லியசத்தியவார்த்தையையும்ஆலோ
சித்து உயிரை உயர்வாகநினையாமல் அந்தச்சொல்லையேகாப்
பாற்றும்படி பழிக்குப்பழிகொடுத்த மேன்மையிற் சிறப்புள்
ளதாயிருக்கின்றது தொண்டைநாடு.—(வ-று) வணிகனுக்கு
ச் சொல்லியவார்த்தையின்பொருட்டு உயிரைக்கொடுத்ததாவ
து-ஒருவன்நாள்தோறும் பிறமங்கையரிடஞ்சென்றுநட்புற்றி
ருப்பதை அவன்மனைவி அறிந்து தடுத்துத் தன் வசமாகும்ப
டி வேண்டிய உபாயங்கள் சொல்லியுங் கேளாமலிருந்ததுமன்
றித் தன் எண்ணத்திற்கு இவள் ஓரிடையூறாயிருக்கின்றாளென்
று கொல்லவும் நினைத்து-ஒருநாள் அடுத்த ஊரில் நடக்கும் ஒ
ருசிறப்பைத் தன்மனைவிக்குக்காட்ட விருப்பமுள்ளவன்போ
ன்று கவடுசெய்து அழைத்துக்கொண்டுபோய் நடுக்காட்டிற்
கொன்றுவிட்டான்-மறுபிறப்பில் அவள் ஒருபிசாசானாள்-புரு
ஷன்செட்டியாகப்பிறந்தான். அவனிடத்திற்குச்சோதிடநூலு
ணர்ந்த ஒருவன்வந்து சாதகம்பார்த்து நீ வடதிசைநோக்கிச்
சென்றால் ஒருபேயால் இறப்பாய்-அதுதவறாது ஆயினும் நா
ன் மந்திர உருவேற்றியிருக்கும் இந்தவாளைக் கொடுக்கின்றே
ன் இது உன்னிடத்திலிருக்கையால் அந்தப்பேய் உன்னை
அணுகாது என்று கொடுத்துவிட்டுப்போயினான் - சிலநாட்
பொறுத்து அந்தச்செட்டி தன் ஊரிலிருந்து பழையனூரிலி
ருக்கும் வேளாளரிடத்துக்குத் தனவர்த்தகத்தைக் குறித்துப்
போகும்போது நீலியென்னும் அந்தப்பேய் முற்பிறப்பில்
செய்த பழிக்குப் பழிவாங்கும்பொருட்டு அவன்மனைவிபோ
ல் வேஷங்கொண்டு பின்றொடர வர்த்தகன்சிலகுறிகளால்பே
யென்றறிந்து கையிலிருக்குமந்திரவாளின் வலிமையினால் பய
ப்படாமல் அந்த ஊரிலுள்ள காராளர் கூட்டத்திற்சேர்ந்தனு
ம்-நீலி-அவர்களை நோக்கி எம்முறையவராகிய இவர்வெகுநாளாக
என்னொடுபேச்சுமின்றி விரோதப்பட்டிருக்கின்றார்-நானெ
வ்வளவுநிர்ப்படுத்து வேண்டிக்கொண்டாலும் எள்ளளவும் இ
ரக்கமற்றுவெறுப்புற்றார்-ஐயோ என்னபாவஞ்செய்தேன் நீ
திமான்களாகிய நீங்கள் அவருக்குள்ள கோபத்தைநீக்கி இம்
மண்டபத்திலுள்வீட்டில் அவரையும் என்னையும் போகவிடு
வீர்களாயின் சிலவார்த்தை யவரோடுபேசி நான் போகிறே
னென்றுசொன்னவுடனே செட்டி- இவளை யென்மனைவியாக
நினைக்கவேண்டாம்-ஒருவலியபேய் என்னைக்கொல்லவந்திருக்
கிறது என்றான் - அதற்கு நீலி - ஐயா- இவர் என் கணவரா

ன்பதை யுங்களுக்குத் தெரிவிக்கிறேனென்று தன் இடுப்பிலிருந்த மாயக்குழந்தையைக் கீழேவிட்டது - அது - யாவரிடத்தும் செல்லாமல் செட்டியினிடத்துக்குப்போய்மேல்விழுந்து விளையாடிற்று அப்போது வேளாளர்கள் செட்டியாரே நீர் ஏன் பொய்சொல்லுகிறீர் - உம்முடைய நாயகி இவ்வளவு துன்பமுறுகின்றபடியால் இவ்வுள்ளேபுகுந்து ஒரு வார்த்தைசொல்லி வாருமென்றவளேயழைத்த அவன்கையிலே வாளைப்பிடித்துக்கொண்டு சென்றுளக - நீ - இ - ஐயா - அத்திவ்விய நீங்கள் வாங்கிவைத்துக் கொள்ளாவிட்டால் நான் இறந்துபோவேனென்று கூவிற்று - அவர்கள் அம்மொழியை நிசமாகவெண்ணிக் கத்தியை வாங்கிக்கொண்டவுடனே வணிகன் பயந்து இந்த ஆயுதமிருக்கிறபடியாலேதான் நான் இதுவரைக்கும் பிழைத்திருக்கிறேன் - இல்லாவிட்டால் இந்த பயமன்வாயிற்பட்டுக்கொள்ளுமேயென - வேளாளர்கள் - நீர் ஒருவர்க்கொலைகையில் இறந்தால் நாங்கள் எழுபதின்மரும் உமக்காக உயிர்விடுகிறோமென்று தேற்றி உள்ளே அனுப்பினார்கள் - அங்ஙனம் புகுந்தவனைப் பொழுதிலேயே அந்தப்பேய்மங்கை வாளைக்கொண்டு விட்டு அவன் தாய்போல் வேஷங்கொண்டு வேளாளரை நோக்கி உங்களிடத்துக்கு வந்த என்மகனை என்ன செய்தீர்களென்று அழுது அலறிக் கேட்க - அவர்கள் செட்டியைக் கருவாளென்று வெகுநேரம் காத்திருந்தும் பயன் அடையாமையால் கிழவியின் துன்பத்தைப் பார்த்துப் பொறுக்கக்கூடாமையால் கதவைத் திறந்து பார்க்கும்போது அவனுடலம் துண்டாகக் கிழிக்கப்பட்டிறந்து கிடப்பக்கண்டு இந்த எழுபதுவேளாளரும் தாங்கள் சொன்னபடி பேச்சுத்தவறாமல் தீயிற்குதித்து உயிரைக்கொடுத்தார்கள் - என்பதாம். நீலியென்னும்பேய் வாசஞ்செய்த ஒருமரத்தை வெட்டும்படி கட்டளையிட்ட எழுபதின்மரு மறுபிறப்பில் எழுபது வேளாளராகவும், வெட்டினவன் ஒரு செட்டியாகவும் பிறந்தபடியால் இவர்களை அது பழிவாங்கிற்றென்றுஞ் சிலர் சொல்லுகின்றார்கள். (௬)

மாறுகொடுபழையனூர் நீலிசெய்த வஞ்சனையால்வணிக
னுயிரிழப்பத்தாங்கள் ........................ *
கூறியசொற்பிழையாது துணிந்துசெந்தீக்குழியி லெழு
பதின்மர்களு முழுகிக்கங்கை .................. *
யாறணிசெஞ்சடைத் திருவாலங்காட்டப்ப னண்டமுறநி
மிர்ந்தாடுமடியின்கீழ்மெய்ப் .................. *

# பெரியபுராணம்.

பேறுபெறும் வேளாளர் பெருமையெம்மாற் பிரித்தள
விட்டிவளவெனப் பேசலாமோ. என்பதனாலுமுணர்க.)

துஞ்சவருவாருந் தொழுவிப்பாரும் வழுவிப்போய் ....*
நெஞ்சம்புகுந்தென்னை நினைவிப்பாருமுனைநட்பாய். ....*
வஞ்சப்படுத்தொருத்திவாணாள் கொள்ளும்வகைகேட்டு.... ..*
அஞ்சும்பழையனூராலங் காட்டெம்மடிகளே. (என்றதிரு
ஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் தேவாரத்தாலும்.)

இன்னும்புகழ்நிற்கவோர்பழிக்காமற்றெழுபதின்மர் ...*
அன்னந்தழற்புக்கொளித்ததெல்லாஞ்சுருதப்பொருளா ...*
புன்னைப்புரிசைத்திருவாலங்காட்டிலுமாட்பதற்க .... ....*
மன்னுந்தமிழில்வகுத்ததன்றோ தொண்டமண்டலமே. (என்
பதனாலுமுணர்க.)

ஆனையாமடிநீறுகண்டடிச்சேரனென்னுஞ் .......... ..*
சேனைலாவுசீர்ச்சேரனார்திருமலைநாட்டு.... .... .... *
வாணிலாவுபூண்வணிகர்கண்மைத்துனக்கேண்மை ... ... *
பேணநீடியமுறையதுபெருந்தொண்டைநாடு.. .. .... *

(இதன்பொருள்.)

ஆடையைவெளுப்பதற்கு உழமண்மூட்டைகொண்டுபோகும் ஒருவண்ணானுடம்பில் அம்மண்கசிவுற்று வெண்மைநிறமுண்டாகக்கண்டு அதைச் சுவாமிகட்டளையிட்டிருக்குந்தலைமையான திருநீறு தரித்திருக்கிறதாகப் பாவனைகொண்டு அடியேன்சேரனென்றுஅந்தராஜகனைவணங்கினவராகியதேசமெங்கும் பரவினகீர்த்தியையுடையசேரமான்பெருமாள்நாயனார் அரசுசெய்துகொண்டிருந்தமலைநாட்டில் ஒளிவீசும் ஆபரணங்களையுடைய வணிகர்கள் மைத்துனராயிருக்கும் உறவைவிரும்புமுறைபாராட்டியது பெருமைபொருந்திய தொண்டைநாடு.— (எ-று) மலைநாட்டிலுள்ளவணிகர் தொண்டைநாட்டாரமைத்துனமுறைகொண்டதாவது - ஒருகாலத்தில் சேரநாட்டிலிருந்தவணிகஜாதியார் ஒருகலகநிமித்தம் தங்களிருப்பிடத்தில் நின்றும் வேறுதேசத்திற்குக் குடிவாங்கினார்கள் - அப்போதவர்கள்மரபில் ஒருபெண் தெறிபட்டுத் தொண்டமண்டலத்திலிருக்கும் வேளாளர்களிடத்தில்வந்து வளர்ந்துகொண்டிருந்தது பின்பு அந்தவணிகர் கலகம் ஒழிந்து தங்கள் ஊர்களுக்குவந்தவுடனே சிதறிப்போயிருந்த தங்கள்மரபினர் யாவரும்வந்தடைந்தார்களோவென்று கணக்கிட்டு நோக்கும்போது ஒரு

பெண் குறைந்திருக்கக்கண்டு - தேடிக் கண்டுபிடிக்கத் தேவ-
மென்றுநினைந்து - காஞ்சிமண்டலத்தில்வந்து அந்தப்பெண்ணை
க்கண்டு அழைத்துக்கொண்டுபோகும்படி வளர்த்தவர்
களைக்கேட்க அவர்கள் - நாங்கள் பெண்போல் வளர்த்துயா
தொருகுறையின்றிக்காத்தோம் - ஆதலினால் - நீங்கள் குறைவாகநி
னையாமல் உங்கள் சாதியிற்சிறந்த ஒருபிள்ளைக்குமணஞ்செய்
துகொடுக்கஒப்புவீர்களாயின் அனுப்புவோமென்றார்கள் - அ
தற்கு அவர்கள் சம்மதித்து அந்தப்படியேசெய்து தொண்
டைநாட்டாரைச் சம்பந்திமுறைகொண்டாடினார்கள் என்பதா
ம். (ச)

கொத்தலர்கோதை வியன்சேர மண்டலக்கொம்பைத்தம்
மைத்திருந்தாங்கவடன்கெளிற்தேடிவரவவர்க்கே ,,.. [பால்
யய்த்திரும்வார்க்கும்வரிசையுமாற்றியுடனுஞ்செலுறு .... *
மைத்துலகத்தண்மை படைத்ததன்றே தொண்ட மண்டல
மே. (என்பதனுலறிக,)

கறைவிளங்கியகண்டர்பாற்காதல்செய்முறைமை .... .. *
நிறைபுரிந்திடநேரிழையறம்புரிந்ததனால் . .. .. .. .. *
பிறையுரிஞ்சுசெயிற்பதிப்பெருந்தொண்டைநாடு. ,.... *
முறைமையாலெவ்வுலகினின்மிகுமொழியுடைத்தால் .. .. *

(இதன்பொருள்)

விசுத்திசேர்மறையானது விளங்குகின்ற கழுத்தையுடைய பரம
சிவனிடத்தில் நிறைவாக ஆசையுற்ற பார்வதிதேவியார் முறை
மையோடு முப்பத்திரண்டு தருமங்களையும் வளர்த்தபடியால்
சந்திரன் உராய்ந்துகொண்டுபோகின்ற மதிலையுடைய காஞ்சி
புரம்விளங்குதற்கிடமாகிய தொண்டைநாடு எல்லாநாடுகளைப்
பார்க்கிலும் முறைமையை உடையதாமென்று உலகத்தில் சிற
ந்த ஒருவார்த்தையை உடைத்தாயிருக்கின்றது.—(எ-று) (ரு)

தாவில்செம்மணியருவியாறிழிவனசாரல் .... ..... .... *
பூவில்வண்டினம்புறவருந்துயைபுறவம் .... .... .... *
மாவிநீள்கயல்வரம்பிழுவுகைப்பணமருதம் .... .... .... *
நீவிநித்திலம்பாத்தியருணக்குவநெய்தல்..... .... .... *

(இதன்பொருள்)

தொண்டைநாட்டிலுள்ள மலைகளின்சாரலிலிருந்து குற்றமற்
ற மாணிக்கமணிகளோடு அருவியாறுகள் இறங்குகின்றன - மு
ல்லைநிலத்தில் முல்லைமுதலாகிய மலர்களில வண்டுக்கூட்டங்க

(இதன்பொருள்)

மலையின்சார்பாகிய குறிஞ்சிநிலத்திலிருக்கும் சிறிய ஊரிலுள்ளோர்கள் தேன்வார்த்துப் பிசைந்த சிவப்பாகிய தினைமாவினை வந்தவர்கட்குக்கொடுப்பார்கள் - முல்லைநிலத்திலிருக்கும் நீண்ட இடையர்பாடிகள் பால்வார்த்துச்சமைத்தபுல்லரிசிச்சோற்றை யுடையனவாயிருக்கின்றன - வளர்ச்சி பொருந்திய நீர்த்துறையையுடைய மருதநிலத்தார்கள் பரிசுத்தமாகிய நெல்லரிசிச்சோறு - நெய் - கருப்பஞ்சாறு - பருப்புகளிவைகளையுடையனவாயிருக்கின்றன - சமுத்திரத்தினருகிலிருக்கின்ற நெய்தலநிலத்தார்கள் மிகுதியும் மீன்களையே யுணவாகவுடையன (எ-று) (௯)

குழல்செய்வண்டினங்குறிஞ்சியாழ்முரல்வனகுறிஞ்சி . . . . . *
முழவுகார்கொளமுல்லைகண்முகைப்பனமுல்லை . . . . . . . . *
மழலைமென்கிளிமருதமர்சேக்கையமருதம் . . . . . . . . . . . *
நிழல்செய்கைதைசூழ்நெய்தலங்கழியனநெய்தல் . . . . . . *

(இதன்பொருள்)

குறிஞ்சிநிலத்தில் குறத்தியர்களுடையகூந்தலிலிருக்கும் வண்டுகள் குறிஞ்சியாழினிசைபோல ஒலிசெய்கின்றன - முல்லைநிலத்தில் மேகங்கள்முழங்க முல்லைச்செடிகளரும்புவிடுகின்றன - மருதநிலத்தில் மழலைச்சொற்களையுடைய கிளிகள் மருதமரங்களைத் தாங்கள் இடமாகவுடையன - நெய்தலநிலங்கள் நிழல் கொடுக்கும்படி உயர்ந்ததாழைகள்சூழ்ந்தநெய்தல்மலர்கள்பூத்திருக்கும் கழியினையுடையன.— (எ-று) (௰)

மல்குமப்பெருநிலங்களில்வரைபுனைகுறிஞ்சி . . . . . . . . *
யெல்லையெங்கணுமிறவுளரேனன்முனைவிளைக்குரல் . . . . . . *
பல்பெரும்புனம்பயிலவனபடர்சிறைத்தோகை . . . . . . . . *
செல்லுமப்புனங்காப்பவுஞ்சுரிகுழற்றோகை . . . . . . . . *

(இதன்பொருள்.)

செழிப்பாகிய முன்சொல்லிய நால்வகைநிலங்களில் மலையைச்சார்ந்த குறிஞ்சிநிலத்தினுடைய இடங்களிலெல்லாம் குறவர்கள் தினைப்பயிரிடுகின்ற பல புனங்களிருக்கின்றன - அவைகளில் தழைத்த சிறிய தோகையையுடைய மயில்கள் சஞ்சரித்துக் கொண்டிருப்பன - சொல்லப்பட்ட அந்தத்தினைப் புனத்தைக் காக்கின்றவர்களும் சுருண்டிருக்கும் கூந்தலையுடைய மயில் போன்ற சாயலைப்பெற்ற குறமாதர்களாம்.—(எ-று) (௰௧)

அங்கண்வான்மிசையரம்பையர்கருங்குழற்சுரும்பு .. .....*
பொங்குபூண்முலைக்கொடிச்சியர்குழன்மூழ்கிப்போகாச் .. *
செங்கண்மாலவிடையார்திருக்காளத்தியென்று ........*
மங்குல்சூழ்வரைநிலவியவளத்தினான்மல்கும்.... .........*

(இதன்பொருள்)

அழகிய இடமகன்ற தெய்வலோகத்தில் வாழ்ந்திருக்கும் அரம்பைமுதலிய மாதர்களினுடைய கூந்தலிலுள்ள வண்டுகள்பிரகாசத்தைத் தருகின்ற ஆபரணத்தைத்தரித்த ஸ்தனங்களையுடைய குறத்திகளது கூந்தலில்விழுந்து வாசனைமிகுதியால் அவைகளை விட்டுப்போகாமலிருக்கும் சிவந்தகண்களையுடையவிஷ்ணுவாகிய ரிஷபத்தையுடைய பரமசிவனெழுந்திருக்கும் திருக்காளஹஸ்தியென்கிற மேகங்கள்மொய்க்கின்ற மலையானது நிறைந்த பலவளங்களால் பெருமையை யடையும்—(எ-று)

வேறுவேறுகுழிமையவரரம்பையர்பிறந்து ,..........*
மாறில்வேடருமாதருமாகவேவணங்கு .. .. ... ..........*
மாறுசூழ்சடையண்ணலார்திருவிடைச்சுரமுங் ...... ...*
கூறுமேன்மையின்மிக்கதந்நாட்டுவண்குறிஞ்சி .... ....*

(இதன்பொருள்)

வெவ்வேறுவகையாக எண்ணப்பட்டிருக்கின்ற தேவர்களும், தேவமாதர்களும், மாறுபாடில்லாத வேடர்களும் வேட்டுவச்சிகளுமாகப்பிறந்து வணங்குகின்ற கங்கைதங்கிய சடையை உடைய சுவாமியெழுந்திருக்கும் திருவிடைச்சுரமென்னும் ஸ்தலமும் பிரசித்தமாகச்சொல்லப்படும் மேன்மையிற் சிறந்திருக்கின்றது - அந்தத்தொண்டைநாட்டிலுள்ள வளம்பொருந்திய குறிஞ்சிநிலத்தில்—(எ-று) (௰௫)

அம்பொன்வார்குழற்கொடிச்சியருடனரமகளிர் .... ....*
வம்புலாமலர்ச்சுனைபடிந்தாடுநீள்வரைப்பி ............*
னும்பர்நாயகர்திருக்கழுக்குன்றமுற்றுடைத்தால் ... ....*
கொம்பர்வண்டுசூழ்குறிஞ்சிசெய்தவங்குறையுளதோ ....*

(இதன்பொருள்)

அழகாகிய பொன்னிறமுள்ள அசோகமுதலிய புஷ்பங்களைத் தரித்த நீண்டகூந்தலினையுடைய குறத்திகளோடு தேவஸ்திரீகள் வாசனைபொருந்திய மலர்களிருக்கும் சுனையிற்படிந்து மூழுகுகின்ற நீண்ட இடங்களையுடைய தேவர்களுக்கு நாயகரா

கிய சுவாமி யெழுந்தருளியிருக்கும் திருக்கழுக்குன்றத்தையும் பூங்கொம்புகளில வண்டுகள்மொய்க்கின்ற குறிஞ்சிநிலத்தை உடைத்தாயிருக்கின்றது-ஆதலால் அதுசெய்தவக்குறையுள்ளதென்று சொல்லலாமோ.—(எ-று) (௰௪)

கோலமுல்லைபுங்குறிஞ்சியு மடுத்தசில்லிடங்க.... ..... ..*
ணீலவாட்படைநீலிகோட்டங்களுநிரந்து...... ..... ..*
கால்வெளியிற்கடும்பகற்பொழுதினைப்பற்றி...... ..... *
பாலையுஞ்சொல்லாவனவுளபரன்முரம்பு.... .... ..... *

(இதன்பொருள்.)

அழகாகியமுல்லைநிலமும்-குறிஞ்சிநிலமும்- நீலநிறமுள்ள வாளாயுதத்தைக்கொண்டகாளியினது பலகோயில்களுண்டாயிருக்கைக்கிடங்களையுடைய மேடுகள் அடுத்த சில இடங்களையுடையனவாயிருத்தலால் வெளிற்காலத்தில் பகற்பொழுதில் மிகுந்த உஷ்ணமாயிருப்பதைப்பற்றிப்பாலைநிலமென்றுஞ்சொலப்படுகின்றன.—(எ-று) நீலிகோட்டம்-காளிகோயில்-முரம்பு-மேடு. (௰௫)

சொல்லுமெல்லையிற்புறத்தன் துணர்ச்சுரும்பலைக்கும் ... *
பல்பெரும்புனற்கானியாறிடையிடைபரந்து . ...... ..*
கொல்லைமெல்லிணர்க்குருந்தின்மேற்படர்ந்தபூம்பந்தர் ..*
முல்லைமென்புதன்முயலுகைத்தடங்குநீண்முல்லை .. .....*

(இதன்பொருள் )

வண்டுகள்முழங்கும் பூங்கொத்துகளை அலைத்துக்கொண்டுவரும் வெள்ளமாகிய நீரையுடைய எல்லையின்புறத்தில் ஓடுகின்றனவாகிய பலகாட்டாறுகள் கரைபுரண்டு ஊரினிடையிடையே பரவுதலால் மேடாயிருக்குங் கொல்லைகளில மிருதுவாகிய பூங்கொத்தினையுடைய குருந்தமரத்தின்மேற் படர்ந்தல் போர்த்படர்ந்திருக்கு முல்லைக்கொடிகளின் சிறியபுதரிலிருக்கும் முயல்கள் அந்தநீருக்குப்பயந்து எழும்பித் தன்னைக் காப்பாற்றிக்கொள்ளத்தக்க இடத்திற்சேரும் நீண்ட முல்லைநிலத்தில். (எ-று) (௰௬)

பிளவுகொண்டதன்மதிநுதற்பேதையரெயிற்றைக் ...... ..*
களவுகொண்டதுதளவெனக்கள்வலர்தூற்று ... ..... ..*
மளவுகண்டவர்குழனிறக்கனியுமக்களவைத் ........ .....*
தளவுகண்டெதிர்சிரிப்பனதமக்குமுண்டென்று ..... ....*

லக்கையினால் தோண்டிவார ஊறியவெள்ளநீரானது இரண்டு பக்கங்களிலுமுள்ள வாய்க்கால்களிலும் நிறைந்து எதிப்பள்ளமாகிய வயல்களின் நீர்மடையையுடைப்பதற்குக் காரணமாயிருக்கின்றது பாலாறு.—(எ-று) (உஉ)

றுளையவாகியநதிபரந்தகன்பணைமருங்கில் .... .... .. *
க்லைநெடும்புனனிறைந்துண்கரைப்பெருங்குளங்கள் .... *
புளையிருங்குடிமதகுவாய்திறந்திடப்புறம்போய் .... .. *
விளைஞரார்ப்பொலியெதிர்ப்பநீர்வழங்குவவியன்கால் .... *

(இதன்பொருள்.)

அப்படிப்பட்ட பாலாறானது பாயுதலால் விசாலமாகியவயல்களின் பக்கத்திலிருக்கிற பெரியகரைகளையுடைய குளங்களில் ஒலியையுடையதாயிருந்த நீர் நிறைந்து பெருமைபொருந்திய குடிகள் அனைவருக்குங் கட்டப்பட்ட மதகுகளின் வாயைத்திறக்கப் புறத்திற்போய் உழுகிறவர்கள் கூச்சலிடப் பெரியகால்கள் நீர் ஓடும்படியிருக்கின்றன.—(எ-று) (உஙு)

மாறில்வண்பகட்டேர்பல்நெருங்கிடவயல்கள் ....... .. *
சேறுசெய்பவர்செந்நெலின்வெண்முளைசிதறி ........... *
நாறுவார்ப்பவர்பறிப்பவர்நடுபவரான .... .......... .. *
வேறுபல்வினையுடைப்பெருஞ்சம்பலைமிகுமால் .... ..... *

(இதன்பொருள்.)

மாறுபாடில்லாத வளம்பொருந்திய எருமைக்கடாக்கள் பூட்டிய பல ஏர்களைக்கொண்டு நெருங்க வயல்களைச்சேறு செய்கிறவர்களும், சம்பாநெல்லின் வெண்மையாயிருக்கிற முளைகளை விதைத்து நாறாக வளர்ப்பவர்களும், அந்தநாற்றைப் பறிப்பவர்களும், நடுகிறவர்களுமாகிய இவர்களுடைய பலவகையான தொழில்களினால் ஒருபெரியமுழக்கமுண்டாயிருக்கும்.-(எ-று)

வரும்புனற்பெருங்கால்களைமறித்திடவானை .... .......... *
பெருங்குலைப்படவிலங்குவபிறங்குநீர்ப்பழனை ......... *
நெருங்குசேற்குலமுயர்த்துவநீள்கரைப்படுத்துச் ..... .. *
சுருங்கைநீர்வழக்கறுப்பனபருவராற்றொகுதி.......... *

(இதன்பொருள்)

நீர்வருகின்ற பெரியகால்வாய்களைக் குறுக்காக வாளைமீன்கள் அணைபோல் மறிக்க - அந்தநீர் ஓரத்திலிருக்கும் பெரிய க

காயல்வண்கரைப்புறத்தெறியடைப்பனகழிமுட் .. .. ..*
சேயதண்ணறுஞ்செழுமுகைசெறியுமுண்டகங்க .. ......*
ளாயநுண்மணல்வெண்டிடையைமறைப்பனவன்னந் .. ....*
தாயமுன்றுறைச்சூழல்சூழ்ஞாழலின்றூளி .. .. .......*

(இதன்பொருள்)

கழிகளின் வளமாகிய கரையின் சிறகுழியை முட்கள் நிறைந்த சிவந்த குளிர்ச்சியும் வாசனையுமுள்ள முதிருக புங்கலகளையுடைய தாமரைச்செடிகள் அடைக்கின்றன - அன்னந்தாவின்ற யாடும் துறையையுடைய நெய்தல்நிலத்திலிருக்குஞ்ஞாழற்பூக்களின் தாதுக்கள் கடற்கரையின் சிறியமணலகளின் வெண்மையைமறைக்கின்றன.—(எ-று) (௩)

வாம்பெருந்திரைவளர்சமன்குடிபயில்வரைப்பிற் .... ..*
றாம்பரப்பியகயல்களின்விழிகளப்பலதவிரக .. . ......*
காம்பினேர்வருந்தோளியர்கழிகயல்விலைசெய் .... ....*
தேம்பொதிந்தஇன்மழலைமென்மொழியசெவ்வழியாழ் .. *

(இதன்பொருள்.)

தாவிவீசுகின்ற பெரிய அலைகளையுடைய கடலின் அருகிடத்திலுள்ள நெய்தல்நிலத்தில செம்படவர் குடியிருக்கும் இடங்களில அவர்களாலபரப்பிக்காயப்போடப்பட டிருக்கும் மீன்களைடயீன்களால்-மூங்கிலையொத்த தோள்களையுடைய பெண்கள் தங்கள்கண்களுக்கு உண்டாகிய குறைவுநீங்கும்படி தங் கழிகயல்களை விலைகூறுகின்ற தேன்போல இனிப்பாகிய சிலமழலைச்சொற்களினிசைக்குவப்பச்செவ்வழியாழ்வாசிக்கப் படுகின்றன.—(எ-று) (௪)

மருட்கொடுந்தொழின்மன்னவனிறக்கியவரியை .... .. *
நெருக்கிமுன்திருவொற்றியூர்நீங்கவென்றெழுது .... ..*
மொருத்தர்தம்பெருங்கோயிலினொருபுறஞ்சூழ்ந்த ... *
திருப்பரப்பையுமுடையதத்திருக்கடல்வைப்பு .... *

(இதன்பொருள்.)

மயக்கமும் கொடுமையுமாகிய தொழிலையுடைய ஒரு அரசன் எல்லாக்கோயில்களுக்கும் படித்திட்டத்தைக்குறைப்பதனை ஆக்ஞாபித்து-திருவொற்றியூர் நீங்கலாகவென்று எழுதியருளிய பத்றபரமசிவன் வீற்றிருக்குங் கோயிலுக்கு ஒருபக்கத்திலே சூழ்ந்திருக்கும் பரிசுத்தமாகிய இடத்தையுமுடையது - மேற்.

சொல்லிய அலைகளையுடைய கடலின் அருகிடமாகிய நெய்தல்நிலம்.—(எ-று) (௩௯)

மெய்தரும்புகழ்த்திருமயிலாபுரிவரைசூழ் .... .. .. *
மொய்த்தயங்குதண்பொழிற்றிருவான்மியூர்முதலாப் .... *
பைதரும்பணியணிந்தவர்பதிபிறபலவால .... ....*
நெய்தனெய்தமுன்செய்தவந்நிறைதவஞ்சிறிதோ , .. .. *

(இதன்பொருள்)

மெய்ம்மையாகிய புகழையுடைய திருமயிலையும்-வாசனைபொருந்திய நெருங்கிய குளிர்ச்சிபொருந்திய சோலையையுடைய திருவான்மியூருமுதலாகப்பட்டவைகளையுடைய பாம்பினைத்தரித்த பரமசிவனார்வீற்றிருக்கும் மற்றைத்திருப்பதிகள் அனேகமிருக்கின்றன-நெய்தல்நிலமானது அலைகளோத தன்னிடத்திலுடைத்தாயிருக்க முன்செய்ததவங்குறைவானதோ.—(எ-று) மயிலாபுரி-மரூஉமுடிபு. (௪௰)

கோடுகொண்டெழுந்திரைக்கடற்பவளமென்கொழுந்து ...*
மாடுமொய்வலைச்சந்தனச்சினைமிசைவளரு .... ... .. *
நீடுநெய்தலுங்குறிஞ்சியுந்துணைநிலைப்பலவா .... .... *
லாடுநீள்கொடிமாடமாமல்லையேயனைய .... .... ....*

(இதன்பொருள்)

அலைகளையுடைய சமுத்திரத்தில் கொம்புகொம்பாய் எழுந்திருப்பியுள்ளமிருதுவாகிய பவளத்தினது கொழுந்துகள் பக்கத்தில் நெருக்கமுற்றவலைகளிலிருக்கும் சந்தனமரங்களின் கொம்புகளிலே வளரும்படி நீண்டநெய்தல்நிலமும்-குறிஞ்சிநிலமும்-இணையாக்கமாகப்புணர்ந்த நிலங்கள்பலவாம், அவை நீண்டகொடிகளாடுகின்ற மேல்வீடுகளையுடைய மல்லைநகரத்துக்கு ஒத்திருக்கின்றன.—(எ-று) மல்லை-மாவலிபுரம்-அது அலையையுடைத்தாய்க்கடற்கரையிலிருக்கின்றமையால- மல்லையேயனையவென்றார். (௪௧)

மலைவிழிப்பனவெனவயற்சேல்வரைப்பாறைத் .... ....*
தலையுகைப்பயுந்தனைக்கொறவிடைநெருங்கருமான் .... ..*
கலைகுதிப்பனகரும்பசட்டேடர்நிகர்ப்படுமா .... .......*
மலைபுனத்தணைகுறிஞ்சியோடணைவனவனேகம் .... ....*

(இதன்பொருள்.)

மருதநிலத்திலிருக்கின்ற சேல்கள் மலைகள் விழித்துக்கொண்டிருப்பதுபோல்தோன்ற-மலையின்பாறைகளில் தாவிவிழவும்

தனைகளாகச் தடுத்திருக்கும் வயல்களையுடையமருதநிலத்திற்க ரிய ஆண்மான்கூட்டங்கள் குதிப்பது அந்நிலத்திலுள்ள எரித் கட்டும் கரிய எருமைக்கடாக்களை யொப்பவுமாகிநீர் உலவுகின் ற வயல்களையுடைய மருதநிலம் குறிஞ்சிநிலத்தோடு மயங்கியி ருக்கின்றது- இப்படியமைகவிடங்களில். (எ-று) முல்லைநிலத்து க்குரிப்பொருளாகிய மானைக் குறிஞ்சிநிலத்ததாகச்சொல்லி யிருக்கின்றது. கருமானென்பலதப் பன்றியென்பாருமுளர்.

புணர்ந்தவானிலாப்புறவிடைக்குறுமுயல்பொருப்பி .... *
னணைந்தவான்மதிமுயலினையினமெனவணைந்து ..... ... *
மணங்கொள்கொல்லையில்வாகுபோர்மஞ்சனவரைக்கா .. *
ளிணைந்துமுல்லையுங்குறிஞ்சியுமகலப்பனைவங்கும் .... .. *

(இதன்பொருள்)

மாட்டுமந்தைகள் நெருங்கியிருக்கும் முல்லைநிலத்தில் தங்கிய சிறியமுயலானது குறுத்துமலையில உராய்ந்துபோகின்ற பெ ருமைபொருந்திய சந்திரனிடத்திலுள்ள முயலைத்தஞ்சாதியெ ன்றுசேர்ந்தும் வாசனைபொருந்தியமுல்லைநிலத்தில் இருக்கும் வாகுபோர்கள்கரிய நிறத்தையுடைய மேகங்கள்தவழும் மலைக ளையொத்தும் முல்லைநிலமும் குறிஞ்சிநிலமுங்கலந்திருப்பனஎவ் விடத்தும் — (எ-று) (சங)

கலருமீன்குவைகழியவர்கானவர்க்களித்துச் ..... ...... *
சிலைனுஞ்சேவலு மாறியுஞ்சிறுகழிச்சியர்க .... ...... .. *
ளவலபோனலுகொயிற்றியர்ப்பவளமுத்தளந்து ......... *
முலரிநெய்தலுங்கானமுங்கலந்துளவொழுக்கம் ......... *

(இதன்பொருள்)

நெய்தல்நிலத்திலுள்ளவர்கள் தாங்கள்பிடித்தமீன்குவியலைமு ல்லைநிலத்துவேடையார்களுக்குக்கொடுத்துககவுதாரியையுஞ்சே வல்களையுமபெற்றுக்கொணடும் சிறியநெய்தல்நிலப்பெண்கள் அவலாவிளாக்கும்-தினைக்கும்-இடைச்சிகளுக்குப் பவளத்தை யுமுத்தையும் அளந்தும் கடற்சார்பாகியநெய்தலும் முல்லைநில முமிணைமயக்கமாகியஒழுக்கத்தால்நெருங்கியுள்ளன (எ-று) இச்செய்யுளில்-கானவரைக குறிஞ்சிநிலத்தாரென்றும்- எயிற் றியரை வேடச்சிகளென்றும் உரைகூறின்-அகப்பொருளுக்கு மாறுபடுதலால்-இடையரிடைச்சிகளென்றும். (சச)

அயனறும்புறவினிலிடைச்சியரணிநடையும் . .... .... *
மயிலெதிர்ப்பிணையுமுத்தியர்சாயலுட்விரும்பி .. ...... .. *

பியலுமன்னருந்தோகையுமெழிலெதிர்பயில .... .....*
வயலுமுல்லையுமியல்வனபலவுளமருங்கு .... .... ... *

(இதன் பொருள்)

சமீபத்திலிருக்கும் வாசனைவீசு முல்லைநிலத்து இடைச்சியர்களுடைய அழகுற்றநடையையும் அகலமாய்நீண்டுள்ள வயல்சூழ்ந்த மருதநிலத்துமாதர்களுடைய உடலின்சாயலையும் இச்சித்து அழகுள்ள அன்னமும்-மயிலும் எதிரெதிராகச் சஞ்சரிக்க மருதநிலமும் முல்லைநிலமும் அடுத்திருக்கும் இடங்கள்பலவுண்டு தொண்டைநாட்டில் — (எ-று) (சரு)

பொருமோதமெங்கொழித்தவெண்டரளமுங்கமுகின். .. .. *
பாளையுஞ்சுவும்விரவலிற்பரத்தியர்பனைமென் .... .... *
றோளுமுத்தியர்மகளிர்மாமுடிமுன்றிறொகுக்கு .. .. .....*
நீருநெய்தலுமருதமுங்கலந்துளநிலங்கள் .... .... .. .. *

(இதன் பொருள்)

போய்த்திரும்பி வரும் அலைகள் கொழித்த வெண்மையாகிய முத்துக்களும்-கமுகம்பாளைகளும்பூக்களும்- ஒன்றாகக்கலந்து கிடக்கின்றபடியால் பரத்தியரும் மூங்கிலைப்போன்ற மெல்லியதோள்களையுடைய பள்ளச்சிகளும் இவைகள் தம்முத்துக்கள் என்றும்பாளைகள் என்றுந்தெரியாமலே கலக்கமிட்டுப் பிரித்துச்சேர்த்துக்கொள்ளுகின்ற நெய்தல்நிலமும் மருதநிலமுங்கலந்துள்ள நிலங்கள் இருக்கப்பெற்றவை —(எ-று) அம்-சாரியை. அங்கு ஒழித்தவெனினும்பொருந்தும். (சசு)

ஆபநாலிலத்தமைதியிற்றத்தமக்கடுத்த .. .... .... .. *
மெய்யசெய்தொழில்வேறுபல்குலங்களின்விளங்கித் ......*
தீயவெவ்வனைகனவிலுநினைவிலாச்சிந்தைத்... ...... .....*
தூயமாந்தர்வாழ்தொண்டைநாட்டியல்புசொல்வரைத்தோ*

(இதன் பொருள்.)

இப்படிப்பட்ட குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் என்கின்ற நால்வகைப் பட்டமைவு பொருந்திய நிலங்களில் வாசஞ்செய்து வெவ்வேறுதொழில்களைச்செய்கின்ற அனேகசாதிகளால் விளக்கமுற்றுத் தீமையாகிய காரியங்களைச்செய்யச் சொப்பனத்திலும் நினையாதமனதையுடைய பரிசுத்தமுள்ள மனிதர்களுக்கு இருப்பிடமாகிய தொண்டைநாட்டினுடைய சிறப்பைச்சொல்வதற்கு ஓர் அளவுள்ளதோ.—(எ-று) (சஎ)

இவ்வளந்தருபெருந்திருநாட்டிடையென்று .... .. .. ..*
மெய்வளந்தருசிறப்பினாலுலகெலாம்வியப்ப .... .. .. *
எவ்வுகங்களுமுள்ளதென்றியாவருமேத்துங் .. .. ... *
கைவிளங்கியநிலையதுகாஞ்சிமாநகரம் .... .. .... ..*

(இதன்பொருள்)

இப்படிப்பட்ட வளங்களையுடைய பெருமைபொருந்தியதொ
ண்டைநாட்டில் எப்பொழுதுங்குற்றமற்ற சிறப்புண்டாயிருந்
தலால் - உலகத்தாரெல்லாரும் சந்தோஷிப்பட எந்தயுகங்களி
லும் உள்ளதென்றுயாவரும்மெச்சுகின்ற ஒழுக்கத்தால் விளங்கு
ந்தன்மையை உடையதுகாஞ்சிநகரம்.—(எ-று) (௪௮)

ஆனதொன்மைகாரிகைதம்பெருமானை .... .. .......*
மானவர்ச்சனையாலொருகாலத்துவழிபட் .... .... .. *
டூனமில்லறமனைத்துமுலகுய்யவைத்த ... .... .... ..*
மேன்மைபூண்டவப்பெருமையையறிந்தவாவிளம்பில் ....*

(இதன்பொருள்.)

அப்படிப்பட்ட பழமையாகிய காஞ்சீபுரமானது பார்வதியா
ர் தமதுபிரானாகிய பரமசிவனைப் பெருமைபொருந்திய அரு
ச்சனையினால் முன்னொருகாலத்தில் வழிபாடுசெய்து குற்றமற்
ற அனைத்தருமங்களை உலகத்தார் பிழைக்கும்பொருட்டு வள
ர்த்த சிறப்பை உடைய அதன் பெருமையை அறிந்தபிரகாரஞ்
சொல்லப்புகுந்தால்.—(எ-று) (௪௯)

வெள்ளிமால்வரைக்கயிலையில்வீற்றிருந்தருளித் .... ....*
துள்ளுவார்புனல்வேணியாரருள்செயத்தொழுது .. ....*
தெள்ளுவாய்மையினாகமத்திறனெலாந்தெரிய ... .. ... *
வுள்ளவாறுகேட்டருளினாளுலகையாளுடையாள் .. .. ..*

(இதன்பொருள்.)

பெருமைபொருந்திய வெள்ளியங்கிரியில் வீற்றிருந்து ததும்
பி ஒழுகுந்தன்மையையுடைய கங்கையைத்தரித்த சடையின
னாகியசுவாமி - கிருபைசெய்யவணங்கித்தெளிந்துகடைத்தேறு
வதற்குக்காரணமாயிருக்கும் வாக்கியங்கள் அடங்கியுள்ளவலி
மையை உடைய ஆகமங்களெல்லாம் தெரியும்படி உள்ளபடி
கேட்டறிந்து கொண்டார் உலகத்தையாளுகின்ற பார்வதியா
ர்.—(எ-று) (௫௰)

எண்ணிலாகமமியம்பியவிறைவர்தாம்விரும்பு . . . . . . . *
முண்மையாவதுபூசனையெனவுரைத்தருள . . . . . . . . . . *
வண்ணலார்தமையர்ச்சனைபுரியவாதரித்தாள் . . . . . . . . . *
பெண்ணினல்லவளாயினபெருந்தவக்கொழுந்து . . . . . . . *

(இதன்பொருள்)

அளவில்லாத ஆகமங்களைத் திருவாய்மலர்ந்தருளியபரமசிவன் தாம் உண்மையாகப் பூசையையேவிரும்புவோமென்று சொல்லக்கேட்டுத் தெய்வத்தன்மையை உடையமாதர்களில் உயர்ந்தவளாகிய பெருமைபொருந்திய தவத்துக்குக் கொழுந்து போன்றுள்ள பார்வதியார் பரமசிவனையர்ச்சனைசெய்யவிரும்பினார்.—(எ-று) (௫௧)

நங்கையுண்ணிறைகாதலைநோக்கிநாயகன்றிருவுள்ளத்து மகிழ்ந்
தீந்த, பங்கணைப்புரியமுறைவழுந்தோதானறவித்ததென்கொளி
ன்பாலெலவ்வாவிலவ, விக்குமாதநீமொழிந்தவாகமத்தினியல்
பின்றுனையர்ச்சனைபுரியப், பொங்குகின்றதென்னுளத்தேயென்
றிறைஞ்சிப்போகமார்த்தபூண்முலையினள்போற்ற . . . . *

(இதன்பொருள்.)

பரமசிவன் தமது தேவியார் தம்மனதில்-பூசைபண்ணமிகுந்த ஆசைகொண்டிருக்கிறதை அறிந்து திருவுள்ளத்தில்விருப்பமுண்டாய் அழகுபொருந்துற தலையுண்டாகி உனக்கென்னவேண்டியதென்று கேட்க-இப்போது நாதனே நீர்கட்டளையிட்டவாகமத்தின்விதிப்படி உம்மை அர்ச்சனை செய்ய எனக்கு ஆசை மேன்மேலும் விர்த்தியாகின்றதென்று வணங்கிப் பார்வதியார் விண்ணப்பஞ்செய்ய.—(எ-று) போகமார்த்த பூண்முலையினள்-மேன்மையானபோகத்தை அடைந்த-அணிகலன்களையுடைய ஸ்தனங்களையுடையவளாம். (௫௨)

தேவதேவனுமதுதிருவுள்ளஞ்செய்துதென்றிசை மிக்கசெய்த
வத்தால், யாவருந்தனையடைவதுமண்மேலென்றுமுள்ளதுகா
ஞ்சிமற்றதனுள், மாவமர்ந்தநம்மிருக்கையிலணைந்துமன்னுபூ
சனைமகிழ்ந்துசெய்வாயென், றேயவெம்பெருமாட்டியும் பிரி
யாவிடைக்கொண்டெழுந்தருளுதற்கிசைந்தாள். . . . . . *

(இதன்பொருள்)

தேவர்களுக்கெல்லாம்நாயகராகிய பரமசிவனும் அம்மொழியைத் திருவுள்ளங்கொண்டு எற்றுத்தென்றிசையானது செய்து மிகுந்ததபோபலத்தால் எப்படிப்பட்டவர்களுந் தன்னை

மடையும்படி பெருமையுள்ளதும் பூலோகத்தில் என்றும் அழியாமலிருப்பதுமாயுள்ளதுகாஞ்சிபுரமாம் அதில் மாமரத்தின் கீழிருக்கும் நாமிடத்தே நீ வந்து நிலையான ஆராதனை தனைச் செய்யென்று கட்டளையிட எமது பிராட்டியார் பார்வதியாரும் பிரியக்கூடாமையினாலே வருத்தங்கொண்டு பின்பு எழுந்து போவதற்குச் சம்மதித்தார்.— (எ-று) (ருக)

ஏதமில்பலயோனியெண்பத்துநான்குநூறாயிரந்தனுள்ளவைத்த பேதமும்புரந்தருளுமக்கருணைப்பிராட்டியாயிற்றவாகமமுறை பேணப், போதுநீர்மையிற்றொழுதனள்போதப்பொருப்பி ல்வேந்தனும்விருப்பில்வந்தெதிர்ந்து, மாதவம்புரிந்தருளுதற்க மைந்தவளத்தொடும்பரிசனங்களைவிடுத்தான் .. .. .... *

(இதன் பொருள்.)

பார்வதிதேவி குற்றமற்ற எண்பத்துநான்குநூறாயிர யோனி பேதங்களையுங்காப்பாற்றுகின்றகருணையையுடையபடியால் சிவன் அருளிச்செய்தஆகமமார்க்கத்தின்படி நடக்க விரும்பிப் போகவேண்டுமென்றுமனதோடு தொழுதுபுறப்பட இமவத்பர்வதராசனும் விருப்பத்தோடு வந்தடைந்து மகத்தான தவத்தைச் செய்கிறதற்கு அமைந்தவளத்துடனே பரிசனங்களை அனுப்புவித்தான்.—(எ-று) (ருஉ)

துன்றுபல்லுயிர்வானவர்முதலாச்சூழ்ந்துடன்செலக்காஞ்சியிலணைபத், தன்னைநேர்வரும்பதுமநாகத்தீயப்பிராட்டிதாளடலைமிசைவைத்தே, யன்னையாயுலகனைத்தையுமீன்ற பாடியானே இறைபில்மதனிடையே, மன்னுகோயில்கொண்டருளவேயன் னையலைமடந்தைமற்றதற்கருள்புரிந்து .... .... .... *

(இதன் பொருள்)

பார்வதிதேவியார்-தேவர்கள் முதலாகச்சொல்லப்பட்ட பலவகைப்பட்ட சீவராசிகளும், நாற்புறமுஞ் சூழ்ந்துவரக் காஞ்சிபுரத்துக்குவந்தவுடனே தனக்குத்தானே ஒப்பாயிருக்கின்ற அஷ்டமாநாகத்தில் ஒன்றாகிய பதுமமென்னும் பாம்பு அம்மையின் திருவடிகளைச் சிரசில் வைத்துக்கொண்டு தாயாகி எல்லாவுலகத்தையும் பெற்ற தலைவியே அடியேமும் வாசஞ்செய்கின்ற பிலத்தினிடத்திலேயே ஸ்தானமாகவிற்றிருக்கவேண்டுமென்று பிரார்த்திக்க-அதற்குச் சம்மதித்தருள்செய்து.(எ-று)
பிலம்-பூமியிலுள்ளமுழை. (ருங)

அங்குமன்னுலகத்துயிர்தழைப்பவளவிலின்பத்தினருட்கருவி ருந்தித், திங்கடங்கியபுரிசடையார்க்குத்திருந்துபூசனைவிரும்பி

உலாவுகின்ற கற்றையாயுள்ள கூந்தலையுடைய பார்வதியார் தாமும்படிவணங்கிக்-காணவேண்டுமென்று மூன்உண்டாயிருக்கும் ஆசை அதிகமாகத் தாங்குறித்திருந்த பூசையைச்செய்யவேண்டுமென்றுள்ள ஆசைக்கு ஒரு அளவில்லாமல் கொவ்வைப்பழம்போன்றவாயுள்ள அம்மை பரிசுத்தமாகிய அர்ச்சனைசெய்ய விரும்புவார்.—(எ-று) (௩௮)

உம்பர்நாயகர்பூசனைக்கவர்தாமுரைத்தவாகமத் துண்மையே
தலைநின், றெம்பிராட்டியர்ச்சனைபுரிவதனுக்கியல்பில வாழ்தி
ருச்சேடியரான, கொம்பனார்கள்பூம்பிடகைகொண்டணைக்
குலவுமென்றளிரடியிணையொதுங்கி, யம்பிகாவனமாந்திருவ
னத்திலானதூநறும்பூமலர்கொய்தாள் .. .. ... .... .. *

(இதன்பொருள்)

தேவர்களுக்குநாயகராகிய பரமசிவனுரைப் பூசைசெய்வதற்காக அவராருளிச்செய்த ஆகமத்திலிருக்கும் உண்மையாகிய விதிகளையே தலைமையாகவெண்ணி எமக்குத்தாயாராகியபார்வதி அர்ச்சனைபண்ணுதற்குத்தொண்டுசெய்யுந் தன்மையையுடைய கொம்புபோன்றபாங்கிமார்கள் புஷ்பக்குடலையை எடுத்துக்கொண்டுவரப் பிரகாசிக்கின்ற மேன்மையாகிய தளிர்போன்ற பாதங்களால் சிறுகற்களுக்கு ஒதுங்கிநடந்து அம்பிகாவனமென்கிற அழகாகியவனத்திலே மலர்ந்திருக்கும்பரிசுத்தமாகிய மலர்களைக்கொய்தாள்.— எ-று) (௩௯)

கொய்துபன்மலர்கம்பைமாநதியிற் குலவுமஞ்சனநிலவுமெய
ப்பூச்சு, நெய்தருங்கொழுந்தூபதீபங்கணிறைந்தசிந்தையினி
டியவன்பின்; மெய்தரும்படி வேண்டினவெல்லாம் வேண்டு
போதினிலுதவமெய்ப்பூசை, யெய்தவாகமவிதியெலாஞ் செ
ய்தாளுயிர்கள்யாவையுமீன்றவெம்பிராட்டி .... ..... ..*

(இதன்பொருள்.)

பலமலர்களைப்பறித்துத் திருமஞ்சனமாகக் கம்பையாற்றினீரையுந்திருமேனியில்தரிக்கும் பிரகாசமுள்ளசந்தனத்தையும், நெய்வார்த்தேற்றுந்தீபங்களையும்; நெருங்கியபரிமளப்புகையை உடைய தூபங்களையும், களிப்பினால் நிறைந்தமனதில் நிலைபெற்றஅன்போடுமெற்றும்உண்மையாகவேண்டியபூசாதிரவியங்களையெல்லாம் வேண்டுங்காலங்களில் பரிசனங்கள் உதவ ஆகமவிதிப்படி மெய்மையான வழிபாடாகச்செய்யவேண்டியவெல்

லாஞ்செய்தார் - எல்லாவுயிர்களையுமீன்ற எமது தாயாராகிய பார்வதிதேவி.—(எ-று) (௬௰)

காத்தரும்பயனீதெனவுணர்ந்துகம்பமேவியவும்பர் நாயக ரீபா, விரந்தகாதல்செயுள்ளத்தளாகிநீடுநன்மைகளியாவையு ம்பெருக, வரந்தரும்பொருளாயவவ்வளி மாதிலாவகைமலரி ந்தநம்பரன்பாற், சிரப்பணிந்தெழுபூசைநாடோறுந் திருவுளங் கொளப்பெருகியதன்றே .... .... .. .. .. .....*

(இதன்பொருள்)

இப்படிப்பூசைசெய்வது கைபெற்றதேயென்று அறிந்து ஏக ம்பத்தில்வீற்றிருக்கும் தேவாதிதேவராகிய பரமசிவனிடத்தி ல் ஆசைகொண்டமனத்தையுடையவராய்ச்சிறந்தநன்மைகள்யா வுமுண்டாக யாவர்க்கும் வரத்தைக்கொடுக்கும் மலையரையன் மகளாராகிய பார்வதியார் மாறுபாடில்லாமல்விளங்கிய பெரு மைபொருந்திய அன்பினால் தலையிற்சேல வணங்கிச்செய்கின்ற பூசை எந்நாளும் செய்யும்படி விருத்தியாயிற்று.(எ-று)(௬௧)

நாசரும்பெருவிருப்பொடுநயந்து நங்கையர்ச்சனைசெய்யும ப்பொழுதில், அங்கவர்க்கம்வார்திருவிளையாட்டினக்குழை க்கருள் புரிந்திடவேண்டி, யோதமார்கடலேழுமொன்றாகி யோங்கிவானமுமுட்படப்பரந்து, மீதுசெல்வது போல்வரக் கம்பைவெள்ளமாந்திருவுள்ளமுஞ்செய்தார் .... .. .....*

(இதன்பொருள்)

சுவாமியும் மிகுந்த ஆசையோடுநயந்து-பார்வதியார் தம்மை ப்பூசைசெய்யும்பொழுதில் அவர்க்கு அருள்செய்யவிரும்பி நடங்கொண்டருளிய ஓர்திருவிளையாட்டாக வெள்ளம்நிறை ந்த ஏழுசமுத்திரமும் ஒன்றாகித் தேவலோகமுங் கீழாகும்ப டி எழும்பிப்பரந்து மேல்வருவதுபோலக் கம்பையாற்றில் வெள்ளம்வரும்படி நினைந்தருளினார்.—(எ-று) (௬௨)

அண்ணலாரருள்வெள்ளத்தைநோக்கியங்கயற்கண்ணி தம்பெ ருமான்மேல், விண்ணெலாங்கொளவரும் பெருவெள்ளமீது வந்துறுமெனவெருக்கொண்டே, யுண்ணிலாவிய பதைப்புறு காதலுடன்றிருக்கையாற்றடுக்கநிலாமை, தண்ணிலாமலர்வே ணியினாரைத்தழுவிக்கொண்டனள் தன்னையேயொப்பாள் .. *

(இதன்பொருள்)

கைலாசபதியின் கட்டளையால்வருகின்ற வெள்ளத்தை அழகிய

மீன்போன்ற கண்களையுடைய ஒப்பற்ற பார்வதியார்பார்த்து
ஆசையமுழுதும் கொள்ளும்படிவருகிற இந்தப் பெரியபிரவாக
மானது தம்முடைய ஆண்டவனுக்கு மேலும் வருமென்றுபயந்து
மனதில்நின்றும் பயைத்தெழும்புகின்ற ஆசையோடு திருக்
கைகளால் வரவொட்டாமல் மறிக்க - அதுநில்லாமையைக்கண்
டு குளிர்ச்சிபொருந்திய சந்திரனைவிளங்கும் சடையை உடைய
சுவாமியை தழுவிக்கொண்டார். — (எ - று) (௬௩)

மலைக்குலக்கொடிபரிவுறுபயத்தால்மாவின்மேவியதேவர் நா
யகனை, முலைக்குவட்டொடுவளைக்கையா லெருக்கிமுறுகுகாத
லாலிறுகிடத்தழுவச், சிலைத்தனித்திருநுதலிருமுலைகளுஞ்செந்
தளிர்க்கரங்களுக்குமெத்தெனவே, கொலைக்களிற்றுரிபுனைந்த
தம்மேனிகுழைந்துகாட்டினார் விழைந்தகொள்கையினார் .. *

(இதன்பொருள்)

பார்வதிதேவி சுவாமியின்திருமேனிக்கு அபாயம்வருமென்கி
ற துன்பத்தோடு பயமும் உண்டாகி ஆண்டவனைச்சிகரம்போ
ன்ற ஸ்தனங்களாலும், வளையலையணிந்த கைகளாலும் நெருக்
கி அதிகஆசையால இறுகத்தழுவும்போது தேவியினுடைய
அழகிய கொங்கைகளுக்கும் சிவந்த தளிர்போன்றகைகளுக்கு
மெத்தென்று - கொலைசெய்யும்வல்லமையை உடைய ஆனையின்
தோலைப்போர்த்த தம்முடைய திருமேனியைக் குழையும்படி
செய்தார் விருப்பங்கொண்டசுவாமி. — (எ - று) (௬௪)

கம்பர்காதலிதழுவமெய்குழையக்கண்டுநிற்பவுஞ் சரிப்பவுமா
ன, வும்பரோமுதல் யோனிகளெல்லாமுயிருமாக்கையுமுருகி
யொன்றாகி, யெம்பிராட்டிக்குமெய்யாணையொன்றுமேகம்
பரொன்றெடுத்தேத்த, வம்புலாமலர்நிறையவிண்பொழியக
ம்பையாறுமுன்வணங்கியதன்றே .. .. .. .... .. .. *

(இதன்பொருள்.)

ஏகம்பர் தமதுமனைவியார் தழுவுதலால் திருமேனிகுழையப்
பார்த்துச் சரமும் அசரமுமாகிய தேவர்கள்முதல் எழுவகைப்
பட்டஜீவராசிகளும் - உடலும் உயிரும் உருகி ஒருதன்மைப்
பட்டுச் சுவாமியைய து தாயராகியபார்வதிதேவியார்க்குமென்
மையானதேகத்தை உடையவராகுமென்றுஸ்தோத்திரஞ்செய்
யவும் - வாசனைபொருந்திய மலர்கள் ஆகாயத்திலிருந்து நி
றையும்படிபொழியவும் - கம்பையின்வெள்ளமானது சுவாமியி
ன்திருவடி அளவும்வந்துவணங்கி அடங்கிவிட்டது. — (எ - று)

பூதியாகியபுனிதநீறாடிப் பொங்குகங்கைதோய்முடிச் சடைபு
னைந்து, காதில்வெண்குழைகண்டிகைதாழக்கலந்தயோகத்தின்
மருவியகருத்தா, லாதிதேவனாராயுமாதவஞ்செ டவ்வாங்கொ
ள்ளவகிலமீன்றளித்த, மாதுமெய்ப்பயன்கொடுப்பவேகொ
ண்டவளைத்தழும்புடன்முலைச்சுவடணிந்தார் .. ... .. .. *

(இதன்பொருள்.)

மேன்மைபொருந்திய கடவுளாயிருந்தும் பரிசுத்தமாகியவிபூ
தியை உத்தூளனமாகத்தரித்துப்பொங்குகின்ற கங்கை தங்கு
ம்படியானமுடியில சடைகளைப் புனைந்துகொண்டு திருச்செ
விகளில் வெண்மைபொருந்திய குழைகளும் - கண்டிகையும்
தாழும்படியிருந்து யோகம்பொருந்திய கருத்துக்கொண்டு
செய்த தவத்தின்பயனுமேலதாமே - உலகத்தையெல்லாம்பெற்
று இரட்சித்தபார்வதிதேவிதேகஸ்பரிசமுண்டாகப்பெற்றுவ
ளையின்தழும்போடு ஸ்தனங்கள்பதிந்த குறியையுங் கொண்ட
ருளினார்.—(எ-று) (௬௬)

கோதிலாவமுதனையவண்முலைக்குக்குழைந்ததம் மணவாளநற்
கோல, மாதுவாழவே காட்டிமுனின்று வரங்கள்வேண்டுவ
கொள்கவென்றருள, வேதகாரணராயவேகம்பர் விரைமலர்ச்
செய்யதாமரைக்கழற்கீ, ழேதநீங்கியபூசனைமுடிந்ததின்மை
தானறிவிப்பதற்கிறைஞ்சி. .. .. .. .. .... .... *

(இதன்பொருள்)

குற்றமற்ற அமிர்தத்தையொத்ததேவியினது ஸ்தனங்களுக்குக்
குழைவுற்ற தமது நன்மைபொருந்திய தம்மணவாளக்கோல
த்தை - பார்வதியார் தரிசனஞ்செய்யக் காண்பித்து முன்னேநி
ன்று நீ வேண்டியவரங்களைக் கேட்டுக்கொள்ளென்று அருளிச்
செய்ய அம்மை வேதங்களுக்குக்காரணராயிருக்கின்ற ஏகாம்
பரநாதரது வாசனைபொருந்திய சிவந்ததாமரை மலர்போன்
ற பாதத்துக்குக்கீழ் குற்றமறச்செய்யும் பூசையானது முடி
யாமலிருப்பதை அறிவிக்கும்படியாகவணங்கி.(எ-று) (௬௭)

அண்டர்நாயகரெதிர்நின்றுகூறுமளவிலஞ்சியஞ்சலிகூப்பி
க், கொண்டவிந்நெறியின்பூசனையின்றுங்குறைநிரம்பிடக் கொ
ள்கவென்றருள, வண்டுவார்குழல் மலைமகள்கமலவதனநோக்
கியமலர்கணெற்றியின்மேன், மூண்டநீற்றர்நின் பூசனையென்
றும்முடிவதில்லைநம்பாலெனமொழிய. .. .. .. ... .... *

(இதன்பொருள்)

தேவர்களுக்கு நாயகராகிய கைலாசபதி எதிரேநின்று கட்டளையிட்ட அளவில் வண்டுகள்சூழ்ந்த நீண்ட கூந்தலையுடைய பார்வதியார் பயத்தோடு அஞ்சலிகூப்பி அடியேன்செய்ய யத்தனித்த பூசையின்குறையை நிறைவடையும்படி யருள்செய்யவேண்டுமென்றுசொல்லத் தேவியார்முகத்தைப்பார்த்தருளிக் கைவிளங்கும் நெற்றியின்மேல்விழியின் உத்தாளத்தையுடைய சுவாமி-நம்மிடத்திற்செய்யும் உன்னுடையபூசை முடிகிறதில்லையென்றுசொல்ல.— (எ-று) (௬௮)

மாறிலாதவிப் பூசனையென்று மன்னவெம்பிரான் மகிழ்ந்து கொண்டருளி, யீறிலாதவிப்பதியினுள்ளெலா வறமும் யாவுஞ் செயவருள்செயவேண்டும், வேறுசெய்வினை திருவடிப்பிழைத்தலெ லிங்குளார்வேண்டினசெயினும், பேறுமாதவப் பயன் கொடுத்தருளப் பெறவும்வேண்டுமென் றனள்பிறப் பொழிப்பாள் .. ... .. .... .. .. .... .... ..❋

(இதன்பொருள்)

மாறிப்போகாமல் இந்தப் பூசையையென்றுஞ் செய்யும்படி எமதுபிரானே திருவுள்ளங்கொண்டருளி நாசமில்லாத இந்த ஸ்தலத்தில்எல்லாத்தருமங்களையும்அடியேன் செய்யக்கிருபை செய்யவேண்டும். தேவரீர் திருவடிகளுக்குச்செய்யுங் குற்றம் நீங்கலாக இந்தநகரத்திலுள்ளோர்கள் தங்கள் மனதின்படி வேண்டிய தீவினைகளைச்செய்தாலும் மகத்தாகிய தவஞ்செய்தலால்-பெறவேண்டியபயனை அவர்களுக்கு அனுக்கிரகஞ்செய்யவேண்டுமென்றார் பிறப்பொழிந்த பார்வதிதேவி. (எ-று)

விடையின்மேலவர்மலைமகள்வேண்டவிருப்புபூசனை மேவிவீற்றிருந்தே, யிடையறாவறமாக்கும்வித்தாகவிகபரத்திருநாழி நெல்லளித்துக, கடையராகியுமுயர்ந்தவராகியுங்காஞ்சிவாழ்பவர்தாஞ்செய்தீவினையுந், தடைபடாதுமெய்நெறியடைவதற் காந்தவங்களாகவுமுவந்தருள்செய்தார் .... .... ....❋

(இதன்பொருள்.)

விருஷபவாகனத்தின்மேற்கொண்ட பரமசிவன் - பார்வதியார் வேண்டிக்கொண்டு பூசைசெய்ய விரும்பினபடியால் அங்கீகரித்து ஏகம்பத்தில்வீற்றிருந்து இடைவிடாமல் இவ்வுலகத்துக்கும்பரலோகத்திற்கும்பயனானதருமத்தைவளர்க்கும்பொ

ருட்டு இருநாழிகைல் அருளிச்செய்து-கீழ்சாதியாராகியும். உயர்ந்தசாதியாராகியும், காஞ்சீநகரத்தில் வாழ்கின்றவர்கள் செய்தபாவங்களும்-தடையில்லாமல் மெய்மையாகிய மோட்சத்தையடைவதற்குக் கருவியாகிய தவங்களாகவும் விரும்பிஅருளிச்செய்தார்.—(எ-று) (எ௰)

எண்ணரும்பெருவரங்கண்முன்பெற்றெம்பிராட்டிதம்பிரான்மகிழ்ந்தருள, மண்ணின்மேல்வழிபாடுசெய்தருளியமையறம்பெருகருங்கருணையினால், தன்னுமன்னுயிர்யாவையும்பல்கநாடுகாதலின்வீற்றிருக்கைப், பண்ணியதிருகாமக்கோட்டத்துப்பொலியமுப்பதிரண்டறம்புரக்கும் .... ....*

(இதன்பொருள்.)

எமது தாயாராகிய உமாதேவியார் பெருமைபொருந்திய அனேகவரங்களைமுதலிலேபெற்றுக்கொண்டு சுவாமி மகிழ்ச்சியடையப் பூசைசெய்து உலகத்திலே இல்லறத்தை நடத்தவேண்டுமென்று உண்டாகிய கிருபையோடு நிலைபெற்றவளாயிருக்கும் எல்லாவுயிர்களும் நாளுக்குநாள் பெருக-ஆசையோடுநெடுநாள்வாழ்க்கையாகப் புண்ணியஸ்வரூபமான திருக்காமக்கோட்டத்தில் வீற்றிருந்து முப்பத்திரண்டு தருமங்களையும் வளர்த்தார்.—(எ-று) காமக்கோட்டம்-காமாட்சிதேவிவீற்றிருக்குங்கோயில். (எக)

அலகிலீடவத்தறப்பெருஞ்செல்வியண்டமாந்திருமனைக்கிடுந்தீப, முலகில்வர்த்துறுபயனறிவிசகவோங்குநான்மலர்மூன்றுடனொன்று, நிலவவாண்டினுக்கொருமுறைசெய்யநீடுமெய்த்தன்மையானிறைந்தபேருலக, மலர்பெருந்திருக்காமக்கோட்டத்துவைத்தநல்லறமன்னவேமன்னும் .... .. .... ....*

(இதன்பொருள்.)

இப்படிப்பட்டதென்று அளவிடக்கூடாத நெடியதவத்தையும், தருமத்தையும் உடைய பார்வதியார் தமது அண்டமாகிய பெரியவீட்டிற்கு இடுகின்ற சூரியனாகிய விளக்குப்போல் உலகத்தில் பிறக்கும்பயனை அறிவிக்கத தெய்விகத்தால் உயர்ந்த அழகுற்ற நான்குபுஷ்பங்கள் வருஷத்திற்கு ஒருதரம்-மலரச்செய்து நாட்டப்பட்டுவரும் தெய்வத்தன்மையோடு திருக்காமக்கோட்டத்தில் பெருமைபொருந்திய உலகத்தில் நிறைந்து வாழ்பவரெல்லாரும் சுகத்தையடையத் தருமங்கள்வளர்க்கப்படும்.—(எ-று) (எஉ)

நீங்குதீர்க்குநற்றீர்த்தங்கள்போற்றுஞ்சிறப்பினாற்றிருக்காமக் கோட்டத்தின், பாங்கினின்றவ்வுலகத்துள்ளோரும்பரவுதீர் த்தமாம்பைம்புனற்கேணி, மாங்குமிதழ்மடைமேகலை மேகலை சூழ்வையகந்தனைச்செய்தபடியா, யோங்குதன்வடிவாய் நி லைபெற்றென்றுமுள்ளதொன்றுலகாணியென்றுளதால். .... *

(இதன்பொருள்)

மூழ்கினவர்களுடைய பாவங்களைத்தீர்க்கும் மேன்மைபொ ருந்திய தீர்த்தங்களுக்கெல்லாமேலாகிய சிறப்போடு திருக் காமக்கோட்டத்தின் பக்கத்திலே நின்று இவ்வுலகத்திலுள் ளவர்களும் வந்து ஸ்நானஞ்செய்யுந் தீர்த்தமாகிய பிரகாசமு ள்ள நீரையுடைய ஒரு கிணறானது வளைந்து தெளிந்த நீருருவ மாகிய அலைகளையுடைய சமுத்திரமாகிய ஆடைசூழ்ந்த பூமியி லுள்ளவர்களுக்கு மோட்சத்திற்கு வழிகிடைத்தபடியால் உய ர்ந்தநீர்வடிவாகவேயிருந்து உலகாணியென்றுபேர்பெற்றுச் சாசுவதமாயுள்ளது.—(எ - று) (எங)

அந்தமின்றிநல்லறம்புரிந்தளிக்குமம்மைசெய்திருக்காமக்கோ ட்டத்தில், வந்துசந்திரசூரியர்மீதுவழிக்கொள்ளாதன்மருங் குபோதலினால், சந்தமாதரமயங்கியெம்மருங்குஞ்சாயைமா றியதன்றிசைமயக்க, மிந்தமாநிலத்தியாவருங்காணவென்று முள்ளதொன்றின்றுமங்குளதால் .... .... .. .. .... *

(இதன்பொருள்)

கெடுதலில்லாமல் தருமங்களைச்செய்து உயிர்களைக்காப்பாற் றுகிற அம்பிகைவீற்றிருக்கும் காமக்கோட்டமென்னும் கோயி லில் சந்திரசூரியர்வந்து அக்கோயிலின்மேலேபோகாமல் ப க்கத்திற்போகின்றபடியால் புலப்படுகின்ற திக்குகள்தெரியா மல்மயங்கி-எட்டுப்புறத்திலும் நிழல்போகாமல் மாறியிருக்கின்ற அவ்விடத்தின் திசைமயக்கமானது பெருமையுற்ற இவ்வுலக த்திலுள்ளோர் யாவருங்காணும்படி ஒப்பற்றதாகவென்றுமு ள்ளது இக்காலத்திலும் அங்கு அவ்வண்ணமேயிருக்கின்றது. (எ - று) (எச)

கன்னிதன்னெடுங்காப்புடைவளாட்பிற்கரிஞ்சியாந்திருநதிக்க ரைமருங்கு, சென்னியிற்பிறையணிந்தவர்விருப்புறுந்திருப்பெரு ம்பெயரிருக்கையிற்றிகழ்ந்து, மன்னுவெங்கதிர் மீதெழும் போதுமறித்துமேல்கடற்றலைவிழும்போதும், தன்னிழற்பிரி யாதவண்காஞ்சித்தானமேவியமேன்மையுமுடைத்தால் .. *

(இதன்பொருள்.)

பார்வதியார்-வெகுநாளாக நன்குகாத்திருக்கின்ற காஞ்சிபுரி த்தில் காஞ்சியென்றுபேர்பெற்ற நதியினுடைய கரையினிடத் தில் சிரசில் மூன்றாம்பிறையைத்தரித்த பரமசிவன் விரும்பிவீ ற்றிருக்கும்பேர்பெற்ற ஒரு இடத்திலிருந்து விளங்கி - வெப்ப மாகியகிரணங்களைப்பொருந்திய சூரியதேவன் உதயகிரியினின் றும் எழும்பும்போதும் இறக்கதலையடைந்து மேல்கடலில் அஸ்தமிக்கும்போதும் நிழலானது தன்னிடத்திலிருந்து புறத்தி ற்செல்லாத வளம்பொருந்திய காஞ்சியென்னும் விருக்ஷமிரு க்கின்ற பெருமையையும் உடைத்தாயிருக்கின்றது அந்நகரம்.

(எ - ஷ) (எரு)

மறைகளாற்றுதித்தருந்தவம்புரிந்துமாறிலாநியமந்தலைநின்று
முறைமையாலவரும்பூசனைசெய்யமுனிவரானவர் முதலுயி
ரெல்லா, நிறையுமன்பினாலர்ச்சனைசெய்யநீடுகாமங்களவையவ
ரகருளி, யிறைவர்தாமமர்ந்தருளியபதிகளெண்ணிறந்தவத்தி
ருநகரெல்லை ... .. .. .. ... ... ... . ... ......*

(இதன்பொருள்.)

முனிவர்கள் வேதங்களால் துதிபண்ணி அருமையாகிய தவங்க ளைச்செய்து மாறுதலிய மத்தை ஸ்திரமாகக்கொண்டு முறை யோடுகூடிய பூசையைச்செய்தலாலும் தேவர்கள்முதலான உயிர்களெல்லாம் நிறைந்தபத்தியுடனே மலர்கள் முதலியவற் றால் அருச்சனைசெய்தலாலும் அவரவர்களுக்குமிகவும் விரும் பினவைகளைக்கொடுத்தருளிப் பரமசிவன்விரும்பிவீற்றிருக் கும் ஸ்தலங்கள் அளவில்லாதனவாம்-அந்நகரத்தின் எல்லையி லே—(எ - று) (எசா)

மன்னுகின்றவத்திருநகர்வரைப்பின்மண்ணின்மிக்கதோர் நன்
மையினாலே, துன்னுமியானையைத்தூற்றில்வாழ்முயல்முன்று
ரக்கவெய்தியதொலைவிலாக்கத்தால்; றன்னிலத்துநின் றகற்று
தல்செய்யுந்தானமன்றியுந்தனுவெழுந்தவனி, யெந்நிலத்தினு
ங்காண்பருமிறவாத்தானமென்றிவையியல் பினினுடைத்தால்.

(இதன்பொருள்.)

நிலைபெற்ற அந்தக்காஞ்சிபுரத்தின் எல்லையில் பூவுலகத்தார் செய்த தவப்பேற்றினால் பலங்கொண்ட ஒரு யானையைத் துர த்தியஇடத்திலிருந்த ஓர்முயலானது அழிவில்லாத சத்தியோ டுகூடியதித் தன்னிடத்தில்நின்றும் போகும்படி செய்யும்ஸ் தானம் இருப்பதல்லாமலும் உயிரிறந்துகிடக்கின்றஉடலானது

மறுபடிச் சேவையடையும் இடமும் - எந்தத்தேசங்களிலு
ம் காண்பதற்கு அரிதாய் மனிதர் எப்பொழுதும் இறவாத
இடமுமாகிய இவைகள் இயல்பாகவுள்ளன — எ-று தனுவெ
ழுந்தாணி - உயிரில்லாத உடலைக்கொண்டுவந்து போட்டவுட
னே உயிருண்டாக்கும்பூமி. இறவாத்தானம் - மனிதர்கள் சா
ங்காலம் ஒருவரையாக அறிந்துபோய் அவ்விடத்திலேயே
வாசஞ்செய்தால் அவர்கள் எப்பொழுதும் இறவார்களென்ப
தாம், இந்த இடங்களெல்லாம் மகாத்துமாக்கள்தவிர - மற்றை
யாவர்க்கும் புலப்படாமலிருக்கும். (௭௭)

ஈண்டுதீவினையாவையநீக்கியின்பமேதரும்புண்ணியதீர்த்தம்,
வேண்டினோர்தமக்கிட்டசித்தியதாய்விளங்குதீர்த்தமும் மங்கல
தீர்த்தம், நீண்டகாட்புடைதீர்த்தமூன்றுலகினிற்றீர்த்த சாருவ
தீர்த்தமுமுதலா, மாண்டுநீடியதீர்த்தமெண்ணிலவுமமரநா
ட்டவராடுதலொழியார் ....... .... .... .... ....*

(இதன்பொருள்)

இவ்வுலகத்தில் தீவினைகளெல்லாம் போக்கி யின்பத்தையே
கொடுத்தலால் பேர்பெற்ற புண்ணிய தீர்த்தமும் வேண்டினவ
ர்களுக்கு விரும்பியபொருளைக் கொடுப்பதாகப் பிரகாசித்த
லாற் பேர்கொண்ட இஷ்டசித்திதீர்த்தமும் நல்ல சுபத்தைக்
கொடுக்கின்றமங்கலதீர்த்தமுமென்றும்-மனிதர்களை ரட்சித்த
லால் பேர்கொண்டகாட்புடைத்தீர்த்தமும்- மூன்றுலகத்திலு
ள்ள தீர்த்தங்களெல்லாம் ஒன்றாகச்சேர்ந்திருந்த சர்வதீர்த்த
மு முதலாக மாட்சிமைப்பட்டு நிலைபெற்ற எண்ணிறந்த தீ
ர்த்தங்களில் தேவர்கள் ஸ்நானஞ்செய்தலை யொழியார்கள்.—
(எ-று) சர்வதீர்த்தம்-முதல்நீண்டு ரகரத்தில் உகரம் எழுத்து
ப்பேறாகவந்தது. (௭௮)

தாளதொன்றினின்மூன்றுபூமலருந் தமனியச்செழுந்தாமரை
த்தடமு, நீளவார்புனல்குடதிசையோடிநீர்காக்குமாநதியுமவி
டு, நாளலர்ந்தசெங்குவளைபைங்கமலநன்பகற்றிருட்படமல
ன்றிச், காளமேகமொப்பாருறைவனாட்பிறகண்படாதகாயா
ப்புளியுளதால் :.... .... .... .. .. .. .. .... ....*

(இதன்பொருள்.)

ஒருநாளில் மூன்றுபுஷ்பங்கள் மலர்கின்றபொற்றாமரையையு
டைய குளமும்-நீளும்படியோடுகின்ற நீரானது கடலையடைந்
து மேலைத்திசைக்கு ஓடிமறைந்துபோகின்ற ஒரு ஆற்றி
னை மத்தியானவேளையில் பருவமிறந்து செங்குவளையல

ளையும் அழகுபொருந்திய தாமரைப்பூவையும்-மலர்கின்றதரு
பாதிரியா யிருக்கிறதுமன்றிக்கரியமேகம்போன்ற நிறத்தையு
டைய அம்பிகைகளிருக்கும் அந்தநகரத்தில்மனிதர்களுணு
க்குத் தோன்றாத காயாப்புளியமாமும் ஒன்றுஇருக்கின்றது.
(எ-று) (எகூ)

சாலையுமன் பிணிக்குங்கிணறொன்றுகஞ்சமுண்ணிலஞ்சாந்தட
மொன்று, மாலையின்றிவந்துள்ளடைந்தார்கள்வானரத் துரு
வாய்ப்பிலமொன்று, மேயவவ்வுருநீங்கிடக்குளிக்கும் விளங்கு
பொய்கையுமொன்றுவின்னவரோ, டாயவின்பமுய்க்கும்பி
லமொன்றுடனேயவாசயவதிசயம்பலவால் .. .. ... .. .*

(இதன்பொருள்.)

நிழலைப் புறத்திற்போகவொட்டாமல் தன்னிடத்திலேயே பி
டித்துக்கொள்ளுகிற கிணறு ஒன்றும்-எளிதாகக்குடித்தால்வி
ஷமாய்க்கொல்லுகின்ற நீரையுடையதடாகம் ஒன்றும்- தன்மை
யறியும் சத்திஇல்லாமல் வந்து சேர்ந்தவர்கள் வானரத்தின் உ
ருவத்தை அடைகின்ற பிலம் ஒன்றும்-அப்படியடைந்த குர
ங்கினுருவம் நீங்கும்படி குளிக்கின்ற காந்தியுள்ள பொய்கை
யொன்றும் - தேவர்களோடு இன்பத்தை அனுபவிக்கும்படி
சொர்க்கலோகத்துக்குக்கொண்டுபோய் விடுகின்ற பிலம்ஒன்
றுமாகிய இவைகளுடனே இப்படிப்பட்டபல அதிசயப்பொ
ருள்களும்இருக்கின்றன.—(எ-று) (அய)

அஞ்சுவான்கரத்தாறிழிமதத்தோராணைநிற்கவுமனையிருட்டிரியு
மஞ்சுநீள்வது போலுமாமேனி மலர்ப்பதங்களில் வன்சிலம்
பொலிப்ப, நஞ்சுமிலகெயிற்றரவமெத்தனையிருமருன்றிலைப்
படையுடைப்பிள்ளை, யெஞ்சலின்றிமன்றிரியவுங்குன்றமெறி
ந்தவேலவன்காக்கவுமிலையும் .. ... .. ... ... ......*

(இதன்பொருள்.)

பெரிய ஐந்துகைகளையும் ஆறுபோற்பாய்கின்ற மதத்தையும்
உடைய விக்கினேசுரர்காவலாக நிற்கவும் - புஷ்பம்போன்ற
பாதங்களில் வளமான சிலம்புகள்கிடந்தொலியுண்டாக்க அர்த்
தராத்திரியில் திரிகின்ற நீண்ட மேகம்போல நிறத்தையும்
நஞ்சு ஒழுகுகின்ற பற்களையுடைய பாம்புகளைமாத்திரம் அ
ணிந்து மற்றொன்றையுந்தரிக்காத இடையினையும் உடைய மூ
ன்றுகவராயிருந்து பயத்தை உண்டாக்குகின்ற சூலாயுதமே
ந்திய வயிரவர் இடைவிடாமல் திரிந்துகொண்டுகாக்கவும்- கி

ரவுஞ்சமலையை வேலால் தகர்த்த குமாரசுவாமி ஒருபுறங்காக்கவும்-அந்நகரம் ஒரிடையூறு மடையாம லிருக்கின்றது.— (எ-று) (அ௭)

சத்திதற்பரசித்தயோகிகளுஞ்சாதகத்தனித்தலைவருமுதலா,நி
த்தமெய்ந்நிலை யாயமெய்த்தவர்கணீடுவாழ்ந்திருப் பாடியுமனேகஞ், சித்தர்விஞ்சையரியக்கர்கந்தருவர் திசைநிறைந்துமன்னுவார்செண்டுகையேந்தி, வித்தகக்கரிமேல்கொளுங்காரிமேவு செண்டணைவெளியுமொன்றுளதால் .... .... ... .. ..*

(இதன்பொருள்.)

அனேகசத்திகளும், மேலாகிய சித்தர்களும், யோகிகளும், மோக்ஷத்தை யடைவதற்குவேண்டிய ஸாதகத்தைச்செய்யும் ஒப்பற்ற ஞானிகளும், எக்காலத்தும் இருக்கும்படி ஆயுள் விருத்தியை அடைவதற்கு மெய்ம்மைபொருந்திய தவஞ்செய்தவர்களுமாகிய இவர்கள்முதலாக உள்ள மற்றையோரும் வாழ்கின்ற இடங்களும் பலவாயிருக்கின்றன-சித்தர்-வித்தியாதரர்-யக்ஷர்-கந்தருவர் முதலானவர்களும் அந்நகரத்தில் வாசஞ்செய்வார்கள்-செண்டாயுதத்தைக்கையிற்பிடித்துச்சிறந்த யானையை வாகனமாகக்கொண்ட ஐயனார் உலாவிவருகின்ற ஒருவெளியுமிருக்கின்றது.—(எ-று) (அஅ)

வந்தணைந்தவர்தம்முருமாயமற்றுளாரைத்தாங்காணிடமுளது, சிந்தையோகமுனிவர்யோகினிகள்சேருமியோகபீட-முமுளதென்று, மந்தமில்லறப்புராதனர்கோயிலான்போகபீடமுமுளதாகு, மெந்தையார்மகிழ்காஞ்சிநீடெல்லையெல்லையிலவையுள்ளவாறறிவார் .... .... .... ... ..... ..*

(இதன்பொருள்.)

வந்துசேர்ந்தவர்களுடலம் ஒருவருக்குந்தோன்றாமல் மறைய அவர்கள்மாத்திரம் மற்றவர்களைக்காணுகிற இடமொன்றிருக்கின்றது-யோகஞ்செய்கின்ற நற்சிந்தையை உடைய முனிவர்களும், யோகினிகளும், சேருகின்ற யோகபீடமும் ஒன்றிருக்கின்றது-கெடுதலில்லாமல் தர்மத்தைவளர்க்கின்ற காமாட்சிதேவி வீற்றிருக்குங்கோவிலில் ஒப்பற்ற யோகபீடமென்றபேர்பெற்றதொன்றிருக்கிறது - எமது ஆண்டவர்வீற்றிருக்கும் காஞ்சிபுரத்தினது நீண்ட எல்லைக்குள் அளவற்ற அதிசயங்கள் உண்டு அவைகளையாரறிவார்கள்.—(எ-று) (அகூ)

தூண்டுசோதியொன்றெழுந்திருள்போக்குஞ் சுரர்கள்வந்துசூழு
ருத்திரசோலை, வேண்டினோர்கடம்பிறப்பினை யொழிக்குமெய்
நெறிக்கணின்றோர்கடாவிருப்பிச், தீண்டில்யாவையுஞ் செம்
பொருக்குயதோர்சிலையுமுண்டுரைசெய்வதற்கரிதா, லாண்ட
நாயகிசமயங்களாறுமகிலமும்போற்றியுமிருக்குமந்நகரம்.....*

(இதன்பொருள்)

தூண்டினதுபோற்பிரகாசிக்கும் ஒருசோதியுண்டாகி இருளைப்போக்கித்தேவர்கள்வந்து சூழ்ந்துகொள்வதற்கிடமாகிய உருத்திரசோலையென்று பேர்பெற்ற ஒருபூங்காவனமும்-பிறப்பினையொழிக்கும்பொருட்டு மெய்மையாகிய சைவசமயமார்க்கத்தில் விரும்பி அனுசரித்துநின்றவர்கள் விருப்பங்கொண்டு எவைகளையாவது கொண்டுபோய்த் தீண்டும்படிசெய்தால் அவற்றைப்பொன்னாக்குகின்ற ஒருகல்லும் உண்டு - அதன்பெருமைசொல்வதற்கு அரிதாகும் - ஆட்கொண்ட நாயகியாகிய பார்வதிதேவி அறுவகைப்பட்ட சமயங்களையும் எல்லாவுயிர்களையும் காப்பாற்றுகின்ற அந்தநகரத்தில்.—(எ-று) தீண்டில் என்பது-பிறவினைப்பொருளில்வந்தது. (௮௪)

என்றுமுள்ளவிந்நகர் கலியுகத்தினிலங்குவேற்கரிகாற் பெருவ
ளத்தோன், வன்றிறற்புலியிமையமால்வரைமேல்வைக்கவேகு
வோன்றனக்கிதன்வளமை, சென்றுவேடன்முன் கண்டுரைசெ
ய்யத்திருந்துகாதநான்குட்பட வகுத்துக், குன்றுபோலுமாம
தில்புடைபோக்கிக்குடியிருத்தினகொள்கையின்விளங்கும்.*

(இதன்பொருள்.)

எக்காலத்திலுமுள்ள இக்காஞ்சீபுரமானது கலியுகத்தினுதியில் விளங்குகின்ற வேலைத்தரித்த கரிகாற்சோழராஜவர் வெற்றியின்பொருட்டு வலியுள்ள தமது புலிக்கொடியைப் பெருமை பொருந்திய இமயமலையினுச்சியில் நாட்டும்படி போகும் போது அவரிடத்துக்கு ஒருவேடன்போய்க்கண்டு இந்த ஸ்தலத்தின் பெருமையைச்சொல்லச் சுற்றளவில் நான்குகாததூரம் உட்பட்டிருக்கும்படி ஒருபட்டணமாக நிருமித்து மலைபோல் உயரமாகிய மதிலொன்று நாற்புறத்திலும் சூழ்ந்திருக்க உண்டாக்கி அனேகங்குடிகளை அவ்விடத்தில் வாசம்பண்ணும்படி செய்த பெருமையோடுவிளங்கும்.—(எ-று) (௮௫)

(வேறு.)

தண்காஞ்சிமென்சினைப்பூங்கொம்பராடல் சார்ந்தசையுவதன்
மருங்குசுரும்புதாழ்ந்து, பண்காஞ்சியிசைபாடும் பழனவே

ளிப்பனைமருதம்புடையுடைத்தாய்ப்பாரில்நீடு, இன்காஞ்சிநக
ர்நொச்சியிஞ்சிசூழ்ந்தசெழுங்கிடங்குதிருமறைகளொலிக்குந்
தெய்வ, க் கன்காஞ்சியல்குல் மலைவல்லிகாக்க வளர்கருணைக்கட
லுலகஞ்சூழ்ந்தாலமாலும். .. .. .. ...... .. .. .. ..*

(இதன்பொருள்.)

குளிர்ச்சிபொருந்திய காஞ்சிமரத்தினது மெல்லிய பூங்கொத்துக்களையுடைய கொம்புகளசைந்தாட அவைகளிடத்து வண்டுகள் விழுந்து காஞ்சியென்னும் இராகத்தைப் பாடுவதற்கிடமாய்க்கிளைகளுள்ளமருதமரங்கள் வேலியாகச்சூழ்ந்தவயல்களைச் சுற்றிலுமுடைத்தாகி உலகத்துச்சிறந்த காஞ்சிபுரத்தின் வன்மையாகிய நொச்சிலையுடைய மதில்சூழ்ந்த செழுமை பொருந்திய அகழியானது தெய்விகமாகி ஒலிக்கின்ற வேதரூபமாகிய காஞ்சியென்னும் ஆபரணத்தைத்தரித்த இடையையுடையபார்வதியார் காப்பதால் அவருடையகிருபையாகிய கடலானது அந்நகரத்தைவளைந்திருப்பதுபோலும் (எ-று)
நொச்சியென்பது-உலகவழக்கில்கொத்தளம் (௮௬)

கொந்தலர்பூங்குழலிமையக்கொம்புகம்பர்கொள்ளும்பூசனை
குறித்தநாணங்காக்க, மந்திரமாமதிலகழியாதுதந்தவாய்
மையாகமவிதியின்வகுப்புப்போலு, மந்தாயின்மீர்க்காஞ்சியை
அந்நடைந்தார்க்கல்லியடைகளங்கமறாப்பரிதென்றறிந்துசூழ,
வந்தனைத்துதன்கறுப்புமுவர்ப்புநீக்குமாகடலும்போலுமல
ர்க்கிடங்குமாதோ . .... .... .... .... .. ... .... *

(இதன்பொருள்)

கொத்துக்களாய் மலர்ந்த புஷ்பங்களைத்தரித்த கூந்தலையுடைய பார்வதியார் ஏகம்பனைப் பூசைசெய்யும்படி எற்படுத்திக்கொண்ட இடத்தைக் காப்பாற்றும்பொருட்டுச்சுவாமியினால் அருளிச்செய்யப்பட்ட மந்திரங்களை மதிலாகவும், உண்மையான ஆகமங்களை அகழியாகவும் விதித்த எற்பாடுபோல் அந்நகரத்தைச்சூழ்ந்திருக்கிற மதிலும் அகழியும் தோன்றுகின்றன-மலர்களையுடைய அந்த அகழியினுடைய எப்படியிருக்கின்றதெனின், கெடாதசிறப்பினையுடைய காஞ்சிநகரத்தை அடைந்தவர்களுக்கல்லாமல் தாங்கள் அடைந்திருக்கிற களங்கத்தைப்போக்கிக்கொள்ளுகிறது அரிதென்று அறிந்து எல்லையினுற்புறமுஞ்சூழ்ந்து தன்னிடத்திலுள்ள கறுப்பினையும் உவரையும் நீக்கிக்கொண்ட பெரியகடல்போலும் இருக்கின்றது.
(எ-று) (௮௭)

தீதிலிருக்கும் ஒவ்வொருவீதியும் ஒவ்வொரு கண்டம்போலவும், மேல்வீடுகளின்வரிசை கண்டங்களுக்குநடுவிலுள்ளமலைவரிசைபோலவும், விளங்கினவென்க. (அக)

பாகமருங்கிருபுடையுமுயர்ந்துநீண்டபடரொளிமாளிகைநிரைகள்பயின்மென்கூந்தற், றோகையர்தங்குழாமலையத் தூக்குமுத்தின்சுடர்க்கோவைகுளிர்நீர்மைதுறைநிறைந்தவீதி, மாகமிடையொளிதழைப்பமன்னிநீடு மருங்குதாரகையலைய வாம்பிலவண்ணம், மேகமிடைகிழித்தொழுகுந்தெய்வககங்கையேனநிகள்பலமண்மேலவிளங்கித்தோன்றும் .... .. .... .. ....*

(இதன்பொருள்)

ஓரமாகிய இருபுறத்திலும் உயர்ந்தும் நீண்டும் பரவுகின்றகாந்தியையுடைய மேல்வீடுகளின் வரிசைகளில்வாசஞ்செய்கின்ற மெல்லியகூந்தலையுடைய மாதர்கூட்டங்கள் அவ்வுப்பரிகைகளில் அலையும்படி தொங்கவிட்டிருக்கும் முத்துமாலைகளின் குளிர்ச்சியையுடைய காந்திவீசிய வீதியானது ஆகாயத்தில் விளங்க நிலைபெற்றுள்ள நட்சத்திரங்கள் அலைந்துகொண்டிருக்க-ஒப்பில்லாத கரியநிறத்தையுடைய மேகங்களின் நடுவிற்கிழித்துக்கொண்டிறங்கும் ஆகாயகங்கையின் பலபிரிவுகள் பூமியின்மேல் விளங்குவனபோலிருக்கும்.— எ-று. தொங்கியமுத்துமாலைகளே-ஆகாயகங்கையின் வீழ்ச்சிகள்போலாகவும், அவைகளினொளி-வெள்ளம்போலவும், அதற்கிடமாகிய வீதி-அந்தப்பிரவாகத்தை அடக்கிக்கொண்டிருக்கிற. ஆறுகள்போலவும் தோன்றினவென்க-மேகமிடைகிழித்தொழுகுங்கங்கை-அபூதத்திலவந்தது. (அஉ)

இளவொளிச்செங்கனகமயந்தானும்மாடுகீழ் நிலையோர் நீலச்சோபானம்புனைக, கொளவமைத்துமீதொருபாற்கண்ணசாலை குலவயிரத்தாலமைத்தகொள்கையாலே, யளவில்சுடர்ப்பிழம்பாலூர்தம்மைநதேடியசந்தேனபாலுமன்னுமாகி, வளர்விசும்பிலெழுந்தாலும்போலநீடு மாளிகைகளுளமற்றுமறுகுதோறும். .... .. .... .. .. .. .... .... .... ..*

(இதன்பொருள்)

வீதிகள்தோறும் இருக்கின்ற சில உப்பரிகைகள் மிகுந்த ஒளியையுடைய மாற்றுயர்ந்த பொன்மயமாகச் செய்யப்பட்டுக் கீழ்நிலையில் நீலமணிகளிழைத்த வரிசையாகிய படியை உடைய

யனவாகி மேலே சிரேஷ்டமாகிய வச்சிரங்களைப்பதித்து அ
மைந்த சாளரத்தையுங் கொண்டிருப்பதனால் பரமசிவனுடை
ய அடியையும்முடியையுங்காணும்பொருட்டுப்பன்றியின் உரு
வங்கொண்டு தோண்டிய விஷ்ணுவும், அன்னப்பறவையாய்
மேலேயெழும்பிய பிரமதேவனும், இவர்கள்கலகத்தையொ
ழிக்கத் திரட்சியுள்ள சோதியாயெழுந்த பரமசிவனும்போ
லிருக்கின்றன.—(எ-று) இச்செய்யுள்-வழுவமைதி. கொண்
டுகூட்டுப் பொருள்கோள். (௧௧)

மின்பொலிபன்மணிமிடைந்ததளையாட மிசைப்பயில்சந்திர
காந்தம்விசும்பின்மீது, பொன்புனையுஞ்செக்கர்நிறப்பொழு
தோறும்புனிற்றுமதிகண்டுருகிப்பொழிந்தநீரால, வன்பு
லியினுரியாடைத்திருவேகம்பர்வளர்சடையுமிளம்பிறையுங் க
ண்டுகும்பிட், டன்புருகிமெய்பொழியக்கண்ணீர்வாருமடிய
வருமனையவுளவல்லிலாத .... .... .. .... .... .....*

(இதன்பொருள்)

மின்னல்போலொளிவிடுகின்ற பலமணிகளிழைத்த வெண்மை
பொருந்திய மேல்வீடுகள் - தமது வெளிப்புறத்தில் பதிந்திரு
க்கும் சந்திரகாந்தச்சிலைகள் ஆகாயத்தில் பொன்போலுஞ்
செம்ப நிறம்பரந்த மாலைப்பொழுதில் உதயமாகிய அர்த்தச
ந்திரனைக்கண்டு இளகிச்சொரிந்த நீரினால் வலிமையுள்ள புலித்
தோலையாடையாகவுடைய ஏகாம்பரேசுரரது வளர்ச்சியாகிய
சடையையும், இளமையுற்ற பிறையையுந்தரிசித்துக் கைகூப்
பி அன்பினாலே உருகி உடல்முழுதும் நிறையும்படி கண்ணீர்
சொரிகின்ற அடியவரையும் ஒத்திருந்தன - இப்படி அளவற்ற
மேல்வீடுகளிருந்தன.—(எ-று) (௧௨)

மூரிவரிஞ்சுங்கொடிதொடுத்தமுடியவாகு முழுப்பளிங்கின்
மாளிகைகண்முற்றுஞ்சுற்று, நிகரில்சராசரங்களெல்லா நிழலி
னாலேநிறைதலினாலிறைதவஞ்செயிமையப்பாவை, நகிலுழுத
சுவடும்வளைத்தழும்பும்பூண்டநாயகனார் நான்முகற்குப்படை
க்குநல்கு, மகிலயோனிகளெல்லாமமைத்துவைத்தவரும்பெ
ரும்பண்டாரநிலையனையவாகும் .... .... .... .. ....*

(இதன்பொருள்)

மேகங்கள் உராய்ந்துசெல்கின்ற கொடிகளைநாட்டிய சிகரங்க
ளையுடைய பளிங்குக்கற்களினாலேயே கட்டப்பட்ட பெரிய
வீடுகளின் உட்புறமுழுவதும் புறத்திற்செல்கின்ற ஒப்பற்ற

ள பொன்முகலியாற்றினது பொன்றுறைக்கப்பட்டிருக்குங் கரையிலேறிப் புதியமலரை உடைய சோலையிற் புகுந்தார்.—
(எ-று) (௱௰௪)

காடனுமெதிரேசென்றுதொழுதுதீக்கடைந்துவைத்தேன்.*
கோடுடையேனமுங்கள்குறிப்படியுறுப்பையெல்லா .... *
மாறுறநோக்கிக்கொள்ளுமறித்துநாம்போகைக்கின்று ... *
நீடநீர்தாழ்த்ததென்னேயென்றவனின்றநாணன் .. ...., *

(இதன்பொருள்)

காடனென்பவனும் எதிராகப்போய்க் கும்பிட்டு அரணியை கீகொண்டு நெருப்புண்டாக்கிவைத்தேன் கொம்பினையுடைய பன்றியினது அவயவங்களையெல்லாம் உமது அடையாளப்படி பார்த்துக்கொள்ளும் திரும்பிநாம்போகிறதற்கு இப்போது நீர்மிகவும் தாமசப்பட்டிருக்கவேண்டியதென்னவென்று சொன்னதும் அவ்விடத்தில் நின்றநாணன்.(எ-று (௱௰௫)

அங்கிவன்மலையிற்றேவர்தம்மைக்கண்டணைத்துக்கொண்டு ..*
வங்கினைப்பற்றிப்போதாவல்லுடும்பென்னநீங்கா .. . ..*
னிங்குமததேவர்தின்னவிறைச்சிகொண்டேகப்போந்தா ..*
னங்குலத்தலைமைவிட்டானலட்டப்பட்டான்றேவர்கட்கென்றான் .*

(இதன்பொருள்.)

நாங்கள்போன அவ்விடத்தில் திண்ணனர் மலையிலிருக்கின்ற சுவாமியைப்பார்த்துக் கட்டிக்கொண்டு மரப்பொந்தினைப் பற்றிவிடாத வலிய உடும்புபோல் நீங்கமாட்டாதவராய் அந்தச்சுவாமி உண்ணுகிறதற்கு இறைச்சிகொண்டுபோக இவ்விடத்திற்கு திரும்பிவந்தார்- தம்முடையகுலத்துக்குத் தலைவராகி யிருப்பதையும்விட்டார்- கடவுளுக்கு வசமானார் என்று சொன்னான்.
(எ-று) (௱௰௬)

என்செய்தாய்திண்ணாநீதானென்னமால்கொண்டாயெங்கள்.*
முன்பெருமுதலியல்லையோவெனமுகத்தைநோக்கார் ....*
வன்பெரும்பன்றிதன்னைப்பெரியினில்வதக்கிமிக்க.........*
வின்புறுதசைகள்வெவ்வேறம்பினுலீர்ந்துகொண்டு.... ..*

(இதன்பொருள்.)

காடன் இந்தமொழியைக்கேட்டுத் திண்ணனே என்னகாரியஞ் செய்தீர் - எப்படிப்பட்ட பைத்தியங்கொண்டீர் - எங்களுக்கு முன்னே பெருமைபொருந்திய முதன்மையா யிருந்தவ

ன்றே என்று சொல்ல - அவன்முகத்தைப்பாராமல் வன்மை
பொருந்திய பெரியபன்றியை நெருப்பினில் வதக்கிச் சிறந்த
இனிப்பாகிய மாமிசங்களை வெவ்வேறாக அம்பினால் கிழித்தெ
டுத்துக்கொண்டு.—(எ-று) (௱௰௭)

கோலினிற்கோத்துக்காய்ச்சிக்கொழுந்தசைபதத்தில்வேவ ✻
வாலியசுவையுங்காண்பான் வாயினிலதுக்கிப் பார்த்துச்.. ✻
சாலவுமினியவெல்லாஞ்சருகிலையிணைத்தகல்லை.......... ✻
யேலவேகோலிக்கூடவதன்மிசையிடுவாரானார். ......... ✻

(இதன்பொருள்.)

அம்பிலே கொழுமையாகிய இறைச்சியைக்கோத்துநெருப்பி
லேகாய்ச்சிப்பதமாகவெந்து கொண்டிருக்கும்போதுஉயர்ந்
த உருசியாயிருக்கிறதோவென்று முன்னமேஅறிந்துகொள்ள
வாயினிற்போட்டுஅதுக்கிப்பார்த்துமிகவும் இனிப்பாயிருக்கி
றமாமிசவிசேஷமெல்லாம்பழுப்பாகிய இலைகளால் இணைக்கப்
பட்டகல்லையைச் சுற்றிலும் விளிம்பு இருக்கும்படி நன்றாகத்
தைத்து அதனில்வெந்த தசையையிட்டார்.—(எ-று) (௱௰௮)

மருங்குநின்றவர்கள்பின்னுமயன்மிகமுதிர்ந்தானென்னே. ✻
யரும்பெறலிறைச்சிகாய்ச்சியதுக்கிவேறுமிழாநின்றான்... ✻
பெரும்பசியுடையனேனும்பேச்சிலனெமக்குப்பேறு.... ✻
தரும்பரிசுணரான்மற்றைத்தசைபுறத்தெறியாநின்றான்.... ✻

(இதன்பொருள்.)

அருகில்நின்றவர்கள் பிற்பாடும் சொல்கின்றார்கள் என்ன ஆ
ச்சரியம்பைத்தியமிகவுங்கொண்டார் - அதெப்படியெனின் -
பெறுதற்கருமையாகியமாமிசத்தை நெருப்பிற்காய்ச்சிப்பல்
லினாலதுக்கி வீணாகவுமிழ்கின்றார் அதிகப்பசியைத்தாம் உடை
யவரா யிருந்தாலும் அதைக்குறித்து ஒன்றும்பேசவில்லை நம
க்குமாமிசம் உண்ணக்கொடுக்குந்தன்மையையும் அறியார்.ம
ற்றையிறைச்சியைப்புறத்தில்எறிந்துவிடுகிறார்.(எ-று) (௱௰௯)

தேவுமால்கொண்டானிந்தத்திண்ணன்மற்றிதனைத்தீர்க்க .. ✻
லாவதொன்றறியோந்தேவராட்டியைநாகனோடு........ ✻
மேவிநாங்கொணர்ந்துதீர்க்கவேண்டுமவ்வேட்டைக்கானில் ✻
வேவலாட்களையுங்கொண்டுபோதுமென்றெண்ணிப்போனார்

(இதன்பொருள்.)

திண்ணனார்-தெய்வப்பயித்தியங்கொண்டார் இதனைத்தீர்க்கத்

நச்சுவழிமொழியாள்றையும் அறிவோம் நாம்போய்த் தேவராட்டி
யை நாகரோடு அழைத்துக்கொண்டுவந்து இதைத் தீர்த்தி
செய்யவேண்டும் ஆதலால் அந்தவேட்டையாடுகிற காட்டிலு
ள்ள ஏவல்செய்கிற மனிதர்களையும் கொண்டுபோவோமென்
று நினைத்துப்போனார்கள்.—(எ-று) (௱௨௧)

கானவர்போனதோரார்கடிதினிற்கல்லையின்க.... ......*
ஊனமுதமைத்துக்கொண்டுமஞ்சனமாட்டவன்னி.. .....*
மாநதிநன்னீர்தூயவாயினிற்கொண்டுகொய்த...........*
தூநறும்பள்ளித்தாமங்குஞ்சிமேற்றுறையக்கொண்டார் ..*

(இதன்பொருள்.)

கண்ணப்பசுவாமி தம்மருகிலிருந்த வேடர்கள்போனதைச்சு
வாமியினிடத்தில் மனதைச்செலுத்தினதால் அறியாதவராய்ச்
சீக்கிரத்திற்கல்லையில் அமிர்தம்போன்றமாமிசத்தைவைத்துக்
கொண்டு திருமஞ்சன மாட்டவேண்டுமேயென்று நினைத்துப்
பெருமைபொருந்தியபொன்முகலியாற்றினது நல்ல நீரைசு
த்தமாகியவாயிலெடுத்துக்கொண்டுசாத்துகிறதற்காகப் பரிசு
த்தம்பொருந்திய அப்போதுமலர்ந்த புட்பங்களைக்கொய்து
தமது தலையின்மயிரில் நிறையச்செருகிக் கொண்டார்.(எ-று)

தனுவொருகையில்வெய்யசரத்துடன்றாங்கிக்கல்லைப் .. ...*
புனிதமெல்லிறைச்சிநல்லபோனகமொருகையேந்தி .. ..*
யினியவெம்பிரானார்சாலப்பசிப்பரென்றிரங்கியேங்கி.. ..*
தனிவிரைந்திறைவர்வெற்பைநண்ணினார்திண்ணனார்தாம் ..*

(இதன்பொருள்.)

ஒருகையில் அம்போடுவில்லும் ஏந்திநல்லஉணவாகமற்றொரு
கையில் கல்லையில் இட்டிருக்கும் களங்கமொன்றுமில்லாத மி
ருதுவாகிய மாமிசத்தையேந்தி இனியராகிய எமது ஆண்டவ
ர் மிகவும்பசித்திருப்பரென்று இரங்கிவிசனப் பட்டுச்சீக்கிரத
தில்நடந்து சுவாமிவீற்றிருக்கு மலையை அடைந்தார் கண்ணப்
பசுவாமி.—(எ-று) (௱௨௨)

இளைத்தனர்நாயனாரென்றீண்டச்சென்றெய்திவெற்பின் .. *
முளைத்தெழுமுதலைக்கண்டுமுடிமிசைமலரைக்காலில் ....*
வளைத்தபொற்செருப்பான்மாற்றிவாயின்மஞ்சனநீர்தன்னை *
விளைத்தவன்புமிழ்வார்போலவிமலனார்முடிமேல்விட்டார்.*

(இதன்பொருள்)

சுவாமிபசியினாற்களைத்திருப்பாரென்று விரைவாகப்போய் மலையில் எழுந்தருளியிருக்கின்ற சுவாமியைக்கண்டு அவரதுசிரசில் சிவகோசரியாரென்பவரால் சாத்தப்பட்டிருந்தபுட்பங்களைக்காலில்தரித்த அழகியசெருப்பினாற் கீழேதள்ளிவாயிலடைத்திருந்த திருமஞ்சனநீரைத்தமக்குண்டாய் அடங்காமல் எழுந்த அன்பினை உமிழ்வதுபோல் பரமசிவனதுமுடியில் அபிஷேகஞ்செய்தார்.—(எ-று) (௱௨௩)

தலைமிசைச்சுமந்தபள்ளித்தாமத்தைத்தடங்காளத்தி......*
மலைமிசைத்தம்பிரானார்முடிமிசைவணங்கிச்சாத்திச்......*
சிலைமிசைப்பொலிந்தசெங்கைத்திண்ணனார்சேர்த்தகல்லை.*
யிலைமிசைப்படைத்தவூனின்றிருவமுதெதிரேவைத்து....*

(இதன்பொருள்.)

சிவந்தகையினிடத்தில்பிரகாசிக்கின்றவில்லையுடைய திண்ணனார் தலைமேல்வைத்திருந்த புஷ்பங்களை விசாலமாகிய மலையில் எழுந்தருளியிருக்கின்ற திருக்காளஹஸ்திநாதருடைய சிரசில்வணக்கத்தோடுசாத்தி இலைகளால் பொருத்தப்பட்ட கல்லையில் இட்டுப் படைத்தஊனமுதத்தைச் சன்னிதிக்கெதிரேவைத்து. (எ-று) (௱௨௪)

கொழுவியதசைகளெல்லாங்கோலினிற்றெரிந்துகோத்தங்.*
கழலுறுபதத்திற்காய்ச்சிப்பல்லினாலதுக்கிநாவிற்.......*
பழகியவினிமைபார்த்துப்படைத்தவிவ்விறைச்சிசால....*
வழகிதுநாயனீரேயமுதுசெய்தருளுமென்றார்......*

(இதன்பொருள்.)

கொழுமையாகிய மாமிசங்களையெல்லாம் அம்பினாற் கோத்து நெருப்பில் பக்குவமான பதத்தோடுகாய்ச்சி அதைப் பல்லினால் அதுக்கி நாவின்பழக்கப்படி உருசிபார்த்துத் தேவரீருக்குப்படைத்த இந்தமாமிசம் மிகவும் நன்றாயிருக்கின்றது. ஆண்டவரே யமுதுசெய்தருள வேண்டுமென்று.(எ-று)௱௨௫

அன்னவிம்மொழிகள்சொல்லியமுதுசெய்வித்தவேடர்..*
மன்னனார்திருக்காளத்திமலையினார்க்கினியநல்லூ.....*
னின்னமும்வேண்டுமென்றுமெழுபெருங்காதல்கண்டு...*
பன்னெடுங்கரங்கள்கூப்பிப்பகலவன்மலையிற்றாழ்ந்தான்..*

(இதன்பொருள்.)

அப்படிப்பட்ட இந்தவார்த்தைகளைச்சொல்லி அன்பினுக்குவாயிலை உண்ணும்படிசெய்த- வேடர்களுக்கு இறைவராகிய கண்ணப்பசுவாமி திருக்காளத்திமலையில் எழுந்தருளிய ஆண்டவர்க்கு இனிமையாகியநல்ல மாமிசம் இன்னும் வேண்டியிருக்கும் என்று எழுகின்ற பெரிய ஆசையைக்கண்டு -அடியார்க்குச்சிரமம் உண்டாகுமென்பதனால்- பலவாகிய நீண்டகிரணங்களாகிய கைகளைகூட்பிக்கொண்டு அஸ்தமனகிரியைச் சூரியன் அடைந்தார்.—(எ-று) (அமுதுசெய்வித்த வென்பதனால்) பரமசிவன் கண்ணப்பசுவாமிபடைத்த திருவமுதை உண்டாரென்க- அவருடைய அன்பு அப்படியிருந்ததுபற்றி. (௱௨௧)

அவ்வழியந்திமாலை யணைதலுமிரவுசேரும்.... .... .....*
வெவ்விலங்குளவென்றஞ்சிமெய்மையின்வேறுகொள்ளாச் *
செவ்வியவன்புதாங்கித்திருக்கையிற்சிலையுந்தாங்கி........*
மைவரையென்னவையர்மருங்குநின்றகலாநின்றார்...... *

(இதன்பொருள்.)

அப்பொழுது மாலைக்காலம் வந்தமாத்திரத்தில் இனி ராத்திரிகாலத்தில் உயிர்களை ஊறுசெய்யச்சஞ்சரிக்கின்ற கொடிய மிருகங்களிந்தமலையி லிருக்கின்றன அதனால்சுவாமிக்கு ஒருவேளை தீங்குவருமென்று பயந்து உண்மையில்நின்றும் வேறுபடாத அழகிய அன்பைத்தாங்கித்திருக்கரத்தில்வில்லையுந்தாங்கிக் கருமையாகிய மலையைப்போல கண்ணப்பநாயனார்சுவாமியினுடையபக்கத்தில்நின்று நீங்காமலிருந்தார்—(எ-று) (௱௨௨)

சார்வருந்தவங்கள்செய்துமுனிவருமமரர்தாமுங்.........*
கார்வரையடவிசேர்ந்துங்காணுதற்கரியார்தம்மை.. .....*
யார்வமுன்பெருகவாராவன்பினிற்கண்டுகொண்டே..... ..*
நேர்பெறநோக்கிநின்றார்நீளிருணீங்கநின்றார்..........*

(இதன்பொருள்)

முனிவர்களுந்தேவர்களும் மேகங்களாற்சூழப்பட்ட மலையையும் வனத்தையுஞ்சேர்ந்து செய்தற்கருமையாகிய தவங்களைச்செய்தும் அறியக்கூடாத பரமசிவத்தை- ஆசையானது அதிகரிக்கக் குறைவில்லாத அன்பினால்தியானித்துக்கொண்டு வேறொன்றையும்பாராமல் சுவாமியின்திருமேனியே பார்த்துக்கொண்டு அனாதியாய்த்தொடர்ந்துவருகின்ற மலம் நீங்க நின்றார்கண்ணப்பசுவாமி.—(எ-று) (௱௨௩)

ர்களாகிய முனிவர்களுடைய தேகத்தின் அருமையாகிய பெரிய பிரகாசத்தினாலும் எமது ஆண்டவராகிய பரமசிவனுடைய திருக்காளத்தி மலையினிடத்தில் எப்போதும் இராத்திரியென்பது இல்லை—(எ-று) (சோதிவிருட்சமென்பது)தெய்வத்தன்மைபொருந்திய பொதியமுதலான மலைகளிலிருந்து பகற்காலத்தில் தோன்றாமல் இராத்திரியில்மாத்திரம் பார்ப்போர்க்குச் சோதியாகத்தோன்றும்-அதன்சமீபத்திற்போயினால் கண்ணுக்குப்புலப்படாது- அந்தவிருட்சத்தினாற் காயசித்தி உண்டாகுமென்கின்றார்கள். (௱௩௧)

வருங்கறைப்பொழுதுநீங்கிமல்கியயாமஞ்சென்று .... ..*
கருங்கிடவறிந்தபுள்ளின்குழுஞ்சிலம்போசைகேட்டுக் .. ....*
கருங்கடலென்னநின்றகண்டுயிலாதவீர .... .... .....*
ரரும்பெறற்றம்பிரானார்க்கமுதுகொண்டணையவேண்டி ..*

(இதன்பொருள்.)

பகல்சென்றவுடனே வருகின்ற மாலைக்காலம்போய் நாழிகை மிகுந்த யாமக்காலமுஞ்சென்றுகுறைய-விடியுநேரத்தையறிந்த பறவைகள் மிகுந்து ஒலிக்காநின்ற சத்தத்தைக்கேட்டு இரவுமுழுது நித்திரையில்லாமல் கறுத்தகடல்போல்நின்ற கண்ணப்பநாயனார் அடைதற்கரியகாளஹஸ்தீசுவரருக்குத்திருவமுதுகொண்டுவரவேண்டுமென்று நினைத்து.—(எ-று) (௱௩௨)

ஏறுகாற்பன்றியோடுமிருங்கலைபுனமான்மற்றும் .... ....*
வேறுவேறினங்கள்வேட்டைவினைத்தொழிலவிரகினாலே ..*
ஊறுசெய்காலஞ்சிந்தித்துருமிகத்தெரியாப்போதின் ....*
மாறடுசிலையுங்கொண்டுவள்ளலைத்தொழுதுபோந்தார் .. ..*

(இதன்பொருள்.)

செங்குத்தான குன்றுகளிலும் ஏறுங்காலினையுடைய பன்றிகளோடும் பெரிய கலைமானும்புனத்திலுள்ளமான்களும் இவையொழிந்த மற்றைமிருகசாதிகளை வேட்டையாடுவதில் சமர்த்தராயிருக்கிறதினாலே கொல்லுங்காலமிதுவென்று நினைத்து ஆருந் தெரியப்படாமலிருக்கும்விடியற்காலத்திலேயே பகைவரை வெல்லத்தக்க வில்லையும் எடுத்துக்கொண்டு சுவாமியை வணங்கிநடந்தார் கண்ணப்பசுவாமி.—(எ-று) (௱௩௩)

(வேறு.)

மொய்காட்டுமிருள்வாங்கிமுகங்காட்டுந்தேரிரவி .... ...*
மெய்காட்டுமன்புடையவில்லவியார்தனிவேட்டை.... ....*

யெய்காட்டின்மாவலைக்கவிட்டகருந்திரையெடுத்தாக் .... *
கைகாட்டுவான்போலக்கதிர்காட்டியெழும்போதில்...... *

(இதன்பொருள்)

மிகுந்த இருளை நீக்கித் தனது மண்டலத்தை வெளியில் தோற்றுகின்ற தேரினையுடைய சூரியன் மெய்ம்மையாகச் செய்யும் பத்தியினையுடைய கண்ணப்பசுவாமி தனியாக வேட்டைக்காகப்போகாநின்ற காட்டில்மிருகங்களை வலைக்கும்பொருட்டுச் சுற்றிலும் இடப்பட்டிருந்த கருநிறமுள்ள திரையைநீக்கிக் கையினால் அந்த மிருகங்களைக் காட்டுகிறவன்போலக் கிரணங்களை விரித்து உதயமானபோதில்.—(எ-று) (௱௩)

எய்தியசிராகமத்திவியம்பியபூசனைக்கேற்பக் .... ...... *
கொய்தமலரும்புனலுமுதலானகொண்டணைந்தார் ...... *
மைதழையுங்கண்டத்துமலைமருந்தைவழிபாடு......... *
செய்துவருந்தவமுடையமுனிவர்சிவகோசரியார் .... .... *

(இதன்பொருள்)

சுவாமியினால் அருளிச்செய்யப்பட்ட சிறந்த காமிகாதியாகமங்களில விதித்திருக்கிறபிரகாரம் செய்கின்ற பூசைக்கு ஏற்கும்படி பரிசுத்தமாகப் பறித்த புட்பங்களும்- நீரும்-முதலானவை கொண்டு சுவாமியின் சன்னிதிக்குவந்தார்- நீலநிறம்பொருந்திய கண்டத்தையுடைய மலையில்வீற்றிருக்கும் அமிர்தம்போன்ற சுவாமியை வழிபாடுசெய்துகொண்டு வருகின்ற தபோமுனிவராகிய சிவகோசரியார்.—(எ-று) (௱௩௪)

வந்துதிருமலையின்கண்வானவர்நாயகர்மருங்கு .... .... *
சிந்தைநியமத்தோடுஞ்செல்கின்றார்திருமுன்பு .... .... *
வெந்தவிறைச்சியுமெலும்புங்கண்டகலமிதித்தோடி...... *
யிந்தவனுசிதஞ்செட்டேனியார்செய்தாரென்றழிவார்.. .. *

(இதன்பொருள்)

சிவகோசரியார் திருக்காளஹஸ்திமலைக்குவந்துதேவர்களுக்கு நாதராகியசுவாமியின் சன்னிதிக்கு நியமம்பொருந்திய மனத்தோடும்போயினார் சுவாமியின்முன் வெந்திருக்கு மாமிசமும் எலும்புகளையுங்கண்டு தூரத்தில்கால்வைத்து ஓடி இப்படிப்பட்ட அனுசிதமானகாரியத்தையார்செய்தார்கள் கெட்டேனென்று விசனப்பட்டார்.—(எ-று) (௱௩௫)

மேவநோவாவஞ்சாவேடுவரேயிதுசெய்தார் ........ *
தேவதேவரீசனெதிருமுன்பேயிதுசெய்து ........ *
போவதேயிவ்வண்ணம்புகுதநீதிருவுள்ள ........ *
மாவதேயெனப்பதறியழுதுவிழுந்தலமந்தார் ........ *

(இதன்பொருள்.)

சந்நிதியை அடைகிறதற்கு மனம்நோவாமலும் அஞ்சாமலும் இருக்கிறவேடர்களேயிந்த அநுசிதஞ்செய் திருப்பார்கள் தேவர்களுக்கெல்லாந் தேவராயிருக்கிற ஆண்டவனே உம்முடையசந்நிதியின்முன்னேதானேயிப்படிப்பட்டதைச்செய்துபோகலாமா இத்தன்மையான காரியஞ்சம்பவிக்கத்திருவுள்ளங்கொள்ளலாமா வென்றுமனம்பதறி யழுதுவிழுந்துகழன்றார் — எ-று)

(௱௬௭)

பொருப்பிலெழுஞ்சுடர்க்கொழுந்தின்பூசனையுந்தாழ்க்கநா *
னிருப்பதினியென்னென்றவ்விறைச்சியும்புடனிலையுஞ் *
செருப்படியுநாயடியுந்திருவலகான்மாற்றியபின் ........ *
விருப்பினொடுந்திருமுகலிப்புனன்மூழ்கிவிரைந்தணைந்தார். *

(இதன்பொருள்.)

மலையில்எழுந்த கொழுந்துபோலுள்ள சுடருருவமான பரமசிவனுக்குச்செய்ய வேண்டியபூசை வேளைசெல்ல நானிருப்பதில் என்னபிரயோசனமென்று அங்கு இறைந்து கிடக்கின்ற மாமிசம் எலும்பு இவைகளோடு செருப்புததரித்த காலின் அடையாளமும் கண்ணப்பசுவாமி வேட்டைக்கெழுந்துபோனவுடனே அந்த இறைச்சியைத் தின்னவந்த காட்டிலுள்ள நாய்களின் அடிகளையும் திருவலகுகொண்டு போகும்படிவிளக்கியபின்பு பத்தியோடு பொன்முகலியாற்றினீரில ஸ்நானஞ்செய்து சீக்கிரமாகவந்தார் சிவகோசாரியார்.—(எ-று) கண்ணப்பசுவாமியோடுவந்த வேட்டைநாயின் அடியென்றுசிலர் கூறுகின்றார்கள் நாணன்-காடன்-இவ்விருவருமே கூட்டிவந்தார்க ளெனமுன்செய்யுள்களிற் சொல்லியிருக்கிறபடியால் அதுபொருந்தாது.

(௱௬௮)

பழுதுபுகுந்ததீர்ப்பவித்திரமாஞ்செயல்புரிந்து ........ *
தொழுதுபெறுவனகொண்டுதூயபூசனைதொடங்கி ........ *
வழுவிறிருமஞ்சனமேமுதலானவரும்பூசை ........ *
முழுதுமுறைமையின்முடித்துமுதல்வனார்கழல்பணிந்தார் *

(இதன்பொருள்)
சுவாமி எழுந்தருளியிருக்கும் இடத்திற்குச் சம்பவித்த அக்கி
னியான திருப்படியாகப்பரிசுத்தச்செய்கையாகிய சம்புரோ
க்ஷணஞ்செய்து வணங்கிக் கிடைத்தவைகளைக்கொண்டு தூய்
மையாகிய பூசைசெய்ய ஆரம்பித்துக் குற்றமற்றதிருமஞ்சன
முதலாகிய அருமையாகியபூசைமுழுதும் முறையோடுமுடித்
து ஆண்டவருடைய பாதத்தில்வணங்கினார்.—(எ-று) (௱௩௯)

பணிந்தெழுந்துதனிமுதலாம்பரனைஞ்றயன்முறையாற் ..*
றுணிந்தமறைமொழியாலேதுதிசெய்துசுடர்த்திங்க.....*
ளணிந்தசடைமுடிக்கற்றையங்கணனாவிடைகொண்டு ....*
தணிந்தமனத்திருமுனிவர்தபோவனத்தினிடைச்சார்ந்தார். *

(இதன்பொருள்)
வணங்கி யெழுந்து ஒப்பற்றமுதலவராகியபரமனொன்று பலத்
ரம் நிச்சயமாகச்சொல்லுகின்ற வேதவாக்கியங்களாலே ஸ்
தோத்திரம்பண்ணிக்கிரணம்பொருந்திய சந்திரனைத்தரித்த க
ற்றையாகிய சடைமுடியையுடைய சுவாமியினிடத்தில் நின்று
ம் விடைபெற்றுக்கொண்டு அடங்கிய மனத்தையுடையசிவகோ
சரியார் தாம் தவம்பண்ணுகின்ற வனத்திற்குச் சேர்ந்தார்.
(எ-று) (௱௪௰)

இவ்வண்ணம்பெருமுனிவரேகினரினியிப்பால் .... ....*
மைவண்ணக்கருங்குஞ்சிவனவேடர்பெருமானார் .... ....*
கைவண்ணச்சிலைவளைத்துக்கான்வேட்டைதனியாடு .... ..*
செய்வண்ணத்திறமொழிவேன்றீவினையின்றிறமொழிவேன். *

(இதன்பொருள்)
இந்தப்பிரகாரம் பூசைசெய்து பெருமைபொருந்திய முனிவ
ரானவர் போயினர்-இனி-இவ்விடத்தில் மைபோல் கரியநிறத்
தைப் பொருந்திய தலைமயிரினையுடைய வனத்திலுள்ள வேட
ர்களுக்கு இறைவராகிய கண்ணப்பசுவாமிகையிலேந்திய அழ
குபொருந்திய வில்லைவளைத்துக் காட்டில் தனியாகவேட்டை
யாடுவதில் வெவ்வேறான வல்லமையைச்சொல்லத் தொடங்
குவேன்-வலிபொருந்திய பாவங்கள் ஒழிய நிற்கின்ற யான்.
(எ-று) (௱௪௧)

திருமலையின்புறம்போயதிண்ணனார்செறிதுறுகற் ..... ..*
பெருமலைகளிடைச்சரியிற்பெரும்பன்றிபுனமேய்த்து ....*

ருவனவுந்துணிபடுத்துமானினங்கள்கானிடைநின் . . . . . *
றொருவழிச்சென்றேறுதுறையொளிநின்றுகொன்றருளி . . *

(இதன்பொருள்)

தெய்விகமாகிய காளஹஸ்திக்குப் புறத்திற்போனகண்ணப்ப நாயனார்நெருங்கிய துறுங்கற்களையுடைய பெரிய மலைகளிடத் திலுஞ் சரிவாயிருக்கின்றவிடத்திலும்புனத்திலுள்ள பலங்களை மேய்ந்துவருகின்ற பெரிய பன்றிகளையும் கொன்று மான்கள் காட்டினடுவினின்று ஒருவழியாகப்போ யேறுகின்றவழியில் ஒளித்துநின்று அவைகளைக்கொலைசெய்து.—(எ-று) (௱௪௨)

பயில்விளியாற்கலையழைத்துப்பாடுபெறவூடுருவ . . . . . . . . *
மயின்முகவெங்கணைபோக்கியடியொற்றிமானினங்க . . . . *
ளியிலிடையிற்கிடையெய்துதொடர்ந்துகடமைகளெய்து . . *
வெயில்படுவெங்கதிர்முதிரத்தனிவேட்டைவினைமுடித்தார். . *

(இதன்பொருள்.)

கூப்பிடும்பயிலோசையால் கலைமானையழைத்து வருத்தப்ப டத்தைத்து உருவத்தக்க கூர்மைபொருந்திய நுனியையுடை யவெவ்விதாகிய அம்புகளைவிட்டு அடியினடையாளங்களைப் பற்றித்தொடர்ந்துநித்திரைசெய்யும்போது மனாமிருகங்களி ன்கூட்டத்தையெய்து குறிபற்றிகடமைமிருகங்களையுங் கொ ன்றுகாந்திபொருந்திய சூரியன் உச்சியில் வரும்போது ஒப் பற்ற வேட்டைத்தொழிலை முடித்தார்.—(எ-று) (௱௪௩)

பட்டவனவிலங்கெல்லாம்படர்வனத்திலொருசூழ . . . . . . . . *
லிட்டருகுதீக்கடைகோலிருஞ்சுரிகைதனையுருவி . . . . . . . . *
வெட்டிநறுங்கோற்றேனைமிகமுறித்துத்தேக்கிலையால் . . . . *
வட்டமுறுபெருங்கல்லைமருங்குபுடைபடவமைத்தார் . . . . *

(இதன்பொருள்.)

கண்ணப்பசுவாமி தம்மாற்கொல்லப்பட்ட மிருகங்களெல்லா ம் மரங்கள்நெருங்கிய வனத்தினொருபுறத்தில் இட்டுப் பெரு மைபொருந்திய தடைதுவாளையுருவி நெருப்பையுண்டாக்குங் கோல் ஒன்றையேற்படுத்தி நல்லகொம்பிலுள்ள தேனைமிகவு மிழித்து தேக்கிலையினால் வட்டமாகத்தைக்கப் பட்டபெரிய கல்லையினிடத்தில் நிறையும்படிவார்த்தார்.—(எ-று) (௱௪௪)

இந்தனத்தைமுறித்தடக்கியெரிகடையுமரணியினில் ....... *
வெந்தழலைப்பிறப்பித்துமிகவளர்த்துமிருகங்கள் .... ..... *
கொந்தியயிலலகம்பாற்குட்டமிட்டுக்கொழுப்பரிந்து .... *
வந்தனகொண்டெழுந்தழலில்வக்குவனவக்குவித்து .. ..... *

(இதன்பொருள்)

விறகைமுறித்து அடுக்கி நெருப்புக்கடையும் அரணிக்கோலால் வெப்பமாகிய நெருப்பை உண்டாக்கி அதிகமாக மூட்டித் தாங் கொண்டுவந்த மிருகங்களைக்கொர்த்திக் கொழுப்பாயுள்ள மாமிசத்தை அரிந்துகூர்மைபொருந்தியகவர்களையுடைய அம்பினாற் கோத்துக்கொண்டுவந்து அவைகளில் வதக்கவேண்டினவற்றை வதக்கி.—(எ-று)(வக்குவன)- வதக்கு என்னுஞ் சொல்லின் நடுக்குறைந்ததென்னும் கிராமிய மொழியென்றுஞ் சொல்வார்கள். (௱௪௫)

வாயம்பாலழிப்பதுவும்வகுப்பதுவுஞ்செய்தவற்றி ..... .. *
னாயவுறுப்பிறைச்சியெல்லாமரிந்தொருகல்லையிலிட்டுக் .. *
காயநெடுங்கோல்கோத்துக்கனலின்கணுறக்காய்ச்சித் .... *
தூயதிருவமுதமைக்கச்சுவைகாணலுறுகின்றார்..... .... *

(இதன்பொருள்)

கூர்மைபொருந்திய அம்பினால் அழித்தும் - கீறியும் வேறுக்கப்பட்ட அம்மிருகங்களின் கைகால்முதலிய உறுப்புகளின் இறைச்சியெல்லாம் துண்டித்து ஒருகல்லையிற்போட்டு நீண்ட அம்பிலே கோத்து நெருப்பில்காயும்படியாக மிகவுங்காய்ச்சிப் பரிசுத்தம்பொருந்திய திருவமுதுசுவாமிக்குஏற்படுத்த - அந்த மாமிசத்தை வாயிலிட்டுஉருசிபார்த்தார்.—(எ-று) (௱௪௬)

எண்ணிறந்தகடவுளருக்கிடுமுணவுகொண்டூட்டும் .... .... *
வண்ணவெரிவாயின்கண்வைத்ததெனக்காளத்தி .... .... *
யண்ணலார்க்காம்பரிசுதாஞ்சோதித்தமைப்பதற்குத் .... *
திண்ணனார்திருவாயிலமைத்தாரூன்றிருவமுது .... ..... *

(இதன்பொருள்)

அளவில்லாததேவர்களுக்கு இடவேண்டிய உணவைத்தான்பெற்றுக்கொண்டு பின்பு அவர்களையுண்பிக்கும் நிறம்பொருந்திய அக்கினியானது - தன்வாயினிடத்தில் கொண்டுஉருசி பார்ப்பதுபோல்திருக்காளஹஸ்திமலையில் எழுந்தருளியிருக்கும் ப

நமச்சிவனுக்கு - இவை-இவையாகும் என்கிற தன்மையைப் பரிசோதித்து எற்படுத்துவதற்குத் திண்ணனார் தமது வாயில் சுவாமிக்குப்படைக்கவேண்டிய ஊனுடைய திருவமுதையிட்டுச்சுவை பார்த்தார்.(எ-று) யாகஞ்செய்யுங்காலத்தில் தேவர்களுக்குத் திருப்தியாக அவர்கள் பெயரைச்சொல்லி நெருப்பில் ஆகுதி பண்ணுதலால் அன்னமுதலானவைகளை அந்த அக்கினிதான்முன்னே சுவைபார்த்துத் தேவர்களுக்குக் கொடுப்பது போலவென்றார். (௱௪௭)

நல்லபதமுறவெந்துநாவின்கணிடுமிறைச்சி .............. *
கல்லையினிற்படைத்துத்தேன்பிழிந்துகலந்ததுகொண்டு .. *
வல்விரைந்துபள்ளித்தாமமுந்தூயமஞ்சனமு .......... *
மொல்லையினின்முன்புபோலுடன்கொண்டுவந்தணைந்தார் *

(இதன்பொருள்.)

நல்லபதமாகவெந்தபின்பு நாவில்இட்டு இனிப்பாயிருக்குமாமிசத்தைக் கல்லையில்படைத்துத் தேனைப்பிழிந்துஇரண்டினையுங்கலந்து அதனைஎடுத்துக்கொண்டு விரைவாகச்சென்று புஷ்பங்களும்பரிசுத்தமாகிய நீரும் நொடிப்பொழுதில் முன்பு போல் குடுமியிலும் வாயிலும் பெற்றுக்கொண்டு சுவாமியினிடத்திற்குவந்தார்.— (எ-று) நல்லபதம் என்றது அடிக்குவமும் அதிபக்குவமுமின்றியுள்ளதை. (௱௪௮)

வந்துதிருக்காளத்திமலையேறிவனசரர்க .................. *
டந்தலைவனரிமையோர்தலைவனார்தமையெய்தி ............ *
யந்தணனார்பூசையினைமுன்புபோலகற்றியபின் ........... *
முந்தைமுறைதம்முடையபூசனையின்செயன்முடித்தார் ... *

(இதன்பொருள்.)

வேடர்களுக்குத் தலைவராகிய திண்ணனார் திருக்காளஹஸ்திமலையில் ஏறித் தேவர்களுக்குத் தேவராகிய சுவாமியைஅடைந்து சிவகோசரியார்சுவாமியின்திருமுடியில் அர்ச்சனைசெய்திருந்தமலர்களை முன்புபோல் தமது செருப்புக்காலால்நீக்கியபின்பு தாம்செய்ய வேண்டிய பூசையைமுன்பு போல்செய்தார்— (எ-று) (௱௪௯)

ஊனமுதுகல்லையுடன்வைத்திதுமுன்னையினன்று ........ *
வேனமொடுமான்கலைகண்மரைகடமையிலைவந்தி .... *
லானவுதப்பிறைச்சியமுதடியேனுஞ்சுவைகண்டேன் .... *
தேனுமுடன்கலந்ததிதுதித்திக்குமெனமொழிந்தார் ... *

(இதன்பொருள்.)

கல்லையில் இட்டிருக்கும் ஊனமிர்தத்தைச் சன்னிதியின்முன்னே வைத்து இந்தஅமுது முன் கொண்டுவந்ததுபோலன்று-பன்றியோடு மான்கலை மரையின்மாமிசம் இவை இவைகளாம் இவைகளில் அவற்றின் அவயவங்களின் அமுதம்போன்றஇறைச்சியை அடியேனும் உருசிபார்த்திருக்கின்றேன் இதுதேனும் கூடக்கலந்திருக்கின்றது தேவரீருக்குத்திருப்தியாயிருக்குமென்றுசொன்னார் —(எ-று) (௱௫௰)

இப்பரிசுதிருவமுதுசெய்வித்துத்தம்முடைய ..........*
வொப்பரியபூசனைசெய்தநெறியிலொழுகுவா ........ *
ரெப்பொழுதுமேன்மேல்வந்தெழுமன்பாற்காளத்தி ....*
யப்பரொடிரவிலுறங்கார் பகல்வேட்டையாடுவார்........*

(இதன்பொருள்.)

நாள்தோறும் மேன்மேலாக உண்டானபத்தியினாலேதிருக்காளஹஸ்தியி லெழுந்தருளியிருக்கும் பரமசிவன் சன்னிதிக்கெதிரே நின்று இராத்திரிகாலமுழுவதும் நித்திரைசெய்யாதவராய்ப்பகற்பொழுதில் வேட்டையாடுகின்றகண்ணப்பசுவாமி இந்தப்பிரகாரம்அமுதுசெய்வித்துத்தாம்செய்யவேண்டிய ஒப்பில்லாதமற்றைப்பூசையுஞ் செய்து அந்தமார்க்கத்தின்படி நடத்திக்கொண்டு வருவார்.—(எ-று) (௱௫௧)

மாமுனிவர்நாடோறும்வந்தணைந்துவனவேந்தர் .... ..*
தாமுயலும்பூசனைக்குச்சாலமிகத்தளர்வெய்தித் .... ....*
தீமையெனவதுநீக்கிச்செப்பியவாகமவிதியா ..........*
லாமுறையிலர்ச்சனைசெய்தந்நெறியிலொழுகுவார். ....*

(இதன்பொருள்.)

பெருமைபொருந்திய முனிவராகியசிவகோசரியார் நாள்தோறும்சுவாமிசன்னிதிக்குவந்துகண்ணப்பசுவாமி முயன்றுசெய்தபூசையைக்குறித்து அதிகமாகத்தளர்ச்சியை அடைந்து தீதாயிருக்கின்றதேயென்று அசுத்தமாய்க்கிடக்கின்ற வஸ்துக்களை நீக்கிப்பெருமையாகச்சொல்லப்பட்ட ஆகமவிதிப்பிரகாரம் முறையாக அர்ச்சனைசெய்து அவ்வண்ணமே நடத்திக்கொண்டிருந்தார்.—(எ-று) (௱௫௨)

நாணனொடுகாடனும்போய்நாகனுக்குச்சொல்லியபி ....*
னூணுறக்கமின்றியணங்குறைவாளையுங்கொண்டு.......*

பேணுமகனார்தம்பால் வந்ததெல்லாம்பேதித்துக்.... ....*
காணுநெறிதங்கள்குறிவாராமற்கைவிட்டார்.. .... ...*

(இதன்பொருள்.)

நாணனும் காடனும் போய்நாகனுக்குத் திண்ணனுடையசெய்கையைச்சொல்லியபின்பு அவன் அன்னம் ஆகாரமில்லாமல் சிலஆட்களையும் தேவராட்டியையும் அழைத்துக்கொண்டு விருப்பமுள்ள தன் மகனாரிடத்துக்குவந்து வேண்டியவற்றையெல்லாஞ்சொல்லி அவர்மனதைப்பேதித்துத் தாங்கள்பெறவேண்டியதன்மை தங்கள் எண்ணப்படிநிறைவேறாதபடியால் கண்ணப்பசுவாமியைவிட்டுப் போய் விட்டார்கள்—(எ-று) (௱௩௫)

முன்புதிருக்காளத்திமுதல்வனாருணர்க்கா.............*
லின்புறுவேதகத்திரும்புபொன்னானாற்போலியாக்கைத் ..*
தன்பரிசம்வினையிரண்டுஞ்சாருமலமூன்றுமற .........*
வன்புபிழம்பாய்த்திரிவாரவர்கருத்தினளவினரோ....... *

(இதன்பொருள்.)

முதலில்திருக்காளஹஸ்தியில்வீற்றிருக்கும் பரமசிவனுடைய கிருபாகடாக்ஷத்தால்உயர்ந்தரசவேதையில்இரும்பானதுபொன்னானதுபோல் உடலின்தன்மையும் நல்வினை தீவினையென்னும் இரண்டும் ஆணவங்-காமியம்-மாயை-என்கிற மும்மலங்களும் நீங்க அன்பின்கூட்டம் ஒருருக்கொண்டதுபோல் இருக்கின்றகண்ணப்பசுவாமி அவர்கருத்தினளவில் நிற்காதவரானார்—(எ-று) இச்செய்யுள் இருவினையொப்பும் மலபரிபாகமும், கண்ணப்பசுவாமிகளுக்கு உண்டாயினவென்பது விளக்கிற்று(அவர்கருத்தினளவினரோ) என்பதினால் சுவாமியின்வசப்பட்டாரென்றுணர்க. (௱௩௬)

அந்நிலையிலன்பனார்நிற்கநெறிபூசிப்ப.... .... .... ..*
மன்னியவாகமப்படியான்மாமுனிவர்சித்திங் .... ....*
கென்னுடையநாயகனேயிதுசெய்தாரமைக்கானே ....*
னுன்னுடையதிருவருளாலொழித்தருளவேண்டுமென ....*

(இதன்பொருள்)

மேற்சொன்ன நெறியில்நிற்கின்ற கண்ணப்பசுவாமி தமக்குத்தெரிந்த அளவில் சுவாமிக்குப்பூசைபண்ண நிலைபெற்ற

நாக்மவிதிப்பிரகாரம் சிவகோசரியார் அர்ச்சித்து நம்முடைய ஆண்டவரே, இவ்விடத்தில்இப்படிஅக்ருத்தியத்தைச்செய்த மனிதர்களைப் பார்க்கவில்லைஆதலால்தேவரீரதுகிருபையால் இத்தன்மையான செய்கை இனிஉண்டாகாமலிருக்கஅருள்செய்ய வேண்டுமென்றுசொல்லிப்போக.—(எ-று)(அநீந்தநெறிபுனித்தலாவது) யாகத்திலன்றிநைவேத்தியமாகமாமிசத்தைச்சுவாமிக்குப்படைக்கலாகாதென்பதும், வாயிற்கொண்டுவருநீர் எச்சிலென்றும், தம்முடையதலையில்வைத்தபூசார்த்தப்படாதென்றும், மிகவுங்குறைவுள்ளகாற்செருப்பு திருமுடியில்படக்கூடாதென்றும், அசுசாரமாயிருந்து சுவாமியின்விஷயமாகவொருவேலையுஞ்செய்யக்கூடாதென்றும், அறிந்துகொள்ளாமல் தாம்முதலில் கைலாசபதியைத்தரிசித்தபோது சிரசில்நீர்வார்த்துமடீயிட்டிருப்பதையும்ஒருபார்ப்பான் எதையோகொண்டுவந்துபடைத்தானென்று சொன்னதையும், உறுதியாகஎண்ணிஇப்படிச்செய்வதேசுவாமிக்குத் திருவுளமென்றுதாம் அவ்வாறுசெய்யட்புறப்பட்டுட்பாத்திரம் இல்லாமையால் அபிஷேகத்துக்குஜலத்தை வாயில்வைத்துக்கொண்டு ஒருகையில் மாமிசமுந்தேனுந்தங்கிய கல்லையும், மற்றொன்றில் அம்பும்வில்லுமிருத்தலபத்திக் கால்களாற்பத்திரபுஷ்பங்களை முடியிலிருந்துதள்ளியும், தாம்புலாலையுண்பதுபோல் கடவுளுண்பதொன்றுஎண்ணிசாப்பிடுக சாப்பிடுகவென்றுவேண்டிக்கொண்டும், எங்குநிறைந்து முடிவிலாத ஆற்றலையுடையவராயாவரிடத்தும் தின்றும் பயமில்லாத சுவாமியைப்பார்த்து உமக்குத்துணையிலலாமல் தனியாயிருக்கின்றீரோவென்று காத்தும் நடத்தசெய்கையாம். (௱௫௫)

அன்றிரவுகனவின்கணருமுனிவர்தம்பாலே ........... ✽
மின்றிகழுஞ்சடைமவுலிவேதியர்தாமெழுந்தருளி .. .. .. ✽
வன்றிறல்வேடுவனென்றுமற்றவனைநீநினையேல் ........... ✽
நன்றவன்றன்செயறன்னைநாமுரைப்பக்கேளென்று .... ✽

(இதன் பொருள்.)

சிவகோசரியார் இந்தவண்ணம் மனஸ்தாபப் -பட்டுக்கொண்டுபோன அன்றிராத்திரியில் மின்னலைப் போல்பிரகாசிக்கின்ற சடைமுடியையுடைய பரமசிவனானவர் சொப்பனத்தில் அவரிடத்துக் குஎழுந்தருளிவந்து வன்செய்கையுள்ளவேடுவனாக அவனை நினைக்காதே அவனுடையநல்ல செய்கைகளை நாம் சொல்லக்கேளென்றும்—(எ-று) (௱௫௬)

அவனுடையவடிவெல்லாநம்பக்கலன்பென்று .......... *
மவனுடையவறிவெல்லாநமையறியுமறிவென்று ........ *
மவனுடையசெயலெல்லாநமக்கினியவாமென்று ......... *
மவனுடையநிலையிவ்வாறறிநீயென்றருள்செய்தார் ....... *

(இதன்பொருள்)

நீவேடனாகநினைத்த அவனுடைய உருவமெல்லாம் நம்மிடத்தி
லேபொருந்தியிருக்கும் அன்பின்வடிவேயென்றும், அவனுடை
யஐம்புல அறிவுகளும் நம்மை அறிகிறதற்கு உண்டான அறி
வேயென்றும், சாஸ்திரவிரோதமாயிருந்தாலும் அவன்செயல்
கள்நமக்கினியனவாயிருக்கின்றனவென்றும், அவனுடையஸ்தி
தியானது- இத்தன்மையாயிருக்கின்றது. அதைநீயறிந்துகொ
ள்ளென்று கட்டளையிட்டார்.—(எ-று) (௱௫௭)

பொருப்பினில்வந்தவன்செய்யும் பூசனைக்குமுன்பென்மே *
லருப்புறுமென்மலர்முன்னையவைநீக்குமாதரவால்.. .... *
விருப்புறுமன்பெனும்வெள்ளக்கால்பெருகிற்றெனவீழ்ந்த *
செருப்படியவ்விளம்பருவச்சேயடியிற்சிறப்புடைத்தால .. *

(இதன்பொருள்)

மலையிலேறிவந்து அவன்நமக்குப் பூசைசெய்வதற்கு முன்னு
ன் எமதுமுடியில்சாத்தப்பட்டுள்ள அரும்பினது நிறைவு பெற்
று அன்றுமலர்ந்த உள்ளும் முன்சாத்தப்பட்ட புஷ்பங்களை நீக்
கித்தான்கொண்டுவந்தமலரைத்தரிக்கவேண்டுமென்கிற ஆசை
யினாலே விருப்பத்தைக்கொடுக்காநின்ற அன்பாகியசமுத்திர
த்தினதுகாலானதுபெருகினதுபோன்றஎமதுமுடியில்பட்ட
அவனது செருப்பினையுடையகாலானதுமிக்க இளம்பருவத்தை
யுடையகுழந்தையினதுகால்படுவதைப்பார்க்கிலுமிகவுமானந்
தமாயிருக்கின்றது - எ-று இளம்பருவச்சேய்-என்பதற்கு-எ
ப்போதும் இளமைத்தன்மை நீங்காதசுப்பிரமணியரென்ற
பொருள்கூறி அவர்காலின்பரிசத்தைப் பார்க்கிலும் இனியதா
யிருக்கின்றதென்பது ஒருபட்சம். (௱௫௮)

உருகியவன்பொழிவின்றிநிறைந்தவவனுருவென்னும் .. .. *
பெருகியகொள்கலமுகத்திற்பிறங்கியினிதொழுகுதலா .... *
லொருமுனிவன்செவியுமிழுமுயர்கங்கைமுதற்றீர்த்தப் .. .. *
பொருபுனலினெனக்கவன்றன்வாயுமிழும்புனிதம் ... *

(இதன்பொருள்.)

உருக்கத்துக்குள்ளதாகிய அன்பானது குறைவின்றி நிறைந்த
அவனது தேகமாகிய பாத்திரத்தின் முகத்தில் வாயால் அமைக்
காக உமிழப்பட்ட நீரானது பிரகாசித்தொழுகின்றபடியால்
அது சன்னுவென்னுமொருமுனிவன்றனது காதினூல்வெளியில்
வரச்செய்த உயர்ந்த கங்கை முதலாகிய தீர்த்தங்களின்
அலைகளாலே மோதுகின்ற நீரைப்பார்க்கிலும் நமக்குப்பரிசு
த்தமுள்ளதாயிருக்கின்றது — எ-று. பகீரதன் - பரமசிவனை
நோக்கித்தவஞ்செய்து கங்கையை அவர்சடையினின்றும் பெ
ற்றுக்கொண்டுவரும்போது கங்கை செல்லுமார்க்கத்தில் தவஞ்
செய்துகொண்டிருந்த சன்னுவென்பவர் அத்தவத்திற்கு ஒரு
இடையூறுண்டாகுமெனக்கருதிக் கங்கையைப் பானஞ்செய்து
விட்டபகீரதன் தன்பின்னே கங்கைவாராததைக்கண்டு ரிஷியால்
இப்படிநேரிட்டதென்றறிந்து அவரை நோக்கித்தவஞ்செய்தா
னாக அப்போது சன்னுமுனி அவனுக்கிரங்கிக் கங்கையைக் கா
தின்வழியாகப்பூமியில்விட்டார். ஆதலால் ஒருமுனிவன் செவியு
மிழுமுயர்கங்கையென்றார். (௱௫௧)

இம்மலைவந்தெனையடைந்தகானவன்றனியல்பாலே .......*
மெய்ம்மலருமன்புமேல்விரிந்தனபோல்விழுதலாற் ...... *
செம்மலர்மேலயனொடுமான்முதற்றேவர்வந்துபுனை .... *
யெம்மலருமவன்றலையாலிடுமலர்போலெனக்கொவ்வா ...*

(இதன்பொருள்.)

இந்தமலையில் ஏறிவந்து எம்மையடைந்த அந்தவேடனானவ
ன் உண்மையான பத்தியோடு இயற்கையாக அவன் இடுகின்ற
புஷ்பங்களும் அன்பானது மேலேவிரிந்திருப்பதுபோல்விழு
கின்ற படியால் சிவந்ததாமரைப்பூவில் வாசஞ்செய்கின்ற பிர
மாவோடு விஷ்ணுமுதலாகிய தேவர்களும் வந்து அர்ச்சிக்கி
ன்றனப்படிப்பட்ட புஷ்பங்களும் அவன் தலையில் வைத்துக்
கொண்டுவந்து இடுகின்றபுஷ்பங்களுக்குச் சமானமாக இருக்
காதனவாம் — (எ-று) எம்மலருமென்பது எக்காலத்தும்வா
டாமல் ஒருதன்மைத்தாய்த் தேன்பொழிந்து நறுமணம்வீசு
ம் கற்பகமலர்முதலானவற்றைச் சொல்லியபடியாம். உறுதி
யானஅன்பின்றி அர்ச்சிக்கப்படும்அம்மலர்கள் இவ்வுலகத்திலு
ள்ளனவாய்க்காட்டில்வாசனையின்றிவாடிப்போகும்புஷ்பங்க
ளாயினும் இவன் உண்மையானஅன்போடு தரித்தலால் இவை
களுக்கு ஒவ்வாமற்போயின. (௱௫௨)

வெய்யகனற்பதங்கொள்ளவெந்ததோவெனுமன்பால் ..*
மையுமனத்தினிமையினினேய்மிகவெய்திடலாற் ..........*
செய்யுமறைவேள்வியோர்முன்புதருந்திருந்தவியி .. ....*
லெய்யும்வரிச்சிலையவன்றானிட்டவூனெனக்கினிய .. ......*

(இதன்பொருள்.)

வெப்பமாகியநெருப்பில் காய்ச்சி-பதமாகவெந்திருக்கின்றதா அதைப் பரீட்சிக்கவேண்டுமென்னும் அன்பினாலேயுருக்கமுள்ளமனதோடு தையும்படிமெல்கிறபடியாக் வேதவிதிப்படியாகவுஞ்செய்கின்றபெரியவர்கள்கொடுக்கின்றநல்ல அவிர்ப்பாகமாகியவுணவைப்பார்க்கிலும்எய்கின்றநீண்டசிலையுடையஇவ்வேடனானவன் படைத்தமாமிசம்எமக்கினியனவாயிருக்கின்றன.—(எ-று) (௱௬௧)

மன்பெருமாமறைமொழிகள்மாமுனிவர்மகிழ்ந்துரைக்கு ..*
மின்பமொழித்தோத்திரங்கண்மந்திரங்களியாவையினு ....*
முன்பிருந்துமற்றவன்றன்முகமலர்வகநெகிழ்ந்த .........*
வன்பினினைந்தெனையல்லாலறிவுறாமொழிநல்ல ...........*

(இதன்பொருள்)

பெருமைபொருந்திநிலைபெற்றதெய்வீகமுள்ள வேதவாக்கியங்களும் தலைசிறந்தமுனிவர்கள் ஆனந்தத் தோடுசொல்கின்றஸ்தோத்திரரூபமாகிய அன்புள்ளமொழிகளும் இவைகளன்றி மந்திரங்களாயிருக்கின்றனவும் ஆகிய இவ்வெல்லாவற்றினும், முன்பாகஇருந்துக்கொண்டுஅந்தவேடன்முகமலர்ச்சியைஅடைந்து-மனதுஉருக-அன்பாகநினைந்துவேறொருவராயும்புகழாமல்தம்மைக்குறித்துப்புகழுஞ்சொற்களே இனியனவாம்.—(எ-று) வேதமுதலானவைகள் பலதேவரையும் ஒவ்வோரிடத்தில் அவர்களைச்சிறப்பிக்கும்பொருட்டுப் புகழ்தலாலப்பரமசிவனை மாத்திரம்புகழும்இவ்வார்த்தைகள் அவைகளுக்குச்சிறந்தனவாயின. (௱௬௨)

உனக்கவன்றன்செயல்காட்டநாளைநீயொளித்திருந்தா ...*
லெனக்கவன்றன்பரிவிருக்கும்பரிசெல்லாங்காண்கின்றாய் ...*
மனக்கவலையொழிகென்றுமறைமுனிவர்க்கருள்செய்து .. *
புனற்சடிலத்திருமுடியாரெழுந்தருளிப்போயினார் ........*

(இதன்பொருள்.)

உனக்கு அப்படிப்பட்ட அடியவனது செய்கையை நாம்காண்பிக்கிறதற்கு நாளைநீ இவ்விடத்தில்தானே யொளித்துக்கொண்டிருந்தால் நமதுவிஷயத்தில் அவன்செய்யும் அடிமைத்திறத்தின் தன்மையெல்லாம்பார்த்துக்கொள்வாய் ஆதலால் அவ்வேடன்செய்தது இழிவென்றுதோன்றியதனால் உண்டானமனோதுக்கத்தை யொழித்துவிடென்று பெருமைபொருந்தியசிவகோசரியார்க்கு அருள்செய்து கங்கையைத்தரித்தசடையையுடைய முடியாராகிய பரமசிவனெழுந்தருளினார்.(எ-று)

கனவுநிலைநீங்கியபின்விழித்துணர்ந்துகங்குலிடைப் ...... *
புனைதவத்துமாமுனிவர்புலர்வளவுங்கண்டுயிலார் .... .... *
மனமுறுமற்புதமாகிவரும்பயமுமுடனாகித் ............ *
துனைபுரவித்தனித்தேர்மேற்றோன்றுவான்கதிர்தோன்ற .. *

(இதன்பொருள்.)

தவமேதமக்கு ஆபரணமாகவுடைய சிவகோசரியார்நடுராத்திரிப்பொழுதில் சொப்பனத்தினதுநிலை ஒழிந்தபின்பு விழித்துச் சுவாமி யருள்செய்ததை உணர்ந்துகொண்டுவிடியுமளவும் நித்திரைசெய்யாதவராய்த் தம்முடையமனதில் ஒருமிகுந்த ஆச்சரியமும் பயமும் உடனே உண்டாகியிருக்க விரைவாகச்செல்லுகின்ற குதிரைகள்பூட்டிய ஒப்பற்றதேர்மேல்தோன்றுகின்ற சூரியனதுஉதயமானது தோன்ற.—(எ-று)(௱௬௪)

முன்னைநாள்போலவந்துதிருமுகலிப்புனன்மூழ்கிப், ..... *
பன்முறையுந்தம்பிரானருள்செய்தபடிநினைந்து.. ..... *
மன்னுதிருக்காளத்திமலையேறிமுன்புபோற் ............ *
பிஞ்ஞகனைப்பூசித்துப்பின்பாகவொளித்திருந்தார்.. .... *

(இதன்பொருள்.)

முதல்நாள்போல்திருமுகலியாற்றிற்குவந்து அதனீரில் மூழ்கிப் பரமசிவன் கனவில்வந்து கட்டளையிட்டருளியதன்மையைப் பலதரமும்நினைந்துகொண்டுநிலைபெற்ற திருக்காளஹஸ்திமலையிலே வந்துமுன்புபோல்சுவாமியைப்பூசித்து அவர்க்குப்பின்புறத்தில்ஒளித்திருந்தார் சிவகோசரியார்.—(எ-று) (பின்பாக ஒளித்திருந்தார்) என்பதனால்சுவாமியின்பின்புறத்திலுள்ளமாங்கல்முதலானவை சார்பாக வொளித்தனரெனப் பொருள்கொள்க. பிஞ்சகன்-எது-பிஞ்ஞகனெனத்திரிந்தது. (௱௬௫)

(வேறு.)

கருமுகிலென்னநின்றகண்படாவில்லியார்தாம் ...... *
வருமுறையாறுநாளில்வருமிரவொழிந்தகாலை....... ..... *
பருமறைமுனிவனார்வந்தணைவதன்முன்புபோகித் ...... *
தருமுறைமுன்புபோலத்தனிப்பெருவேட்டையாடி .. .. *

(இதன்பொருள்)

கருமையாகியமேகம்போன்று உறங்காமல் சுவாமியைப்பாதுகாத் துக்கொண்டுநிற்கின்ற திண்ணனார் கிரமமாய்வருகின்றஆறாம்நா ளில் ஐந்தாநாள் இராத்திரிப்பொழுது விடிந்தபோதே அரிய வேதங்களைக்கற்றறிந்த சிவகோசரியார் பூசைசெய்ய வருகி றதற்குமுன்னே முன்நிதமும்போகும் வழக்கம்போலக்காட் டிற்குப்போய் ஒப்பற்றவேட்டையாடி.—(எ-று) (௱௬௬)

மாறிலூனமுதுநல்லமஞ்சனப்புனலுஞ்சென்னி .........*
யேறுநாண்மலரும்வெவ்வேறியல்பினிலமைத்துக்கொண்டு *
தேறுவார்க்கமுதமானசெல்வனார்திருக்காளத்தி .. .. ..*
யாறுசேர்சடையார்தம்மையணுகவந்தணையாநின்றார் .. ...*

(இதன்பொருள்.)

குற்றமற்றமாமிசமாகிய திருவமுதும் தெளிவாகிய திருமஞ்ச னநீரும் திருமுடியில்சாத்துகிறதற்கு அப்பொழுது மலர்ந்த பூவும் வேறுவேறான தன்மையோடுஅமைத்துத்தம்மை உண் மைக்கடவுளென்று தெளிந்து அன்பு செய்கின்றவர்களுக்கு அமிர்தம்போன்ற அஷ்டசித்தியாகிய பாக்கியத்தை யுடைய திருக்காளஹஸ்தியில் எழுந்தருளியிருக்கின்ற கங்கையை த்தரித்த சடையினராகிய பரமசிவனை அடையும்படி வந்து கொண்டிருந்தார்.—(எ-று) (௱௬௭)

இத்தனைபொழுதுந்தாழ்த்தேனெனவிரைந்தேகுவார்முன் ..*
மொய்த்தபல்சகுனமெல்லாமுறைமுறைதீங்குசெய்ய. ... *
வித்தகுதீயபுட்களீண்டமுன்னுமிராங்காட்டு ....... .....*
மத்தனுக்கென்கொல்கெட்டேனடுத்ததென்றணையும்போதில்

(இதன்பொருள்.)

இவ்வளவுபொழுதும் சுவாமியினிடத்துக்குப்போகாமல்தாழ் த்தேனேயென்று சீக்கிரமாகப்போகின்றகண்ணப்பசுவாமிக் குமுன்னேமுறைமுறையாகத் தீங்கினைக்கொடுக்கும் பலபல

வாகிய சகுனங்களெல்லாம் உண்டாகப்பார்த்து இப்படிப்பட்ட கெடுதியானசெய்கையை முன்னேதானே காட்டும்பறவைகள் அனேகம் என்கண்களுக்குமுன்னே தோன்றினபடியால் பாயசிவனுக்குதேகத்தில் உதிரம் உண்டாகுமே நானில்லாதபோது என்னஅபாயஞ் சம்பவித்ததோவென்று வரும்போதில்—(எ-று) கண்ணப்பசுவாமி சிலபறவைகளின் தீச்சகுனத்தைப்பார்த்தபோது தமக்குஉரியவரா யிருப்போர்களுக்கு உதிரங்கண்டவழக்கததால் இத்தகுதியபுட்க ளுதிரங்காட்டும் என்றார். (ஈகஅ)

அண்ணலார்திருக்காளத்தியடிகளார்முனிவனார்க்குத் ......*
திண்ணனார்பரிவுகாட்டத்திருநயனத்திலொன்று ........ *
துண்ணெனவுதிரம்பாயவிருந்தனர்தூரத்தேயவ் ........ *
வண்ணவெஞ்சிலையார்கண்டுவல்விரைந்தோடிவந்தார் .... *

(இதன்பொருள்)

திருக்காளஹஸ்தி மலையில் எழுந்தருளியிருக்கின்ற அடியார்களுக்கு அனுக்கிரகஞ்செய்யுஞ்சுவாமி சிவகோசரிமுனிவர்க்குக் கண்ணப்பசுவாமியினுடையஅன்பினைக்காட்டும் பொருட்டுத் தமதுதிருக்கண்களில் ஒருகண்ணிலிருந்துஎல்லாரும்பயப்படரத்தஞ்சொரியக்காணப்பட்டார் அழகியகொடுமையைச்செய்யும் வில்லையுடைய அந்தத்திண்ணர் தூரத்தேகண்டு சீக்கிரமாக ஓடிவந்தார்.—(எ-று) (ஈகூ)

வந்தவர்குருதிகண்டார்மயங்கினார்வாயினன்னீர் ..........*
சிந்திடக்கையிலூனுஞ்சிலையுடன்சிதறிவீழக் ............*
கொந்தலர்பள்ளித்தாமங்குஞ்சிநின்றலைந்துசோரப் ......*
பைந்தழையலங்கன்மார்பர்நிலத்திடைப்பதைத்துவீழ்ந்தார்.

(இதன்பொருள்.)

பசுமைபொருந்திய தழையாற்செய்யப்பட்ட மாலையைத்தரித்தமார்பராகிய கண்ணப்பசுவாமிவந்தவுடனே சுவாமிகண்ணிலிருந்து உதிரம்பாய்ந்துகொண் டிருக்கப்பார்த்து இதற்கென்னசெய்வேனென்று மயங்கினார் வாயிற்கொண்டுவந்தநல்லதிருமஞ்சனநீரும் சிந்திப்போகக் கையிலிருக்கின்ற மாமிசமும் வில்லும் உடனேசிதறிவிழவும் கொத்துக்களாய் மலர்ந்திருக்கின்ற அர்ச்சனைமலர்களும் தலைமயிரில்நின்று அலைந்துவிழப்பூமியில்பதைத்துவிழுந்தார்.—(எ-று) (ஈஎ0)

விழுந்தவரெழுந்துசென்றுதுடைத்தனர்குருதிவீழ்வ ....*
தொழிந்திடக்காணார்செய்வதறிந்திலாருயிர்த்துமீள .......*

வழிந்துபோய்விழுந்தார்தேறியாளிதுசெய்தார்மொன்று....*
வெழுந்தனர்திசைகளெங்கும்பார்த்தனரெடுத்தார்வில்லும்.*

(இதன்பொருள்.)

கீழேவிழுந்தகண்ணப்பசுவாமி மறுபடியுமெழுந்து சுவாமியி டத்திற்குப்போய்க்கண்ணிலிருந்துவிழுகின்றஇரத்தமானதுநி ற்கும்படிதுடைத்தார் அதனால் நில்லாமல் சொரியக்கண்டு அ தற்கு மாற்றாகச்செய்வதொன்றையுமறியாதவராய்ப்பெருமூ ச்சுவிட்டுப்பின்னுந்தம்முடையபத்திசிதறிக்கீழேவிழுந்தார்சி லநாழிகையின்பின் மூர்ச்சைதெளிந்து யாரிப்படிப்பட்டது ன்பத்தைச்சுவாமிக்குச்செய்தனரொன்று எழுந்திருந்துவில்லை யுமெடுத்துக் கொண்டு எட்டுத்திக்கிலும்போய்ப் பார்த்தார். (எ-று) வில்லையெடுத்துககொண்டது சுவாமிக்கு ஊறுசெய் தோரைக்கொல்லுதற்கு. (௱௪௧)

வாளியுந்தெரிந்துகொண்டிம்மலையிடையெனக்குமாறு..*
மீளிவெம்மறவர்செய்தாருளர்கொலோவிலங்கின்சாதி.....*
யாளிமுன்னாகியுள்ளவிளைத்தவோவறியேனென்று........*
நீளிருங்குன்றச்சாரனெடிதிடைநேடிச்சென்றார்.... ....*

(இதன்பொருள்.)

அம்புகளைத் தெரிந்தெடுத்துககொண்டு இந்தமலையி னிடத்தி ல் எனக்குவிரோதமாய்ஏற்பட்டுச்சுவாமியின்கண்ணிற்கு ஊறு செய்த வன்மைபொருந்தியகொடுஞ்செய்கையையுடையமற வர்கள்இங்கே இருக்கின்றார்களோ சிங்கமுதலான மிருகசாதி களே இப்படிச்செய்தனவோ அறியேனென்று நீண்டிருக்கு மலையின்பக்கத்தில் வெகுதூரமட்டும் தேடிப்போனார்.—
(எ-று) (௱௪௨

வேடரைக்காணார்தீயவிலங்குகள்மருங்குமெங்கு.........*
நாடியுங்காணார்மீண்டுநாயனார்தம்பால்வந்து...........
நீடியசோகத்தோடுநிறைமலர்ப்பாதம்பற்றி........
மாடுறக்கட்டிக்கொண்டுகதறினார்கண்ணீர்வார.........

(இதன்பொருள்.)

வேடர்களைக்காணாமல் கொடுமைசெய்கின்ற மிருகசாதிகளை ப்பக்கத்திலும்மற்றெவ்விடத்திலும்தேடிக்கூடக்காணாதவரா னார்திரும்பிப்பரமசிவனிடத்திற்குவந்து அதிகமான சோக த்தோடு பிரகாசம்நிறைந்த புட்பங்களையுடையதிருவடியைப்

டித்துக்கொண்டு சுவாமியினது திருமேனியின் சுற்றுப்புறமெல்லாம் பொருந்துக்கையினுற்கட்டிக்கொண்டு கண்ணீர்சொரியக்கதறியழுதார். — (எ-று) (௱௭௬)

பாவியேன்கண்டவண்ணம்பரமனார்க்கடுத்ததென்னே....*
வாவியிலினியவெங்களத்தனார்க்கடுத்ததென்னே.........*
மேவினர்பிரியமாட்டார்விமலனார்க்கடுத்ததென்னே....*
யாவதொன்றறிகிலேனானென்செய்கேனென்றுபின்னும்..*

(இதன்பொருள்.)

பாவியாகியநான்கண்ட சகுனப்பிரகாரம் பரமனார்க்கு இப்படிப்பட்ட ஆறாததுன்பமுண்டாயிற்று. என்னுயிர்போன்றவனாகிய சுவாமிக்கு வந்தவலைகயாலிப்படி சம்பவித்தது. அடைந்தவர்கள் அன்பினால் பிரியாமலிருக்கின்றசுவாமிக்கு வந்தவலையாலித்தன்மைத்துன்பம்நேரிட்டது. இனித்தீர்ப்பதற்காகியமருந்தொன்றை நானறிந்திலன் ஆதலால் என்னசெய்வேனென்று விசனப்பட்டுப்பின்னும். — (எ-று) நான் இவ்விடத்திலுள்ள மலைகளுக்கு இராசாவாயிருக்கிறபடியால் அம்மலைகளிலிருக்கும் வேடரொருவரும் எனக்குவிரோதமாக இந்தச்செய்கையைச் செய்யார்கள் இதுமற்றும்யாவரால் உண்டாயிற்று என்கிறசந்தேகத்தைப் (பரமனார்க்கடுத்ததென்னே) என்பதனாற்கொண்டார். அயலநாட்டிலுள்ள சத்துருவேடர்கள்நம்மைப்பற்றி இப்படிச்சுவாமியின்கண்ணிற் புண்ணுண்டாக்கினார்களென- ஒருதுணிவுவந்தது. பகைவராயின் நமது குறிச்சியைப்பிடித்துக் காட்டையும் வசஞ்செய்துகொள்வார்கள். அல்லது நமக்குரிய பொருளைத்திருடுவார்கள் அன்றி, யானிப்போதிருக்கும் இவ்விடத்தில் நானில்லாதவேளையில்வந்துசுவாமிக்கொன்றுஞ் செய்யார்கள் ஆதலால்வேறொருவனையாலிது நேரிட்டிருக்குமென்று சந்தேகங்கொண்டவர் இரண்டாமுறை, (எங்களத்தனார்க்கடுத்ததென்னே) என்றார். அதன்பின் தமது தகப்பனும் மற்றைவேடருங் கூடிக் குடிமித்தேவருக்கு ஓரிடையூறுண்டாக்கினால் அதைப்பார்த்துச் சகித்தங்கிராமல் குறிச்சிக்குவந்து சேருவானென்று இப்படிசெய்திருக்கலாமெனத்துணிந்தார். அங்ஙனமாயின் அவனுக்குச் சுவாமியினிடத்திலுள்ள அன்பின்மிகுதியால் அவர்க்கு ஓர்குறைவந்தால் பார்த்துச்சகிக்காமலிறந்துபோவானேயன்றித் திரும்பிவாரானென்று அவர்களறியால் முன்னேதானே அறிந்தி

ருப்பார்களாதலால் அவர்கள் செய்ததன்றுமற்றையாரோவெ ன்று ஐயங்கொண்டவர் மூன்றாவது (விமலனார்க்கடுத்ததென் னே)என்றார். (௱௪௪)

என்செய்தாற்றீருமோதானெம்பிரான்றிறத்துத்தீங்கு....*
முன்செய்தார்தம்மைக்காணேன்மொய்கழல்வேடரொன்று.*
மின்செய்வார்பசுழிப்புண்கடீர்க்குமெய்மருந்துநாடிப்..*
பொன்செய்தாழ்வரையிற்கொண்டுவருவனுனென்றுபோனார்

(இதன்பொருள்)

என்னசெய்தால் இந்தக்கண்ணில் இருந்தொழுகுகிறவுதிரம்நிற் கும்சுவாமியின்விஷயமாகஇந்தத்தீங்கானசெய்கையைச்செய் தவர்களையும்நான்பார்க்க இல்லை பார்த்தால் நல்லமொழிகளை வணக்கத்தோடு அவர்களுக்குச் சொல்லியாவது எந்தமருந்தி னால் இந்தப்புண்தீருமென்று கேட்டுக்கொள்ளலாம் ஆதலா ல்நெருங்கிக்கோக்கப்பட்டிருக்கும் வீரமணிகளையுடையவே டர்கள் எப்போதும் காந்தியையுடைத்தாய் நீண்டஅம்பினால் உண்டான புண்களைத் தீர்க்கத்தக்க மெய்மையான மருந் தைத்தேடிப் பொற்பொடிகளைக்காட்டுகின்ற தாழ்வரையிற் போய்க் கொண்டுவருவேனென்று போனார்.(எ-று) சுவாமிக் குக் கண்ணிற் புண்ணுண்டாயிற்றே என்கிற துக்கத்தால் க்ஷணத்துக்குக்ஷணம் கண்ணப்பசுவாமிக்குமனம் வேறுபடுகி ன்றதென்பதுதெரிவித்ததற்கு முன்பாட்டின்கருத்தால் பகை வேடர்செய்யவில்லையெனத் துணிவுகொண்டாரொன்றாலும் இ ப்பாட்டில் தீங்குமுன்செய்தார் தம்மைக்காணேனென்றார்.

தினைத்தனர்வேறுவேறுநெருங்கியவனங்களெங்கு ....*[ப் பினத்திடைப்பிரிந்தசெங்கணேறென வெருக்கொண் டெய்தி புனத்திடைப்பறித்துக்கொண்டுபூதநாயகன்பால்வைத்த ..*
மனத்தினுங்கடிதுவந்துமருந்துகள்பிழிந்துவார்த்தார் ....*

(இதன்பொருள்)

தனது இனத்தைப்பிரிந்துவந்த சிவந்தகண்ணையுடைய ரிஷப ம்போல் சுவாமியை விட்டுவந்ததனால் வெருட்கொண்டவரா ய் மரம்நெருங்கியிருக்கும் எல்லாவனங்களிலுஞ்சென்று புன ங்களிலுள்ளவேறுவேறானபச்சிலைகளைத்தம்முடையமனதின்ட டிநினைத்துப் பறித்துக்கொண்டு பூதகணங்களுக்குத்தலைவரா யிருக்கின்றசுவாமியினிடத்தில் வைத்த மனதைப்பார்க்கிலும் அதிகவேகத்தோடுவந்து மருந்துகளைப்பிழிந்து கண்ணில்வா ர்த்தார்.—(எ-று) (௱௪௫)

மற்றவர்பிழிந்துவார்த்தமருந்தினாற்றிருக்காளத்திக் .......*
கொற்றவர்கண்ணிற்புண்ணீர்குலைபடாதொழுகக்கண்டு ..*
மிற்றையினிலைமைக்கென்னோவினிச்செயலென்றுபார்ப்பா.*
ருற்றநோய்தீர்ப்பதூனுக்கூனெனுமுரைமுன்கண்டார். ..*

(இதன்பொருள்)

இவ்வகையாகக் கண்ணப்பசுவாமி பிழிந்துவார்த்த ஓர்மருந்தினாலேயும்திருக்காளஹாஸ்திமலையில்எழுந்தருளியிருக்கும்பரமசிவனுடைய கண்ணில்நின்றும்இரத்தமானதுநில்லாமல் ஒழுகப்பார்த்து இப்படிச்சொரியுந்தன்மைக்கு இனிச்செய்யவேண்டியசெயல் யாதென்று ஆலோசித்துப்பார்த்தார் ஊனுக்கு உண்டான நோயைத்தீர்ப்பது ஊனேயென்று வழங்கும் பழமொழியைநினைத்துக்கொண்டார்.—(எ-று) (௱௭௭)

இதற்கினியென்கணம்பாலிடந்தப்பினெர்றையார்க.. ...*
ணைதந்திதுமருந்தாய்ப்புண்ணீர்நிற்கவுமடுக்குமென்று ....*
மதர்த்தெழுமுள்ளத்தோடுமகிழ்ந்துமுன்னிருந்துதங்கண் .*
முதற்சரமெடுத்துவாங்கிமுதல்வர்தங்கண்ணிலப்ப...... *

(இதன்பொருள்.)

இதற்காக இனிஎன்னுடையகண்ணை அம்பினால் பேர்த்துப்பதித்தால் எனதுசுவாமியின் கண்ணிற்குத்தகுந்தமருந்தாய்ஒழுகுகிறஇரத்தமும் நின்றுவிடுமென்று களிப்புக் கொண்டமனதோடும்விரும்பிச்சன்னிதியின்முன்னாக இருந்துகொண்டுதம்மிடத்திலுள்ள ஒப்பற்ற அம்பினையெடுத்துக் கண்ணைத்தோண்டிப் பரமசிவனதுகண்ணில் அப்பின அளவில்.—(எ-று)

நின்றசெங்குருதிகண்டார்நிலத்தினின்றேறப்பாய்ந்தார் ..*
குன்றெனவளர்ந்ததோள்கள்கொட்டினார்கூத்துமாடி.....*
நன்றுநான்செய்தவிந்தமதியெனநகையுந்தோன்ற ....*
வொன்றியகளிப்பினாலேயுன்மத்தர்போலமிக்கார் .. ....*

(இதன்பொருள்.)

இதற்குமுன் ஒழுகிக் கொண்டிருந்தரத்தம் நின்றுவிடக்கண்டார் சந்தோஷத்தால் பூமியில்நின்றும் ஆகாயத்தில்எழும்பிக்குதித்தார்சுவாமியின்கண்ணுக்குத் துன்பம்நேரிட்டது என்று விசனத்தால்வாடிப் போனதோள்கள் மலைபோல் பருத்துவளர அவைகளைக்கொட்டிக்கொண்டு ஆனந்தக்கூத்தாடினார்நானிப்போது செய்தமதிக்கத்தக்க யுத்தியானதுநன்றாயிருக்கிற

துஎன்றுசிரிப்பும் உண்டாக அதிகமானசந்தோஷித்தால்பயித்தியங்கொண்டவர்போல் ஒன்றுந்தோன்றாதவரானார்.-(எ-று)

வலத்திருக்கண்ணிற்றங்கணைப்பியவள்ளலார்தம் .... .. .... *
நலத்தினைப்பின்னுங்காட்ட நாயனார்மற்றைக்கண்ணில் .. ...*
உலப்பில்செங்குருதிபாயக்கண்டனருலகில்வேடர் .. .. ...*
குலப்பெருந்தவத்தால்வந்தகொள்கையினும்பர்மேலார் .. *

(இதன்பொருள்)

வலக்கண்ணில் தம்முடையகண்ணைப்பேர்த்து அப்பியகண்ணப்பசுவாமியினது அன்பின்மிகுதியைமறுபடியும் சிவகோசரியார்க்குக்காட்டும்பொருட்டுப் பரமசிவனது மற்றைஇடக்கண்ணிலும் அவர்திருவுள்ளத்தால் வற்றாதசிவந்தகுருதிசொரிந்துகொண்டிருக்கப்பார்த்தார் இவ்வுலகத்தில்வேடரதுகுலத்தினது பெருமைபொருந்திய தபோபலத்தால்அவதரித்து அன்புமுதலியவைகளில் தேவர்களுக்குமேலாயிருக்கின்ற கண்ணப்பசுவாமி.—(எ-று) (௱௮௰)

கண்டபின்கெட்டேனெங்கள்காளத்தியார்கண்ணொன்று .. *
புண்டருகுருதிநிற்கமற்றைக்கண்குருதிபொங்கி .. .... .. *
மண்டுமற்றிதனுக்கஞ்சேன்மருந்துகைகண்டேனின்னு .* [று
முண்டொருகண்ணைக்கண்ணை யிடந்தப்பி யொழிப்பேனென்

(இதன்பொருள்.)

பார்த்தபின்பு கெட்டேன் எங்கள்சுவாமியின் கண்களில் ஒருகண்ணில் புண்பட்டுவருகின்ற இரத்தமானது நின்றஅளவில் மற்றோர்கண்ணிலிருந்து குருதிபொங்கி ஓடிவருகின்றது ஆனால் இதற்குப்பயப்படேன் தீர்க்குமருந்துகை கண்டிருக்கின்றேன் எனக்குஇன்னுமொரு கண்ணிருக்கிறது அதையும்பேர்த்துஅப்பி ஆண்டவரது கண்ணின் புண்ணைத்தீர்ப்பேனென்று (எ-று) கைகாணல் அனுபவப்பட்டிருத்தல். (௱௮௧)

கண்ணுதல்கண்ணிற்றங்கணிடந்தப்பிற்காணுநேர்பா .. ...*
டெண்ணுவார்தம்பிரான்றன்றிருக்கண்ணிலிடக்காலூன்றி .. *
உண்ணிறைவிருப்பினோடுமொருதனிப்பகழிகொண்டு ....*
திண்ணனார்கண்ணிலூன்றத்தரித்திலர்தேவர்தேவர் .. ....*

(இதன்பொருள்.)

பரமசிவனாரதுகண்ணில்தம்முடையகண்ணைப்பெயர்த்து அப்பும்போது தமக்கு இனி இரண்டு கண்ணும் இல்லாமற்போ

றபடியால் சுவாமியின்கண் இவ்விடத்தில் இருக்கிறதென்ப துதெரிகிறதற்காக என்னைக்கொண்டு ஆண்டவராதுகுருதியொழுகிற கண்ணினருகில் இடக்காலை யூன்றிக்கொண்டு உள்ளநிறைந்த விருப்பத்தோடு ஒப்பற்றஅம்பினையெடுத்துக் கண்ணப்பசுவாமி தமதுகண்ணைத் தோண்டும்படி ஊன்றும்போது தேவர்களுக்கெல்லாந் தேவராகிய கயிலாசபதி தரியாதவரானார்.—(எ-று) (௱அஉ)

செங்கண்வெள்விடையின்பாகன்றிண்ணனார்தம்மையாண்ட*
வங்கணன்றிருக்காளத்தியற்புதன்றிருக்கையம்பாற்.. .....*
றங்கண்முனிடக்குங்கையைத்தடுக்கமூன்றடுக்குநாக. ..*
கங்கணமுதவாக்குகண்ணப்பநிற்கவென்ற ⁖ ........*

(இதன்பொருள்.)

சிவந்தகண்களையுடைய வெள்ளியரிஷபவாகனத்திலெழுந்தருளுகின்றசுவாமி-திண்ணனாரை ஆட்கொண்டஅழகியதிருவைக்கண்ணையுடையவர் திருக்காளஹஸ்தியில்வீற்றிருக்கின்றஅற்புதர்-தமது அடியவர்பிரத்தியக்ஷத்தில் அம்பினால்கண்ணைப்பெயர்க்கும் அழகியகையைத்தடுக்கும்பொருட்டு மூன்கையில்தரிக்கப்பட்ட நாககங்கணத்தையுடையபரமருடையஅமிர்தவாக்கானது கண்ணப்பநிற்கவென்றுபிறந்தது —(எ-று) மூன்றடுக்கு என்பது மூன்றுதரமென்பாருமுளர். (௱அ௫)

கானவர்பெருமானார்தங்கண்ணிடந்தப்பும்போது ..... ..*
மூனமுதுகத்தவையருத்துமுன்பிடித்தபோதும்.. ......*
ஞானமாமுனிவர்கண்டார்நான்முகன்முதலாயுள்ள.. ....*
வானவர்வளர்பூமாரிபொழிந்தனர்மறைகளார்ப்ப ..... ..*

(இதன்பொருள்.)

வேடர்களுக்குத்தலைவராகிய கண்ணப்பசுவாமி தமதுகண்ணைத்தோண்டி சுவாமிகண்ணிற் பதிக்கும்போதும் ஊனாகியதிருவமுதை அடியவர்க்காக உண்ணவிரும்பின ஆண்டவர் பிரசன்னமாகிக்கையைப்பிடித்தபோதும் சிவஞானம்பொருந்தியசிவகோசரியார் பார்த்துக்கொண்டிருந்தார்-பிரமன் முதலாகியதேவர்கள் வேதங்கள்முழங்க விருத்தியாகின்ற புஷ்பமாரியிடைவிடாமற்சொரிந்தார்கள்.—(எ-று) (௱அச)

பேறினியிதன்மேலுண்டோபிரான்றிருக்கண்ணில்வந்த ... *
ஊறுகண்டஞ்சித்தங்கணிடந்தப்பவுதவுங்கையை ..... ....*

யேறுயர்த்தவர்தங்கையாற்பிடித்துக்கொண்டென்வலத்தில் *
மாறிலாய்நிற்கவென்றுமன்னுபேரருள்புரிந்தார்..... .....*

(இதன்பொருள்)

ஆண்டவருடைய திருக்கண்ணி லுண்டாகிய செங்குருதியைப்பார்த்துப்பயப்பட்டுத்தம்முடையகண்ணைப்பெயர்த்துப் புதிக்க உதவியாயிருந்தகையை ரிஷபக்கொடியைப்பிடித்த பரமசிவன் தமதுகையால் பற்றிக்கொண்டு குற்றமில்லாத கண்ணப்பர் எமதுவலப்புறத்திலிருக்கக் கடவாயென்று நிலைபெற்றகிருபைபுரிந்தருளினார் - இதைப்பார்க்கிலும் அவர் பெறவேண்டிய பேறுயாது.—(எ-று) (௱௮௫)

மங்குல்வாழ்திருக்காளத்திமன்னனார்கண்ணிற்புண்ணீர்....*
தங்கணான்மாற்றப்பெற்றதலைவர்தாடலைமேற்கொண்டே ..*
கங்கைவாழ்சடையார்வாழுங்கடவூரிற்கலையனாராம்.. .. .....*
பொங்கியபுகழின்மிக்கார்திருத்தொண்டுபுகலலுற்றேன்....*

(இதன்பொருள்.)

மேகங்கள்தவழ்கின்ற திருக்காளஹஸ்திமலையில் வீற்றிருக்கின்ற பரமசிவனது கண்ணினின்று வந்தகுருதியைத்தமது கண்ணைப்பெயர்த்துஅப்புதலால்நிற்கும்படிசெய்யப் பேறுபெற்ற கண்ணப்பசுவாமிகளது திருவடிகளைச் சிரசின்மேற்கொண்டு கங்கையுலாவுகின்ற சடையையுடையவர் வாழ்கின்றதிருக்கடவூரில் நிறைந்தகீர்த்தியால்பெருமைபெற்ற குங்கிலியக்கலயனாரது திருப்பணிகளைச் சொல்லத்தொடங்கினேன்.—(எ-று)

கண்ணப்பநாயனார்புராணம்-முற்றிற்று

———

ஆக திருவிருத்தம்-௮௩௫.





# குங்கிலியக்கலயநாயனார்புராணம்.



வாய்ந்தநீர்வளத்தாலோங்கிமன்னியபொன்னிநாட்டி ....*
னேய்ந்தசீர்மறையோர்வாழுமெயிற்பதியெதிர்நீர்க்கங்கை..*
தோய்ந்தநீள்சடையார்பண்டுதொண்டர்மேல்வந்தகூற்றைக்
காய்ந்தசேவடியார்நீடியிருப்பதுகடவூராகும் .........*

(இதன்பொருள்.)

நீர்வளம்பொருந்தி யிருப்பதனாலுயர்வுபெற்று நிலையாயிருக்கின்றசோளதேசத்தில மேம்பாடாகிய சிறப்பினையுடைய பிராமணர்கள்வாழு மதில்சூழ்ந்த நகரமானது யாதெனின் அலைவீசுகின்றநீரினையுடையகங்கை உலாவுகின்றநீண்டசடையையுடைய பரமசிவன்முற்காலத்தில் அடியாராகியமார்க்கண்டேயரைப் பிடிக்கவந்தயமனை உதைத்தசெவ்விய பாதத்தையுடைய சுவாமியெருநாளாக வீற்றிருப்பது கடவூரென்றுசொல்லப்படும்.—(எ-று) (க)

வயலெல்லாம்விளைசெஞ்சாலிவரம்பெலாமலையின்முத்த. ...*
மயலெலாய்வெள்விச்சாலையணையெலாங்கழுநீர்க்கற்றை...*
புயலெலாங்கமுகின்காடப்புறமெலாமதன்சீர்போற்றல்....*
செயலெலாந்தொழில்களாறேசெழுந்திருக்கடவூரொன்றும்.*

(இதன்பொருள்)

செழுமைபொருந்திய திருக்கடவூரில் என்றும் வயல்களிலெல்லாம் விளைந்திருக்குஞ்சிவந்தநெல்லுர். வரம்புகளெல்லாம் அலைகளாலே ஒதுக்கப்பட்ட முத்துக்களும். பக்கங்களிலெல்லாய்யாகசாலைகளும். அணைகளின் அருகெல்லாம் செங்கழுநீர் மலர்க்கூட்டங்களும். கமுகின்காடெல்லாம் மேகக்கூட்டங்களுர். அவைகளின் புறமெல்லாம் அவைகளைச்சேர்ப்பித்துநின்றபிரயத்தினங்களும். அவ்வூரார்செய்கைகளெல்லாம்தன்மார்க்கத்துக்குரிய செயல்களுமாயிருக்கின்றன.—(எ-று) (உ)

குடங்கையினகன்றவுண்கட்கடைசியர்குழுமியாடு ..... *
மிடம்படைபண்வினைதோறுமெழுவனமருதப்பாடல்.. ..*
வடம்புரிமுந்நூன்மார்பின்வைதிகமறையோர்செய்கை....*
சடங்குடையிடங்கடோறுமெழுவனசாமப்பாடல் ...... ..*

(இதன்பொருள்.)

உள்ளங்கையைப்பார்க்கிலும் விசாலமாகிய மையைத்தரித்தக ண்களையுடையபள்ளஸ்திரீகள்கூட்டமாகச்சேர்ந்துகுரவைக்கூ த்தாடுகின்ற இடங்களில்அவர்களுடைய கூட்டங்களிலெல்லாம் மருதப்பண்ணின்பாடல்உண்டாவன. முப்புரியாகிய பூணூலை மார்பில்தரித்த வேதசம்பந்தத்தையுடையபிராமணர்கள் உண் மையானசடங்குகளைச்செய்யும் இடங்கள்தோறும் சாமவேத த்தினதுகானம் உண்டாவன —(எ-று) (௩)

துங்கநீண்மருப்பின்மேதிபடிந்தபால்சொரிந்தவாவிச் ... *
செங்கயல்பாய்ந்துவாசக்கமலமுந்தீம்பாலூறு ... *
மங்குறோய்மாடச்சாலைமருங்கிறையொதுங்குமஞ்சு ... *
மங்குலைபொழிந்தநீருமாகுதிப்புகையாநாறும் ... *

(இதன்பொருள்)

உயர்ந்தநீண்ட கொம்பினையுடைய எருமைகள் துளைந்து பால் பொழிந்தகுளத்தில் சிவந்தகெண்டைமீன்கள் பாய்ந்து வாச னைபொருந்திய தாமரைமலரும் தித்திப்பாகியபால்வாசனைம ணக்கும் ஆகாயம்வரைக்கும் அளவுகின்ற பந்தியாயிருக்கின் றமேல்வீடுகளின் பக்கத்தில் மேகங்கள்ஒதுங்கும் அவை பொ ழிந்தநீரும் ஆகுதியின்புகையால் நாறும்.—(எ-று) (௪)

மருவியதிருவின்மிக்கவளம்பதியதனில்வாழ்வா ... *
ரருமறைமுந்நூன்மார்பினந்தணர்கலயரென்பார் ... *
பெருநதியணியும்வேணிப்பிரான்கழல்பேணிநாளு ... *
முருகியவன்புகூர்ந்தசிந்தையாரொழுக்கமிக்கார் ... *

(இதன்பொருள்.)

நிலைபெற்ற பாக்கியத்தாற்சிறந்த வளம்பொருந்தியஅந்தநக ரத்தில் வாழ்கின்றவர் அரிதாகிய வேதசம்பந்தமாகிய பூணூலை த்தரித்த மார்பினையுடைய பிராமணராகிய கலயநாயனாரென் பவர் பெருமைபொருந்திய கங்கையைத்தரிக்கின்ற சடையை யுடைய சுவாமியினது திருவடியைவிரும்பி நாள்தோறும் இ ளகிய அன்புமிகுந்த மனதையுடையவராய் ஒழுக்கத்திற் சிறந் தவரானார்.—(எ-று) (௫)

பாலதான்மறையோன்போற்றப்பயங்கெடுத்தருளுமாற்றான்
மாலுநான்முகனுங்காணாவடிவுகொண்டெதிரேவந்து. ... *

காலனுருயிர்செற்றார்க்குக்கமழ்ந்தகுங்கிலியத்தூபஞ் .. *
சாலவேநிறைந்துவிம்மவிடும்பணிதலைநின்றுள்ளார். .... *

(இதன்பொருள்.)

நான்குவேதங்களையுணர்ந்தபாலியவயதினையுடையமார்க்கண்டேயர் வணங்குதலால்பயத்தைநீக்கித் திருவுளஞ்செய்யும்பொருட்டு விஷ்ணுவும் பிரமனும் காணாத உருவத்தைக்கொண்டு எதிராகவந்தயமனுடைய உயிரைநீக்கினபரமசிவனுக்கு வாசனைபொருந்திய சாம்பிராணித்தூபமானது கோயிலிடமெல்லாம்மிகவும்நிறைந்துஅதிகப்படச்செய்யுந்திருப்பணியை முக்கியமாகச்செய்ய ஏற்பட்டுள்ளவர்.—(எ-று) (௬)

கங்கைநீர்கலிக்குஞ்சென்னிக்கண்ணுதலெம்பிராற்குப் .. *
பொங்குகுங்கிலியத்தூபம்பொலிவுறப்போற்றிச்செல்ல .. *
வங்கவரருளினாலேவறுமைவந்தடைந்தபின்னுந் ....... *
தங்கணாயகர்க்குத்தாமுன்செய்பணிதவாமையுய்த்தார் .... *

(இதன்பொருள்.)

கங்கையினதுநீர்முழங்குஞ்சிரசினையும் கண்பொருந்தியநெற்றியையும் உடைய எமதுஆண்டவர்க்கு வாசமெழும்புகின்றகுங்கிலியத்தூபத்திருப்பணி குறைவில்லாமல் நடப்பித்துக்கொண்டு போங்காலத்தில் அடியாரதுபெருமையை யாவர்க்கும்தெரிவிக்கும்பொருட்டு அந்தசுவாமி திருவுளங்கொண்டகிருபையால் இவர்க்குத்தரித்திரம் உண்டானபோதும் தமது நாயகராகிய கயிலாசபதிக்குத்தா முன்னேசெய்யும் பணிவிடைதவறாமல் நடத்திக்கொண்டுவந்தார்.—(எ-று) (௭)

இந்நெறியொழுகுநாளிலிலம்பாடுநீடுசெல்ல .... ..... *
நன்னிலமுற்றும்விற்றுநாடியவடிமைவிற்றும் .... .... *
பன்னெடுந்தனங்கண்மாளப்பயின்மனைவாழ்க்கைதன்னின். *
மன்னியசுற்றத்தோடுமக்களும்வருந்தினார்கள் .... ....*

(இதன்பொருள்.)

இந்தப்படி நடக்கும்நாளில் தரித்திரம்அதிகப்பட நல்லவளம்பொருந்திய தமதுநிலமெல்லாம்விற்றும் தேடியஅடிமையாகக்கொண்ட ஆள்களைவிற்றும் போதாமல்இன்னும் பலவகையானமிகுந்த சொத்துக்களும் செலவாகவிதியோடு நடக்கின்ற இல்வாழ்க்கையில் நிலைபெற்ற உறவினரும் மக்களும் உணவில்லாமல் வருந்தினார்கள்.—(எ-று) (௮)

யாதொன்றுமிலையாயிருபகலுணவுமாறிப் ..... *
பேதுறமைந்தரோடும்பெருகுசுற்றத்தைநோக்கிக் ......*
காதல்செய்மனைவியார்தங்கணவனார்கலயனார்கைக் .... *
கோதின்மங்கலநாணாணிகொடுத்துநெற்கொளுமென்றார் *

(இதன்பொருள்.)

இந்தப்பிரகாரம் இருக்கும்நாளில் ஒருநாள் போசனத்துக்கு வேண்டியவஸ்துக்களை வாங்குவதற்குப்பொன் வெள்ளிமுதலி யயாதொன்று மில்லாமல் இரண்டுநாள்பட்டினியிருந்துவருந் துகின்றபிள்ளைகளோடுதங்களுககுச்சீவனமில்லாமல்வருந்தவ ந்திருக்கிற கிராமியசனங்களையுடைய சுற்றத்தாரையும் பா ர்த்துக் குங்கிலியக்கலயனாராகியதம்கணவர்கையில் அன்புள்ள அவர்மனைவியார் குற்றமற்றமங்களகரமானகயிற்றில்கோத்த தாலியைக் கழற்றிக்கொடுத்து இதற்கு நெல்வாங்கிக்கொண் டுவாருமென்றார்.—(எ-று) (௯)

அப்பொழுததனைக்கொண்டுநெற்கொள்வானவரும்போக..*
வொப்பில்குங்கிலியங்கொண்டோர்வணிகனுமெதிர்வந்துற்றா
னிப்பொதியென்கொலென்றாருள்ளவாறியம்பக்கேட்டு ...*
முப்புரிவெண்ணூன்மார்பர்முகமலர்ந்திதனைச்சொன்னார். *

(இதன்பொருள்.)

பெண்சாதிதாலியைத் தன்கையிற் கொடுத்தபோது அதைவா ங்கிக்கொண்டுநெல்லுக்கொள்ளும்படி அந்தக்குங்கிலியக்கல யநாயனாரும் போய்க்கொண் டிருக்கும்போது ஒப்பில்லா மையால்உயர்வுபெற்றகுங்கிலியப்பொதிகொண்டுஒருவர்த்த கனும் இவர்க்குஎதிராகவந்தான்அடியவர் இந்தப்பொதியென் னவென்றுவர்த்தகனைக்கேட்டு அவன் உள்ளபடிசொல்லக்கே ட்டுமுப்புரியாய்வெண்மைபொருந்தியஉபவீதத்தைத் தரித் தமார்பினையுடையவர்முகமலர்ச்சியை அடைந்து இப்படிப்ப ட்ட வார்த்தையைச்சொன்னார்.—(எ-று) (௰)

ஆறுசெஞ்சடைமேல்வைத்தவங்கணர்பூசைக்கேற்ற.......*
நாறுகுங்கிலியமீதேனானின்றுபெற்றேனல்ல ..........*
பேறுமற்றிதன்மேலுண்டோபெறாப்பேறுபெற்றுவைத்து
வேறினிக்கொள்வதென்னென்றெழும்விருப்பின்மிக்கார்

(இதன்பொருள்.)

செவ்வியசடையின்மேல் கங்காநதியைத்தரித்த பரமசிவனது பூசைக்கு ஏற்றதாய் மணக்கின்றகுங்கிலியத்தை இதோ நான்

இன்றைத்தினத்தில் பெற்றுக்கொண்டேன் இதைப்பார்க்கிலும் மேலான பேறுண்டோ ஒருவராலும்பெறக்கூடாத பேற்றினைப் பெற்றுவைத்துக்கொண்டு இனி வேறேகொள்வதென்னவென்றுசொல்லி யெழுகின்ற களிப்பிற்சிறந்தவரானார். (எ-று)

பொன்றரத்தாருமென்றபுகன்றிடவணிகன்றானு ....... *
மென்றாலிசைந்ததென்னத்தாலியைக்கலயர்ந்தார்... ...*
ரன்றவன்றனைவாங்கியப்பொதிகொடுப்பக்கொண்டு .. ..*
நின்றிலர்விரைந்துசென்றார்நிறைந்தெழுகளிப்பினோடும்...*

(இதன்பொருள்.)

பொன்னுபாணம் கொடுக்கின்றேன் அதற்குக் குங்கிலியம் கொடுமென்று அடியவர்சொல்ல வர்த்தகனும் என்னபொற்பணிகொடுக்க இசைந்தீரென்றுசொல்லக்குங்கிலியககலயநாயனார் தாலியைக்கொடுத்தார் அப்போது அவன் அதைவாங்கிக்கொண்டுஅந்தச்சாம்பிராணிப்பொதியைக்கொடுப்பப்பெற்றுக்கொண்டு அங்குநின்று பொழுதுபோக்காமல் நிறைந்து எழும்பியசந் தோஷத்தோடும் சீக்கிரமாகப்போனார். (எ-று)

விடையவர்வீரட்டானம்விரைந்துசென்றெய்தியென்னை .. *
யுடையவரொம்மையாளுமொருவர்தம்பண்டாரத்தி .... *
லடைவுறவொடுக்கியெல்லாமார்ந்தெழுமன்புபொங்கிச் ..*
சடையவர்மலர்த்தாள்போற்றியிருந்தனர்தமக்கொப்பில்லார்

(இதன்பொருள்.)

ரிஷபத்தைவாகனமாகவுடைய பரமசிவனது எட்டுவீரட்டானத்தில் ஒன்றாகியதிருக்கடவூர்க்கு விரைவாகப்போய் அடைந்துஎன்னை அடிமையாகஉடையவரும் எம்போலியமற்றையாவரையும் ஆட்கொள்பவருமாகிய சுவாமிக்கு நித்தியநைமித்தியங்களுக்குவேண்டிய பூசாதிரவியமுதலானவைகளை வைத்திருக்கும்சாலையில்குங்கிலியமுழுதும் அடங்கும்படிசெய்துநெஞ்சகத்தில் நிறைந்தெழுந்த அன்புண்டாகிச்சடையையுடைய சுவாமியினது மலர்போன்ற திருவடிகளை வணங்கித் தமக் கொப்பில்லாதகுங்கிலியக்கலய நாயனார் அங்கேதானேயிருந்தார் - வீரஸ்தானம், வீரட்டானமாயிற்று. (௰௬)

அன்பரங்கிருப்பநம்பரருளினாலளகைவேந்தன் .... ....*
றன்பெருநிதியந்தூர்த்துத்தானிமேனெருங்கவெங்கும் .. *
பொன்பயில்நெல்லும்பொருவில்பல்வளனும்பொங்கி
மன்பெருஞ்செல்வமாக்கிவைத்தனன்மனையினிட... .. .. ..*

(இதன்பொருள்)

யமனைமாயும்படி உதைத்ததிருவடியை யுடையபரம்சிவன் த
தும்புகின்ற அன்புபொருந்தியசிந்தையையுடைய அடியவரா
கியகலயனார் அறிந்துகொள்ளும்படிமிகவும் நீபசித்திருக்கின்
றாய் உனதுவிசாலமாயிருக்கும்வீட்டிற்குப்போய்ப் பாலோ
டுஇனிமையாகிய சோற்றைஉண்டுதுன்பத்தையொழியென்று
சொன்னார்.—(எ-று) (௰௭)

கலயனாரதனைக்கேளாக்கைதொழுதிறைஞ்சிக்கங்கை .... *
யலைபுனற்சென்னியார்தமருண்மறுத்திருக்கலஞ்சித் .... *
தலைமிசைப்பணிமேற்கொண்டுசங்கரன்கோயினின்று .... *
மலைநிகர்மாடவீதியருங்குதம்மனையைச்சார்ந்தார் ...... *

(இதன்பொருள்)

குங்கிலியக்கலயநாயனார் அதைக்கேட்டுக் கைகூப்பிவணங்
கிக்கங்கையினது அலைகின்றநீரினையுடைய திருமுடியாராகிய
சுவாமிகட்டளையிட்டதை மறுத்துவிட்டிருக்கப் பயப்பட்டு
அந்தப்பணியைத்தலைமேற்கொண்டு சுவாமியினதுகோயிலிரு
ந்து மலைபோன்றிருக்கின்ற மேல்வீடுகளையுடைய வீதியி
ல் தம்முடையமனையை அடைந்தார்.—(எ-று) (௰௮)

இல்லத்திற்சென்றுபுக்காரிருநிதிக்குவைகளார்ந்த ....... *
செல்வத்தைக்கண்டுநின்றுதிருமனையாரைநோக்கி ........ *
வில்லொத்தநுதலாயிந்தவிளைவெலாமென்கொலென்ன .. *
வல்லொத்தகண்டனெம்மானருள்தரவந்ததென்றார் ...... *

(இதன்பொருள்)

குங்கிலியக்கலயநாயனார் தமதுவீட்டுக்குள்ளேபுகுந்து அங்
கே நிறைந்து இருக்கின்ற பெருமைபொருந்திய பொற்குப்
பைமுதலாகிய செல்வத்தைப்பார்த்து அழகியபெண்சாதியை
ப்பார்த்து வில்லொத்த நெற்றியையுடைய பெண்ணே யிப்ப
டிப்பட்ட சம்பத்தெல்லாம் எப்படியுண்டாயிற்றென்று கே
ட்க இருள்நிறம்பொருந்தியகழுத்தினையுடைய எமதுசுவாமிகி
ருபைசெய்ததால் வந்ததென்றுசொன்னார்.—(எ-று) (௰௯)

மின்னிடைமடவார்கூறமிக்கசீர்க்கலயனார்தா .......... *
மன்னியபெருஞ்செல்வத்துவளமலிசிறப்பைநோக்கி .... *
யென்னையுமாளுந்தன்மைக்கெந்தையெம்பெருமானீசன். *
றன்னருளிருந்தவண்ணமென்றுகைதலைமேற்கொண்டார் .. *

(இதன்பொருள்)

மின்னொத்த இடையையுடைய மாதரானவர்சொல்லக் கேட்டு இருந்த குங்கிலியக்கலயநாயனார் - தமக்கு உண்டாகிய பெருமைபொருந்திய செல்வத்தினது வளமாகிய சிறப்பைப்பார்த்துப் பத்தியிற்குறைந்த அடியேனையுமாளும்பொருட்டு எம்போலவாருடைய உற்பத்திக்கு மூலமாகியும் தலைவராகியும்மற்றைச் சகலதேவர்க்கும் இறைவராகியுமிருக்கின்ற பரமசிவனது கிருபையிருந்தவண்ணம் இப்படி தான்போலுமென்று கைகளைத்தலைமேல்வைத்துக்கொண்டார்.—(எ-று) (௨௰)

பதுமநற்றிருவின்மிக்கார்பரிகலந்திருத்திகொண்டு ......*
கதுமெனக்கணவனாரைக்கண்ணுதற்கன்பரோடும் .. ....*
விதிமுறைதீபமேந்திமேவுமின்னடிசிலூட்ட .... ......*
வதுநுகர்ந்தின்பமார்ந்தாரருமறைக்கலயனார்தாம்......*

(இதன்பொருள்)

தாமரைமலரிலிருக்கின்ற லட்சுமியைக்காட்டிலும் அழகில்சிறந்தகுங்கிலியக்கலயநாயனார்மனைவி - உண்ணுகிறதற்காகக் கலத்தைச்சுத்திசெய்து சீக்கிரமாகச்சிவனடியார்களோடு கணவனை விதிப்பிரகாரம் தீபதூபமுதலிய ஆராதனைசெய்து விரும்பத்தக்க இனிமையாகிய சோறு கறிகளையுண்பிக்க அவர்கள் சாப்பட்டு இன்பமடைந்தார் - அரிதாகிய வேதங்களையுணர்ந்த குங்கிலியக்கலயநாயனார்.—(எ-று) (௨௧)

ஊர்தொறும்பலிகொண்டுய்க்குமொருவனதருளினாலே ..*
பாரினிலார்ந்தசெல்வமுடையராம்பண்பினீடிச்...... .....*
சீருடையரிசிநல்லசெழுங்கறிதயிர்நெய்பாலா ..........*
லார்தருகாதல்கூர்வழியவர்க்குதவுநாளில்.. ..............*

(இதன்பொருள்)

ஊர்கடோறும் பிட்சை கொண்டு அவர்களைப் பிழைக்கச்செய்கின்ற ஒப்பற்ற பரமசிவனது கிருபையால் பூமியில் நிறைந்த செல்வத்தை யுடையவராயிருக்கின்ற தன்மையில் நீடித்திருந்து மறுவில்லாத சோறும் நல்லசுவையுள்ள கறிகளும் தயிரும், நெய்யும், பாலும் முதலிய இவைகளால்மிகுந்த அன்புண்டாகச் சிவபக்தர்களுக்குப் போசனஞ் செய்துவிக்குநாளில்.—(எ-று) (௨௨)

செங்கண்வெள்ளேற்றின்பாகன்றிருப்பனந்தாளின்மேவு .. *
மங்கணன்செம்மைகண்டுகும்பிடவரசனார்வர .......... *
பொங்கித்தன்வேழமெல்லாம்பூட்டவும்நேர்நில்லாமைக் .. *
கங்குலும்பகலுந்தீராக்கவலையுற்றழுங்கிச்செல்ல .... .... *

(இதன்பொருள்)

சிவந்த கண்களையுடைய வெண்ணிறமாகிய விருஷபவாகனத்தி லெழுந்தருளுகிறவராய்த் திருப்பனந்தாள் என்னும் ஸ்தலத்தில் வீற்றிருக்கின்ற சுவாமி - சாய்ந்திருப்பதில்நின்றும் நேராகநிற்கும் தரிசனத்தைப்பெற்று வணங்கச் சோழராஜாவானவர் ஆசைமிகுந்து தன்யானைகளெல்லாவற்றையும் பூட்டியிழுக்கவும் நேராக நிற்காதபடியால் இரவும்பகலுந்தீராததுக்கத்தை யடைந் துநைந்து விசனப்பட.—(எ-று) (திருப்பனந்தாளில் சுவாமிசாய்ந்திருந்ததற்குக் காரணம்யாதெனின்) அந்தக்கடவுளுக்குப் பூசைசெய்யுஞ் சைவப்பிராமணர்பலருள் ஒருவரிறக்க அவர்பங்குக்கு உரியநாள்களைத்தாங்கள்கவர்ந்து கொள்ளும்படி அத்தினங்களில்யாவரும் பூசைபண்ணாமல்கட்டுப்பாடுசெய்துகொண்டு இறந்தவர்க்குச்சுற்றத்தாராய் அயலூர்களில் இருப்பவர்களையும் பூசிப்பதற்கு வரவொட்டாமற்செய்ய அதுகண்டு அப்பங்கிற்குரிய இறந்தவர்மனைவி நான் பெண்ணாயிருந்தாலும் ஆராதிக்கின்றேன் பரமசிவனுக்குத் திருவுள்ளமில்லாவிட்டால் எனக்கோர் இடையூறுண்டாகட்டுமெனச்சன்னிதிக்குப்போய் அபிஷேகஞ்செய்து புஷ்பமாலையை இரண்டுகைகளாலும் எடுத்துச் சுவாமிக்குச் சாத்தப்போகும்போது இடையிலுள்ள ஆடை சற்றுநழுவ அதை இரண்டுமுழங்கைகளாலும் இடுக்கிக்கொண்டாள் அதனால் மாலைசாத்துதற்குக்கைகளெட்டாமற்போயின அதைச்சுவாமி கடைக்கணித்து நமக்காக இந்தப்பெண் வருத்தப்படுகிறாளேயென்று முடியை வணக்கிச்சாய்ந்தார் அப்பொழுது அந்த அம்மை மாலையைத் தரித்துப் பூசைசெய்துசென்றாள் என்று சம்பிரதாயமாக ஒரு சரித்திரஞ்சொல்லக்கேட்டிருக்கின்றோம் - அந்தஸ்தலத்தினது புராணத்திலும் இப்படியிருக்கிறதாகக்கேள்வி. (௨௯)

மன்னவன்வருத்தங்கேட்டுமாசறுபுகழின்மிக்க .... .. .. *
நன்னெறிக்கலயனார்தாநாதனைநேரேகாண .... .... .. *
மந்நெறிதலைநின்றானென்றரசனைவிரும்பித்தாமு .... .. *
மின்னெறித்தனையவேலினிகிர்தனைவணங்கவந்தார் .... .. *

(இதன்பொருள்)

இராசன் வருத்தப்படுகிறதைக்கேள்விப்பட்டுக் குற்றமற்றபுக ழ்நிறைந்த சன்மார்க்கத்தையுடைய குங்கிலியக்கலயநாயனார் பரமசிவனை நேராக நிற்கப்பார்க்கவேண்டுமென்று அதற்குச் செய்யவேண்டிய முயற்சியில் ஊற்றமாயிருக்கிறாரென்று இ ராசாவைக்குறித்துச் சந்தோஷப்பட்டுப் பிரகாசிக்கின்றமின் னலுக்கொத்த சடையினையுடைய பரமசிவனை வந்தனஞ்செய் கிறதற்குவந்தார்.—(எ-று) (௨௪)

மழுவுடைச்செய்யகையர்கோயிலின்மருங்குசென்று ....*
தொழுதுபோந்தன்பினோடுந்தொன்மறைநெறிவழாமை..*
முழுதுலகினையும்போற்றமூன்றெரிபுரப்போர்வாழுஞ் ...*
செழுமலர்ச்சோலைசூழ்ந்ததிருப்பனந்தாளைச்சேர்ந்தார் ..*

(இதன்பொருள்)

மழுவாயுதத்தைத்தரித்த சிவந்தகையினையுடைய சுவாமி வீற் றிருக்குங் கோயிலுக்குச்சென்று தொழுதுவிட்டுவந்து அன் புடனே பழமைபொருந்திய வேதநெறிதவறாமல் உலகமுழு வதையுங் காக்கும்பொருட்டு மூவகையாகிய அக்கினியை வள ர்க்கின்றபிராமணர்கள்வாழ்கின்ற செழுமைபொருந்திய புஷ்ப ச் சோலைசூழ்ந்த திருப்பனந்தாளென்னும் ஸ்தலத்தைச்சேர் ந்தார்.—(எ-று) (௨௫)

காதலாலரசனுற்றவருத்தமுங்களிற்றினோடு ...... .....*
தீதில்வன்சேனைசெய்யுந்திருப்பணிநேர்படாமை.........*
மேதினிமிசையேயெய்த்துவிழ்ந்திளைப்பதுநோக்கி ....*
மாதவக்கலயர்தாமுமனத்தினில்வருத்தமெய்தி .... ....*

(இதன்பொருள்)

சுவாமி நேராக நிற்கவேண்டுமென்கிற ஆசையால் அரசன் அடைந்த வருத்தமும் யானைகளோடு குற்றமில்லாத வலியசே னைகள் செய்யுந் திருப்பணியானது நேராய்முடியாமல் பூமி யின்மேல் வலிகுறைந்து வீழ்ந்து இளைப்பதையும்பார்த்து ம கத்தாகிய தவத்தையுடைய கலயநாயனார் - தம்முடையமனதி ல் துன்பத்தை அடைந்து.—(எ-று) (௨௬)

சேனையுமானைபூண்டதிருமெய்த்தெழாமைநோக்கி ....*
யானுமிவ்விளைப்புற்றெய்க்குமிதுபெறவேண்டுமென்று .. *

தேனலர்கொன்றையார்தந்திருமேனிநீங்கச்சேய்ந்த .. .. *
யானவன்கயிறுபூண்டுகழுத்தினாலுறருந்த ஹுற்றார் ........*

(இதன்பொருள்)

யானைக்கூட்டமும் சேனைகளும் இழுக்கவும், எழுந்து நேர்நி லாமல் இருப்பதைப்பார்த்து அடியேனும் இப்படிப்பட்ட இளைப்பை அடைந்து இந்தத்திருப்பணி செய்யப் பெறவே ணுமென்று தேன்மணக்கின்ற கொன்றையாலயைத்தரித்த சுவாமியின்திருமேனியில் மிருதுவாகக்கச்சுச்சாத்திய கயிறுக ளோடு முடியப்பட்டிருக்கும் வலியகயிற்றைத்தம்முடைய க ழுத்தில்கட்டிக்கொண்டு இழுக்கத்தொடங்கினார்.(எ-று)(௨௭)

நண்ணியவொருமையன்பினூருபாசத்தாலே ........ *
திண்ணியதொண்டர்பூட்டியிளைத்தபின்றிமம்நிற்க ......*
வொண்ணுமோகலயனார்தமொருப்பாடுகண்டபோதே .. *
யண்ணலார்நேரேநின்றாரமரரும்விசும்பிலார்த்தார் ......*

(இதன்பொருள்)

பொருந்திய ஒப்பற்ற அன்பாகிய கயிற்றினாலே பத்தியின்திற மிகுந்த அடியவர்சுவாமியார்பூட்டியிளைத்தபின்புதவநிற்கக் கூடுமோகுங்கிலியக்கலயநாயனாரது ஒப்பில்லாதமுயற்சியை கண்டபொழுதே பரமசிவன் தாழ்ந்திராமல் செவ்வையாக எழுந்து நின்றார்-தேவர்களும் ஆகாயத்தில் கோஷஞ்செய்தா ர்கள்.—(எ-று) (௨௮)

பார்மிசைநெருங்கவெங்கும்பாப்பினர்பயில்பூமாரி.. .....*
தேர்மலிதானமன்னன்சேனையுங்களிறுமெல்லாங் .. .. ..*
கார்பெறுகானம்போலக்களித்தனகைகள்கூப்பி ........ *
வார்கழல்வேந்தன்றொண்டர்மலரடிதலைமேல்வைத்து ....*

(இதன்பொருள்)

பூமியின் நாற்புறத்திலும் நெருங்கும்படி புஷ்பமாரியைப் பொழிந்தார்கள்-திரளாகிய தேர்களையுடைய வலிபொருந்திய அரசனது சேனைகளும் யானைகளுமாகிய எல்லாம் மழைபொ ழிதலை அடைந்த காடுபோலக்களிப்பை அடைந்தன-ஒழுங்கா கக்கட்டிய வீரமணியைத்தரித்த காலினையுடைய அந்த இரா சா அஞ்சலிசெய்து குங்கிலியக்கலயநாயனாரது மலர் ஒத்த பாதத்தைத்தலைமேல்வைத்துக்கொண்டு.—(எ-று) (௨௯)

விண்பயில்புரங்கள்வேவவைதிகத்தேரின்மேருத் ........*
திண்சிலைகுனியநின்றார்செந்நிலைகாணச்செய்தீர் .... ....*
மண்பகுந்தவனுங்காணாமலரடியிரண்டும்யாரே .. .... *
பண்புடையடியாரல்லாற்பரிந்துநேர்காணவல்லார் .. ....*

(இதன்பொருள்)

ஆகாயத்திற்சஞ்சரித்த முப்புரங்களும் வேகும்படி வேதசம்பந்தமாகியதேரில் மேருவாகிய வலிமையான வில்லுவளையும்படி நின்றபரமசிவனை நேராகநிற்கச்செய்தீர் பூமியைத்துளைத்துச்சென்ற விஷ்ணுவுங்காணக்கூடாத புஷ்பம்போன்ற பாதமிரண்டும் நற்குணங்களுடைய அடியவர்களல்லாமல் யாவர் விரைவாக நேரே காணவல்லவர்கள்.—(எ-று) (௯௰)

என்றுமெய்த்தொண்டர்தம்மையேத்தியங்கெம்பிரானுக் ..*
கொன்றியபணிகள்மற்றுமுள்ளனபலவுஞ்செய்து .... .. *
நின்றவெண்கவிகைமன்னனீங்கவுநீங்கலன்பர் ......... *
மன்றிடையாடல்செய்யுமலர்க்கழல்வாழ்த்திவைகி .. .....*

(இதன்பொருள்)

என்றுசொல்லி மெய்ம்மைபொருந்திய தொண்டரைப் புகழ்ந்து அங்கேபரமசிவனுக்குச்செய்யவேண்டியதிருப்பணிகளும் அவைகளன்றி மற்றுஞ்செய்யத்தக்கவைகளுஞ்செய்து நிலைபெற்றவெள்ளைக்குடையையுடைய சோழராஜன் அந்தஸ்தலத்தில் நின்று நீங்கவும்ஒப்பில்லாத அன்பராகிய குங்கிலியக்கலயநாயனார்- பொன்னம்பலத்தில் நர்த்தனம்பண்ணுகின்ற மலர்போன்றபாதங்களை வணங்கி இருந்து.—(எ-று) (௯௧)

சிலபகல்கழிந்தபின்புதிருக்கடவூரினண்ணி ..............*
நிலவுதம்பணியிற்றங்கிநிகழுநாள்நிகரில்காழித்.. ........*
தலைவராம்பிள்ளையாருந்தாண்டகச்சதுரராகு ...... .....*
மலர்புகழரசுங்கூடவங்கெழுந்தருளக்கண்டு .. ...........*

(இதன்பொருள்)

சிலநாள்கள்போயினபின்பு திருக்கடவூருக்குவந்து குறைவின்றிநடக்கின்ற தமதுபணிசெய்தலில் அமர்ந்து வாழுகிறநாளையில் ஒப்பில்லாத சீர்காழியை ஜன்மதேசமாகவுடைய சைவசமயத்தலைவராகிய திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளும் பரவியபுகழினையுடைய அப்பர்சுவாமிகளும் சேர்ந்து அந்தவிடத்திற்கு எழுந்தருளவரக்கண்டு.—(எ-று) (௯௨)

மாறிலாமகிழ்ச்சிபொங்கவெதிர்கொண்டுமனையிலெய்தி .. *
யீறிலாவன்பின்மிக்கார்க்கின்னமுதாக்குமாற்றா ......... *
லாறுநற்சுவைகளோங்கவமைத்தவரருளேயன்றி .... .... *
நாறுபூங்கொன்றைவேணிநம்பர்தம்மருளும்பெற்றார் .....*

(இதன்பொருள்)

குங்கிலியக்கலயநாயனார்- குறைவில்லாத சந்தோஷமுண்டா கித்திருஞானசம்பந்தசுவாமியையும்அப்பர்சுவாமியையும் எதி ர்கொண்டு அழைத்து வீட்டிற்குவந்து கெடாத அன்பிற்சிற ந்த அவ்விருவர்க்கும் இனிய அமிர்தம்போல் அறுசுவைக்கறிக ளும் அன்னமும் நன்றாகச்செய்துபடைத்து அவர்கள்கிருபை யைப்பெற்றதுமன்றி மணக்கின்ற கொன்றைமாலையைத்தரி த்த சடையினையுடைய பரமசிவனது கிருபையையும் பெற் றார் —(எ-று) (௩௩)

கருப்புவில்லோனைக்கூற்றைக்காய்ந்தவர்கடவூர்மன்னி .... *
விருப்புறுமன்புமேன்மேல்மிக்கெழுவேட்கைகூர ...... *
வொருப்படுமுள்ளத்தன்மையுண்மையாற்றமக்குநேர்ந்த .. *
திருப்பணிபலவுஞ்செய்துசிவபதநிழலிற்சேர்ந்தார் .. .... *

(இதன்பொருள்)

கருப்புவில்லையுடைய மன்மதனையும் யமனையும் வென்ற பரம சிவன் வீற்றிருக்கின்ற திருக்கடவூரில்நிலைபெற்று யாவருக்கும் விருப்பத்தை உண்டாக்குகின்ற அன்பானது மேன்மேல் விரு த்தியாகி ஆசையுண்டாக உறுதிப்பட்ட உண்மைபொருந்தியம னதோடுதமக்குக்கூடினவளவாயில்செய்யத்தக்கபலதிருப்பணி களையுஞ்செய்து சகல ஐசுவரியமுங்கொடுக்கின்ற சிவபதத்தை அடைந்தார்.—(எ-று) (௩௪)

தேனகக்கோதைமாதர்திருநெடுந்தாலிமாறிக் ........... *
கூனற்றண்பிறையினார்க்குக்குங்கிலியங்கொண்டுய்த்த ....*
பான்மைத்திண்கலயனாரைப்பணிந்தவரருளினாலே .... .*
மானக்கஞ்சாறர்மிக்கவண்புகழ்வழுத்தலுற்றேன் .........*

(இதன்பொருள்)

தேன்பொருந்திய உட்புறத்தையுடையமாலையைத்தரித்தகூந் தலுள்ளமனைவியாரது சிறப்புப்பொருந்திய நெடியதாலியை மாறிவளைவாய்க்குளிர்ச்சிபொருந்திய சந்திரனைத்தரித்தவா

மிக்குக்குங்கிலியங்கொண்டு தூபமிட்ட சிவபத்தித் தன்மையி னையுடைய வலியகுங்கிலியக்கலயனாரை வணங்கி அவர்கிருபை யினால் மானக்கஞ்சாற நாயனாரது வளம்பொருந்திய புகழ்ச்சி யாகியசரித்திரத்தைச்சொல்லத்தொடங்குகின்றேன்—(எ-று)

குங்கிலியக்கலயநாயனார்புராண முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௮௱௪௰.



# மானக்கஞ்சாறநாயனார்புராணம்.



மேலாறுசெஞ்சடைமேல்வைத்தவர்தாம்விரும்பியது ....*
நூலாறுநன்குணர்வார்தாம்பாடுந்தொன்மையது.. . ....*
கோலாறுதேன்பொழியக்கொழுங்கனியின்சாறொழுகும் .. *
காலாறுவயற்கரும்பின்கமழ்சாறார்கஞ்சாறூர் .... ....*

(இதன்பொருள்)

மரக்கொம்புகள் தம்மிடத்தில் கட்டப்பட்டிருக்குந் தேனடைகளால் ஆறுபோற்றேனைச்சொரியக்கொழுமைபொருந்திய மாம்பழமுதலான பழங்களின்சாறும் ஒழுகுதலால் ஆறாகி வயலிற்பாய அவைகளில் விளைகின்ற கரும்பினதுசாறு இவ்வாசனையேமணக்கும் ஊராகிய கஞ்சாறூரானது பெருமைபொருந்தியகங்காநதியைச் சிவந்தசடையில்தரித்தபரமசிவனால் விரும்பப்பட்டிருப்பது நான்குவேதங்களையும் ஆறுசாஸ்திரங்களையும்நன்றாக அறிந்தவர்கள் புகழ்ச்சிசெய்கின்றதன்மையையுடையது.—(எ-று) (௧)

கண்ணிலக்கடைசியர்கள்களைகளையிற்பிழைத்தொதுங்கி ...*
புனலணிநீர்மைப்புணர்ச்சிக்கண்ணுறைத்துமலர்க்கண்சிவக்குந்.
தண்ணீர்மென்கழுநீர்க்குத்தடஞ்சாலிதலைவணங்கு ......*
மண்ணீர்மைநலஞ்சிறந்தவளவயல்களுளவயல்கள் ......*

(இதன்பொருள்)

நீலோற்பலம்போன்ற கண்களையுடைய பள்ளஸ்திரீகள் களைகின்ற பயிருந்தகளைகளில் தப்பியொதுங்கி உள்ளேநிலவுகின்ற நீர்மைப்புணர்ச்சியினிடத்துப்பிணங்கிப் பூவாகிய கண்கள்சிவ

ப்பையடையும் குளிர்ச்சிபொருந்தியகழுநீர்மலராகிய நாயகி க்கு- வளர்ந்தநெற்பயிராகிய நாயகன் பிணைக்குத்திரும்படித் லையாலேவணங்குகின்ற மண்ணினது வளம்பொருந்திய வயல் கள் பக்கங்களிலிருக்கின்றன.—(எ-று) உண்ணீர்மைப்புணர் ச்சிசகண் என்பதற்கு வயலிலுள்ள நீரின் சம்பந்தத்தால் என் றும் - உள்ளத்தினது நெகிழ்கின்ற அன்பு ஒத்த புணர்ச்சி யென்றுஞ் சிலேடைசெய்க. (உ)

புயல்காட்டுங்கூந்தல்சிறுபுறங்காட்டப்புனமயிலி .. .... *
னியலகாட்டியிடையொதுங்கவினங்காட்டுமுழத்தியர்கண் .*
முயல்காட்டுமதிதோறுமுகங்காட்டககண்பூரிக் ... .. *
கயல்காட்டுந்தடங்கள்பலகதிர்காட்டுந்தடம்பணைகள்.. ....*

(இதன்பொருள்)

மேகம்போன்ற கூந்தலானது இடம்போதாத பின்புறத்தில் தாழ்ந்திருக்கட்புனத்திலிருக்கின்ற மயிலினது சாயலைத்தெகத் தாற்காண்பித்து இடைதளரக்கூட்டமாகவருகின்றபள்ளஸ்திரீக ள்தன்னிடத்தில்முயலைவகித்துக்கொண்டிருக்கின்றசந்திரனொ ப்புமையிலதோற்கிறதற்கேதுவாயிருந்த முகங்களால்கண்க ளைக்காண்பிக்கக்கண்கள்போலவலியகெண்டைமீன்களைக்கா ட்டிக்கொண்டிருக்கிற பலதடாகங்களும் நெற்கதிர்களைக்காட் டிக்கொண்டிருக்கிற விசாலம்பொருந்திய பலவயல்களுமிருக் கின்றன.—(எ-று) (௩)

சேறணிதண்பழனவயற்செழுநெல்லின்கொழுங்கதிர்போய் *
வேறருக்குமிடைவேலிப்பைங்கமுகின்மிடறுரிஞ்சி ....... *
மாறெழுநின்குலைவளைப்பவண்டலைதண்டலையுழவர் .... .. *
தாரியுநெடுங்கொடுவாளனையவுளதனியிடங்கள் .... .. ..*

(இதன்பொருள்)

சேற்றுலழகாய்க்குளிர்ச்சிபொருந்திய வயலில் விளைந்திருக்கி ன்ற செழுமையுற்ற நெற்களின் கொழுமையுற்ற கதிர்கள் செ ன்று ஓரத்தில்வேறாக வேலிபோல் நெருங்கிய பசுமைபொ ருந்திய கமுகமரத்தின் கழுத்தில்உராய்ந்துமாறாக எழும்பிய பெருத்தகுலைகளைவளைக்க அவைவண்டுகள்சஞ்சரிக்கின்றசோ லையிலிருக்கும் உழவர்கள்குலைகளை அரிகின்றகோணலாகியநீ ண்டவாளிற்கு ஒத்தனவாக இருக்கின்றன அநேகஇடங்களில். (எ-று) (௪)

பாங்கின்மணிப்பலவெயிலும்சலவெயிலுமுளமாட ..... *
ஞாங்காணிதுகிற்கொடியுநகிற்கொடியுமுளவரங்க ......... *
மோங்குநிலைத்தோரணமும்பூரணகும்பமுமுளவாற் .. .. *
பூங்கணைவீதியிலணைவோர்புலமறுகுஞ்சிலமறுகு.......... *

(இதன்பொருள்)

மேல்வீடுகளில் குற்றமற்றபல இரத்தினங்களின் பிரகாசமும் சுற்றியிருக்கின்ற மதிலும் உண்டாயிருக்கின்றன சபைகளில் அழகுபொருந்திய வஸ்திரக்கொடிகளும் ஸ்தனங்களையுடைய மாதராகியகொடிகளும் இருக்கின்றன மன்மதனது நேராகச்செல்கின்ற புஷ்பபாணங்களை யேற்றுக்கொள்ளத்தக்க பருவத்தையுடைய புருஷர்களது புத்திபிரமிக்குஞ்சிலவீதியில் நீண்டமகரதோரணங்களும் பூரணகும்பங்களு முண்டாயிருக்கின்றன.—(எ-று)வீதி-ஒழுங்கு-புலமறுகுஞ்சிலமறுகுஎன்றதனால் உருத்திரகணிகையர் வாழும்வீதியெனப்பொருள்பெற்றும்.

மனைசாலுநிலையறத்தின்வழிவந்துவளம்பெருகும் .........*
வினைசாலுமுழவுதொழில்மிக்கபெருங்குடிதுவன்றிப் ....*
புனைசாயன்மயிலனையார்நடம்புரியப்புகல்முழவங் ... ....*
கனைசாறுமிடைவீதிக்கஞ்சாறூர்விளங்கியதால் ...... ....*

(இதன்பொருள்)

பெருமைபொருந்திய நிலையையுடைய இல்லறத்தின்மார்க்கத்திற்கு ஒத்துநடந்துவரத்தக்கமுயற்சியுற்ற பயிரிடுந்தொழிலிற்சிறந்த பெரியகுடிகள்நெருங்கி அலங்காரமாகிய சாயலை யுடையமயில்போன்றமாதர்கள் ஆட, சொல்லப்பட்ட மத்தளமுதலானவாத்திய முழங்குவதற்கு ஏதுவாகிய திருவிழாக்கள் ஓயாமல் நடக்கின்ற கஞ்சாறூர்விளங்கினது.—(எ-று)சாறு-திருவிழா. (௭)

அப்பதியிற்குலப்பதியாயரசர்சேனாபதியாஞ் ...... ....*
செப்பவருங்குடிவிளங்கத்திருவவதாரஞ்செய்தார் ....[மை
மெய்ப்பொருளை யறிந்துணர்ந்தார் விழுமியவேளாண் குடி
வைப்பனையமேன்மையினார் மானக்கஞ்சாறனார் .... ....*

(இதன்பொருள்.)

அந்த ஊரில் சிரேஷ்டமாகிய தலைமைபொருந்தி அரசர்களுக்குப் பரம்பரையாகச் சேனாபதி உத்தியோகத்தில் அமர்ந்துள்ள சொல்லுதற்கரிய குடியானதுவிளக்கத்தை அடை

ய அவதாரஞ்செய்தருளினார் மெய்மைபொருந்திய தெய்வ ர்இன்னதென்று அறிந்தவர் சிறந்தவேளாளரா து மரபினுக்கு திகழ்போன்றுள்ள மேன்மையை உடையவர் மானக்கஞ்சாற நாயனார் — எ-று) (எ)

புனிவுடையவடிவுடையார்பணியிறைம்பனிமதியி.... ..*
னணிவுடையசடைமுடியார்க்காளாகும்பதம்பெற்ற.......*
தணிவில்பெரும்பேறுடையார்தம்பெருமான்கழல்சார்ந்த .*
துணிவுடையதொண்டர்க்கேயேவல்செயுந்தொழில்பூண்டார்

(இதன் பொருள்)

பெரியவர்களுக்கு வணங்குதலைச்செய்கின்ற தேகத்தை யுடையவர்-பாம்போபிருளிர்ச்சிபொருந்திய சந்திரனையுங் தரிக்கின்ற சடைமுடியையுடைய பரமசிவனுக்கு அடிமையாகிய யோக்கியதையைப்பெற்றுத்தாழ்வில்லாதஒப்பற்றமோக்ஷத்தையும் பெற்றதற்குரியவர்தமதாண்டவராகியசுவாமியின் பாதமே கதியென்று அடையுந்துணிவுள்ள தொண்டர்களுக்கே பணிவிடைசெய்தல் நற்செய்கையாகவெண்ணி ஏற்றுக்கொண்டவர். (எ-று) (அ)

மாறில்பெருஞ்செல்வத்தின்வரம்பெருகமற்றதெலா. ....*
மாறுலவுஞ்சடைக்கற்றையந்தணர்தம்மடியாரா.. ......*
மீறில்பெருந்திருவுடையாருடையாரென்றியாவையுநேர் ..*
கூறுவதன்முன்னவர்தங்குறிப்பறிந்துகொடுத்துள்ளார். ..*

(இதன் பொருள்)

கெடுதலில்லாத பெரியசெல்வமானது நாளுக்குநாள் விருத்தியை அடைய அந்தச்செல்வமுழுதிருக்கும் - கங்கையுலாவுகின்ற கற்றையாகிய சடையையுடையசுவாமிக்கு அடியவரா குதலே குன்றாதபெரியசெல்வமாக நினைத்திருக்கும் பெரியவர்களே உரியவர்களென்றுஎல்லாப்பொருளையும் அவ்வடியார்கள் இது வேண்டுமென்று எதிரேவந்துசொல்லுதற்குமுன்னே அவர்கள் கருத்தறிந்து கொடுக்கின்றவர் — எ-று) (௯)

விரிகடல்சூழ்மண்ணுலகில்விளக்கியவித்தன்மையராம்....*
பெரியவர்க்குமுன்சிலநாட்பின்னைப்பேறின்மையினா. .....*
லரியதியாமலர்க்கழல்களறியாமையறியாதார்........ ..*
வருமகவுபெறற்பொருட்டுமனத்தருளால்வழுத்தினார் .....*

(இதன் பொருள்)

பரப்பாயிருக்குஞ் சமுத்திரஞ்சூழ்ந்த பூலோகத்தில் இப்படி

ப்பட்டசிவநேசத்தன்மையை விளக்கியடிமானக்கஞ்சாறநாயனா ர்க்குச்சிலநாள் வரைக்கும் பிள்ளையில்லாமையினால்விஷ்ணுவி னால் அறியப்படாததிருவடிகளின் பெருமையை அறிந்தவராகி ய இந்தச்சிவபத்தரானவர் குலம்விருததியாகிறதற்குஎதுவாகி யபிள்ளையைப் பெறும்பொருட்டு மனதிலேநிறைந்த அன் போடுசுவாமியையஸ்தோத்திரஞ் செய்தார் —(எ-று) (௰)

குழைக்கலையும்வடிகாதிற்கூத்தனாரருளாலே.............*
மழைக்குதவும்பெருங்கற்பின்மனைக்கிழத்தியார்தம்பால....*
விழைக்கும்வினைப்பயன்சூழ்ந்தவிப்பிறவிக்கொடுஞ்சூழல் .*
பிழைக்குநெறிதமக்குதவப்பெண்கொடியைப்பெற்றெடுத்தார்.

(இதன்பொருள்)

மானக்கஞ்சாறநாயனார் குண்டலம் அலைகின்ற நீண்டகாதினையு டைய நடேசாதிருவையினால் மழைபெய்யென்றால் பெய்ய த்தக்க பெருமைபொருந்திய கற்பினையுடைய மனைவியாரிடமா க முன்பிறப்பிற்செய்த வினைப்பயனானது சூழ்ந்துகொண்டி ருக்கும் இந்தப்பிறவியினதுமிகுந்த கொடியதுன்பத்தில்நின் றுந்தப்பிச்செல்லும் நல்லமார்க்கத்தைத்தமக்குக் கொடுக்கு ம்பொருட்டுக் கொடிபோன்ற ஒருபெண்குழந்தையைப்பெ ற்றெடுத்தார்.— எ-று) கொடுஞ்சூழல்கொடுமையாகிய எண் ணங்களுக்கு இடமாகிய என்று பொருள்கூறிப்பிறவியோடுஇ யையப்செய்தலும்ஒன்று.குழைக்குஎல்பதில-கு-சாரியை(௰க)

பிறந்தபெருமகிழ்ச்சியினாற்பெருமூதூர்களிசிறப்ப.....*
சிறந்தநிறைமங்கலதூரியமுழங்கத்தேவர்பிரா...........*
னறந்தலைநின்றவர்க்கெல்லாமளவிலவளத்தருள்பெருக்கி..*
புறந்தருவார்பலர்போற்றப் பொற்கொடியைவளர்க்கின்றார் *

(இதன்பொருள்)

குழந்தைபிறந்த அதிகசந்தோஷத்தால் பெருமைபொருந்தி ய அந்தப்பழமையாகிய ஊரில் மகிழ்ச்சியினால்நிறையச்சி றப்புற்றமங்கலவாத்தியங்கள் கோஷிக்கப்பரமசிவனால் அருளி ச்செய்யப்பட்டிருக்கும் சைவாகம விதிப்படி நடக்கின்றவர்க ளுக்கெல்லாம் அளவில்லாதவளத்தையுடைய கொடையினால் சவுக்கியமுண்டாகச்செய்து புறத்திலுள்ளபலரும் ஸ்தோத்தி ரம்பண்ணப் பொற்கொடிபோன்றபெண்ணை வளர்க்கின்றார். (எ-று) (௰உ)

காப்பணியுமிளங்குழவிப்பருவநீங்கிக்கமழ்ஞ்சுரும்பின்.. ....*
பூப்பயிலுஞ்சுருட்குழலும்பொலன்குழையுமுடன்றாழ....*
யாப்புறுமென்சிறுமணிமேகலையணிசிற்றாடையுடன்... ீ
கோப்பமைகிண்கிணியசையக்குறுந்தளிர்மெல்லடியொதுக்

(இதன்பொருள்.)

காப்புத்தரிக்கின்றஇளங்குழந்தைப்பருவம்நீங்கிவண்டுமொய்க்கும் வாசனைபொருந்திய புஷ்பங்களை அணிந்த சுருண்டிருக்கின்றகூந்தலும், பொன்னாற்செய்யப்பட்டகுண்டலமும், தாழ்ந்துதொங்கச் சிறியமணிகளாற்கட்டப்பட்டமேகலாபரணமுமிருதுவாகியசிற்றாடையோடுசேர்க்கப்பட்டிருக்குங்கிண்கிணியானது அசையும்படிசிறியதளிர்போன்றமென்மையாகிய பாதங்களினாலே ஒதுங்கிநடந்தது.— எ-று) (௰௩)

புனைமலர்மென்கரங்களினாற்போற்றியதாதியர்நடுவண்...*
மனையகத்துமணிமுன்றின் மணற்சிற்றிலிழைத்துமணிக்...*
கனைகுரலார்புரமலையக்கழல்முதலாப்பயின்றாமலை....*
நனைமுகைசெய்முதற்பருவந்தணிந்தணைப்பெண்ணமுதம்..*

(இதன்பொருள்)

அலங்காரஞ்செய்யத்தகுதியாயிருக்கின்றமிருதுவாகியகைகளினால் எடுத்துவளர்க்கின்றதாதியர்களுக்கு நடுவில் வீட்டினுள்ளிடமாகியரத்னங்கள்பதிப்பிக்கப்பட்டிருக்குமுற்றங்களில் மணல்கொண்டுசிறுவீடுகட்டி முழங்குமோசையை உடைய மணிகளிழைத்தசிலம்புகள் அலையக்கழங்காடல்முதலியவிளையாடல்களைச் செய்துஸ்தனமானது அரும்பினதுதானிபோல்தோன்றுகின்றவொப்பற்றபருவத்தை அடைந்தாள் - அந்தஅமிர்தம் போன்றபெண் — எ-று) கழல்வழக்கத்தில் கழற்சிக்காய். முதலாவென்பதனால் அம்மனைபந்தாடலுங்கொள்க. முதற்பருவம் என்பதற்கு - பேதைப்பருவம்என்பாருமுளர், எழுவயதில் அப்பருவம்வருதலால் அக்காலத்தில் பெண்களுக்கு ஸ்தனம் அரும்புபோலபருக்கிறது கூடாமையென்றுமறுக்க.( ௰௪)

உறுகவின்மெய்ப்புறம்பொலியவொளிநகைப்பைமுலைவருத்த
முறுவல்புறமலராதமுகிழ்முத்தநகையென்னு......*
நறுமுறுவல்மென்கொடிமருங்குலைவிர்ச்சுருளந்தளிர்ச்செங்கை
மறுவிலருலக்கொழுந்தினுக்குமணப்பருவம்வந்தணைய....*

(இதன்பொருள்)

மிகுந்தஅழகானதுதேகத்தின்புறத்தில்விளங்க,காந்தியுள்ள இ

டையமூங்கிலயான துபாரத்தால்வருந்த, புறத்தில்மலராத அரு ம்பினையும் ஒளியையுடையமுத்தினையும் ஒப்பிடப்படுமென்கி றதந்தங்களையும், வாசனைபொருந்திய அரும்பினையுடையமெ ல்லியகொடிக்குநிகராகிய இடையையும் மணம்வீசுகிற நெய் யினால்குளிர்ச்சிபொருந்திய கூந்தலையு ம் அழகாகியதளிர்போ ன்ற சிவந்தகைகளையுமுடைய களங்கமற்ற-மானக்கஞ்சாறநா யனார் குலத்துக்குக் கொழுந்துபோன்றிருக்கும் பெண்ணுக் குக்கலியாணஞ்செய்யும் பருவம்வந்தடைய.— எ-று) (யரு)

திருமகட்குமேயல்விளங்குஞ்செம்மணியின்றீபமெனு .....*
மொருமகளைமண்ணுலகுமேலாங்குலமரபினராய்க .......*
கருமிடற்றுமறையவனார்தமராயகழறிலையர் ....     .......*
பெருமகற்குமகட்பேசவந்தணைந்தார்பெருமுதியோர்  ...*

(இதன்பொருள்)

லட்சுமிக்குமேலாகவிளங்கும் உருவ துனையுடையமாணிக்கவி ளக்குப்போன்ற ஒப்பற்ற தன்மகளை நிலைபெற்ற உலகத்துக்கு உ யர்ந்தவேளாளர்குலத்திற்பிறந்தவராகிய —கண்டத்தினையு டைய-வேதங்களைத் திருவாய்மலர்ந்தருளிய சுவாமிக்குஅன் பராகிய வீரகண்டைபதரித்தகாலினையுடையஏயர்கோமானாகிய பெரு மைபொருந்திய குமாரராகியகலிக்காமநாயனாருக்குப் பெண் பேசவந்தடைந்தார் பெருந்தன்மையையுடையவிருத்தர்கள். (எ-று)                                          (யசு)

வந்தமுதறிவோரைமானக்கஞ்சாறனார் ....  ....  ......*
முந்தைமுறைமையின்விரும்பிமொழிந்தமணத்திறங்கேட்டே
யெந்தமதுமரபினுக்குத்தகும்பரிசாலேயுமெனச் .... .. *
சிந்தைமகிழ்வுறவுரைத்துமணநேர்ந்துசெலவிட்டார் .... *

(இதன்பொருள்)

மானக்கஞ்சாறநாயனார் தம்மிடத்துக்குவந்த அறிவில் முதிர் ந்தபெரியோரை விரும்பி வரவழைத்து வெகுநானாக உறவா யிருப்பதைப்பற்றிச்சொல்லிய கலியாணவார்த்தையைக் கே ட்டுஎம்முடைய வமிசத்துக்குத் தகுதியாயிருக்கிறபடியால் க லிக்காமநாயனார்க்குப் பெண்ணைக்கொடுக்கத்தகுமென்று ம னது மகிழ்ச்சியடையப்பேசி மணஞ்செய்துகொடுக்கச் ச ம்மதப்பட்டு வந்தவர்களை அனுப்புவித்தார்.—(எ-று) (யஎ)

சென்றவருங்கஞ்சாறர்மணமிசைந்தபடிசெப்பக் ..... .. *
குன்றனையபுயத்தேயர்கோனாருமிகவிரும்பி ...., ...., ..*

நின்றநிலைமையினிரண்டுதிறத்தார்க்குநேராய...... ....*
மன்றலவினைமங்கலநாண்மதிநூலவல்லவர்வகுத்தார்.. .. *

(இதன்பொருள்)

மானக்கஞ்சாறநாயனூர் - பெண்கொடுக்க ஒப்புக்கொண்டதைப்போலவர்கள்சொல்ல, மலைபோல உயர்ந்த தோளினையுடைய ஏயர்கோன் என்பவர் மிகவுஞ்சந்தோஷப்பட்டு அவருத்தரவால இரண்டுதிறத்தார்களும் ஒத்திருக்கும் நிலைமையைப் பார்த்துவிவாகஞ்செய்யத்தகுந்த மங்களகரமான நாளைப்புத்தியையுடைய சோதிஷசாஸ்திரமுணர்ந்த பெரியோர்கள்நிச்சயித்தார்கள் (எ-று) (௰௮)

மங்கலமாஞ்செயலவிரும்பிமகட்பயந்தவள்ளலார்.. .. ..*
தங்குலநீள்சுற்றமெலாந்தயங்குபெருங்களிசிறப்பப்....[சக்
பொங்கியவெண்முளைப்பெய்து பொலங்கலங்களிடைநெருங்
கொங்கலர்த்தண்பொழில்மூதூர்வதுவைமுகங்கோடித்தார்

(இதன்பொருள்)

மகளைப்பெற்றதனால் இனி ஒப்பற்ற கொடையின்பெருமையை அடையுர் மானக்கஞ்சாறநாயனூர் தமதுபாயிலுள்ள பரப்பாயிருக்கின்ற சுற்றத்தாரெல்லாம் மிகுந்தகளிப்பின சிறப்பை அடைந்து பிரகாசிக்க எழும்புகின்ற வெண்மைபொருந்திய முளையுண்டாகும்படிபாலிகைவைத்துப் பொன்னாற்செய்யப்பட்ட பாத்திரங்கள் அவ்விடத்தில்சடங்குசெய்வதற்காக நெருங்க-வாசனைபொருந்தியபுஷ்பங்களையுடைய சோலைசூழ்ந்தபழமைபொருந்தியகஞ்சாறூர் என்பதனைக்கலியாணத்துக்குச்சிறப்பாக அலங்காரஞ்செய்தார்கள்.—(எ-று) (௰௯)

கஞ்சாறர்மகட்கொடுப்பக்கைப்பிடிக்கவருகின்ற..... ....*
வெஞ்சாதபுகழ்ப்பெருமையேயர்குலப்பெருமானுந் ....*
தஞ்சால்புநிறைசுற்றந்தலைநிறையமுரசியம்ப...........*
மஞ்சாருமலர்ச்சோலைக்கஞ்சாற்றின்மருங்கணைய. ......*

(இதன்பொருள்)

மானக்கஞ்சாறநாயனூர் தம்முடையமகளைக்கொடுக்க விவாகஞ்செய்துகொள்ளவருகின்ற குறையாதபுகழினையுடையகலிக்காமநாயனூரும் பெருமைபொருந்திய சுற்றத்தார் கூட்டமாயிவா முரசவாத்தியமுழங்க மேகங்கள்தவழ்கின்றபுட்பங்களையுடைய சோலைசூழ்ந்த கஞ்சாறு என்னு மூரில்வந்துசேர. (எ-று) (௨௰)

வள்ளலார்மணமவ்வூர்மருங்கணையாமுன்மலர்க்க ...... ..*
ணொளிழையைப்பயந்தார்தந்திருமனையிலொருவழியே. .*
தெள்ளுநுரைநீருலக முய்வதற்குமற்றவர்த ... ........*
முள்ளநிலைப்பொருளாயவும்பர்பிரான்றுமணைவார் .... ..*

(இதன்பொருள்)

கலிக்காமநாயனார் கலியாணஞ்செய்துகொள்ள அவ்வூர்க்குவருகிறதற்குமுன்னே நீலோற்பலம்போன்ற கண்களையும் பிரகாசம்பொருந்திய ஆபரணங்களையும்உடையபெண்ணைப்பெற்றமானக்கஞ்சாறநாயனாரது அழகாகியவீட்டில்-ஒப்பற்ற தன்மையாகச்சங்குமுதலானவைகளைக்கொழிக்கின்ற அலைகளையுடைய கடல்சூழ்ந்த உலகமானது பிழைக்கும்பொருட்டு அவ்வடியாரது மனத்திலேவாசஞ்செய்கின்ற பொருளாகிய தேவர்களுக்கு நாதரான பரமசிவன் எழுந்தருளுகிறதற்குத் திருவுளங்கொண்டார்.—(எ-று) (௨௧)

(வேறு.)

முண்டத்திறைநெற்றியின்மேல்முண்டித்ததிருமுடியிற் ....*
கொண்டசிகைமுச்சியின்கட்கோத்தணிந்தவெண்புமணிப் ..*
பண்டொருவனுடலங்கப்பரித்ததனாலதுகடைந்த ... ....*
வெண்டரளமெனக்காதின்மிசையலையுங்குண்டலமும் ....*

(இதன்பொருள்)

விபூதியின்பூச்சு நிறைந்தநெற்றிமேலாக சௌளம்பண்ணியிருக்கின்ற சிரசினுச்சியில் வைக்கப்பட்டிருக்கின்ற குடுமியில் கோத்துத்தரிக்கப்பட்ட எலும்பினாற்செய்யப்பட்டமணியும் முற்காலத்தில் விஷ்ணுவின் முதுகெலும்பை எடுத்து வைரவர் அணிந்தகாலத்தில் அதனால் முத்தின்வடிவாகக்கடைந்த மணிபோல்காதின்மேலாக அசைகின்றகுண்டலமும்.(எ-று)(௨௨)

அவ்வென்பினொளிமணிகோத்தணிந்ததிருத்தாழ்வடமும் ..*
பைவன்பேரரவொழியத்தோளிலிடப்பட்டிலகையுஞ் .... *
மைவந்தநிறக்கேசவடப்பூணுநூலுமனச்..... .... ....*
செவ்வன்பர்பலமாற்றுந்தருநீற்றுப்பொக்கணமும்.......*

(இதன்பொருள்)

முன்சொல்லப்பட்ட எலும்பினாற் செய்யப்பட்டஒளிபொருந்திய மணிகளைக்கோத்துத்தரிக்கப்பட்ட தாழ்வடமும் படம்பொருந்திய வலியபாம்பில்லாமல்தோளில்தரித்த யோகப்

பட்டையுங்கருமையாகியநிறத்தையுடையமயிரினாற்செய்யப்பட்டவெடம்போன்றிருக்கின்றபூணூலும்நல்லவழியிற்செல்கின்ற அடியார்களது பாவத்தைப்போக்குகின்றதிருநீற்றுப்பட்டையும்.—(எ-று) (௨௩)

ஒருமூன்கைத்தனிமணிகோத்தணிந்தவொளிர்ருத்திரமும் .. *
மருமறைநூற்கோவணத்தின்மிசையசைந்ததிருவுடையு.... *
யிருநிலத்தின்மிசைதோய்ந்தவெழுதரியதிருவடியும்..... .. *
திருவடியிற்றிருப்பஞ்சமூத்திரையுத்திகழ்ந்திலங்க.... ..... *

(இதன்பொருள்)

மூன்னங்கை ஒன்றில் ஒன்றி ருத்திராக்ஷமணியைக் கோத்தத்தரித்த பிரகாசிக்கின்றருத்திரமும்,அரிதாகியவேதமே உருவங்கொண்ட கோவணத்தின் மேலாக அசைகின்ற அழகிய உடையும்,பெருமைபொருந்திய பூமியின்மேல் நன்றாக அழுந்தியநிலைக்கிறதற்கெட்டாததிருப்பாதங்களும்,அந்தப்பாதங்களில் பஞ்சாயுதங்களும் பிரகாசிக்க.—(எ-று) ருத்திரம்-கயிறு (பஞ்சாயுதம்) அவை தண்டாயுதம்-வாள்-சங்கு-சக்கரம்-வில்.

பொடிமூடுதழலென்னத்திருமேனிதனிற்பொலிந்த ..... *
படிநீறுவருநீற்றின்பரப்பணிந்தபான்மையராய்க........ *
கொடிநீடுமறுகணைந்தது மூடையகுளிர்கமலத்.... .... *
தடிநீடுமனத்தன்பர்தம்மனையினகம்புகுந்தார். .... .... *

(இதன்பொருள்)

சாம்பல்மூடியநெருப்புப்போல்-உலகத்தார்விருத்திபடைகிறதற்கேதுவாகிஇயற்கையாகமகிமையை உடையதிருநீற்றின்பரந்த உத்தூளனத்தைக்கொண்ட தன்மைபொருந்திய திருமேனியை உடையவராய்க்கொடிகள்கட்டிய நீண்ட வீதியில்சேர்ந்துதம்முடைய குளிர்ச்சிபொருந்தியதாமரைமலரையொத்ததிருவடிகள் தங்கியமனத்தையுடையஅடியாராகியமானக்கஞ்சாறநாயனாருடைய வீட்டிற்புகுந்தார்.—(எ-று) (௨௪)

வந்தணைந்தமாவிரதமுனிவரைக்கண்டெதிரெழுந்து...... *
சிந்தைகளிகூர்ந்துமகிழ்சிறந்தபெருந்தொண்டனு... .... *
ரெந்தைபிரான்புரிதவத்தோரிவ்விடத்தேயெழுந்தருள... *
வுய்ந்தொழிந்தேனடியேனென்றுருகியவன்பொடுபணிந்தார்

(இதன்பொருள்)

மானக்கஞ்சாறநாயனார் தமதுமனையில்வந்தமாவிரதமதத்தில்

சம்பந்தப்பட்டிருக்கின்றமுனிவரைக்கண்டவுடனே எழுந்தெ
திரகப்போய் மனதுமிகவுஞ்சந்தோஷித்து விருப்பத்தைய
டைந்த பெருமைபொருந்திய தொண்டரானவர் எமக்கு ஆ
ண்டவராகிய பரமசிவனிடத்தில் அன்புள்ளதவத்தினையுடைய
பெரியவர் - இவ்விடத்திற்கு எழுந்தருளிவந்ததனாலே அடி
யேன் பாவத்தினின்றும் நீங்கிப்பிழைத்தேன் என்று உருக்
கமுற்ற அன்போடுபணிந்தார்.—(எ-று) (௨௬)

நற்றவராம்பெருமானார் நலமிகுமன்பரைநோக்கி........*
யுற்றசெயன்மங்கலமிங்கொழுகுவதென்னெனவடியேன் ..*
பெற்றதொருபெண்கொடிதன் வதுவையெனப்பெருந்தவரு *
மற்றுமக்குச்சோபனமாகுவதென்றுவாய்மொழிந்தார்.. ..*

(இதன்பொருள்.)

நல்லதவத்தினையுடையவராகவேடங்கொண்ட பரமசிவன் நற்கு
ணங்கள்மிகுந்த அன்பரைப்பார்த்தருளி இப்போதுமங்களகர
மானசெயல்செய்வதென்னதற்காகவென்றுகேட்க அதற்குமானக்
கஞ்சாறநாயனார் அடியேன்பெற்றகொடிபோன்ற பெண்ணிற்
குக் கலியாணம் நடக்கப்போகிறது என்றுசொல்ல முனிவரு
ம் உமக்கு நன்மையுண்டாகக்கடவதென்று திருவாய்மலர்ந்த
ருளினார்.—(எ-று) (௨௭)

ஞானச்செய்தவரடிமேற்பணிந்துமனையகநண்ணி ...... *
மானக்கஞ்சாறனார்மணக்கோலப்புனைந்திருந்த . ........*
தேனக்கமலர்க்கூந்தற்றிருமகளைக்கொண்டணைந்து .......*
பானற்கந்தாமறைத்துவருமவரைப்பணிவித்தார் .... ..*

(இதன்பொருள்)

மானக்கஞ்சாறநாயனாரானவர் ஞானம்பொருந்தியதவத்தினை
யுடையசுவாமியின் பாதத்தின்மேல்வணங்கிவிட்டுள்ளேவந்து
மணக்கோலங்கொண்டிருந்த தேன்பிரகாசிக்கின்ற மலர்களை
த்தரித்தகூந்தலையுடையதமதுமகளை அழைத்துக்கொண்டுவந்
துநீலோற்பலபுஷ்பம்போல் கருமையாகிய கழுத்தைமறைத்
துவருகின்றசுவாமியைப் பணியும்படிசெய்வித்தார்.—(எ-று)

தஞ்சரணத்திடைப்பணிந்துதாழ்ந்தெழுந்தமடக்கொடிதன்*
மஞ்சுதழைத்தெனவலைந்தமலர்க்கூந்தற்புறநோக்கி.......*
யஞ்சலிமெய்த்தொண்டரைப்பார்த்தணங்கிவடன்மயிர்நமக்
கஞ்சவடிக்காமென்றார்பாவவடித்தலங்கொடுப்பார் .. [குப்

(இதன்பொருள்.)

வணங்கினவர்களுக்குத்திருவடியை அருள்செய்கின்றவராகிய சுவாமியானவர் தம்முடையபாதத்தில் தாழ்ந்து நமஸ்காரஞ் செய்து எழுந்த இளமைபொருந்திய கொடிபோன்ற பெண்ணினது மேகம்பாவினதுபோல் அலைகின்ற புஷ்பங்களைத்தரித்த பின்பக்கத்திலுள்ள கூந்தலைப்பார்த்து-அஞ்சலிசெய்துகொண்டிருக்கின்ற உண்மைபொருந்திய அடியவரைநோக்கி இப்பெண்ணினது தலைமயிர் நமது பஞ்சவடிக்கயிற்றுக்குத்தக்கதாயிருக்கிறதென்றார்.—(எ-று) (௨௯)

அருள்செய்தமொழிகேளாவடற்சுரிகைதனையுருவிப் ....
பொருள்செய்தாமெனப்பெற்றேனெனக்கொண்டுபூங்கொடித
னிருள்செய்தகருங்கூந்தலடியிலரிந்தெதிர்நின்ற ........*
மருள்செய்தபிறப்பறுப்பார்மலர்க்கரத்தினிடைநீட்ட....*

(இதன்பொருள்.)

பரமசிவன் அருளிச்செய்த வார்த்தையைக்கேள்விப்பட்டுயுத்தஞ்செய்வதற்குக் கருவியாகிய வாளை உருவி அடியார் இப்படிக்கேட்டதைக் கொடுப்பது முற்பிறப்பிற்செய்த நல்ல கருமத்தால் ஆகவேண்டியது ஆதலால் என்ன புண்ணியஞ்செய்தேனோவென்று எண்ணிப்பூங்கொடிபோலிருக்கிறஅப்பெண்ணினுடையஇருளொத்தகருமையாகியகூந்தலையடியில்அரிந்து எதிராகநின்ற மயக்கத்தை உண்டாக்கும் பிறப்பொழிக்கவல்ல சுவாமியினது மலர்போன்றகையிலநீட்ட.—(எ-று) (௩௰)

வாங்குவார்போனின்றமறைப்பொருளாமவர்மறைந்து ....*
பாங்கின்மலைவல்லியுடன்பழையமழவிடையேறி.. .... ..*
யோங்கியவிண்மிசைவந்தாரொளிவிசும்பினில்நெருங்கத் ..*
தூங்கியபொன்மலர்மாரிதொழும்பர்தொழுதெதிர்விழுந்தார்

(இதன்பொருள்.)

வேதத்தின் பொருளாயிருக்கின்ற சுவாமியானவர் வாங்குகிறவர்போல்நின்று மறைந்து பெருமைபொருந்தியபார்வதியோடு பழமையாகிய இளமையுள்ள ரிஷபவாகனத்தில் எழுந்தருளி உயர்ந்த ஆகாயத்தில் வந்தார்-பிரகாசம்பொருந்தியஆகாயத்தில்நின்றும் பூமியில்நெருங்கும்படி பொன்னிறமாயிருக்கின்ற கற்பகபுஷ்பங்களின் வருஷஞ் சொரியப்பட்டன அப்போது அடியார்எதிராகப்பூமியில்பணிந்துதொழுதார்.(எ-று)

விழுந்தெழுந்து மெய்ம்மறந்த மெய்யன்பர் தமக்கு மதிக் ..*
கொழுந்தலையவிழுங்கங்கைகுழித்தசடைக்கூத்தனு .... ...*
றொழும்பனின்னம்பக்கதுனக்கிருந்தபரிசிந்தச் .... ........*
செழு புவனங்களிலேறச்செய்தோமென்றருள்செய்தார் ..*

(இதன்பொருள்.)

இப்படிபூமியிற்படிந்து எழுந்து மெய்மறந்த மெய்மையாகிய
அன்பரான மானக்கஞ்சாறநாயனார்க்கு மூன்றாம்பிறை அலை
யவிழுகின்ற கங்கைதங்கிய சடையையுடைய நடேசர் மிகுந்
த அன்போடு நம்மிடத்தி லுனக்கிருந்த தன்மையைச் செழு
மைபொருந்திய உலகங்களில் விளங்கச் செய்தோமென்று திரு
வாய்மலர்ந்தருளினார்.—(எ-று) (௫௨)

மருங்குபெருங்கணநாதர்போற்றிசைப்பவானவர்க ......*
ணொருங்கவிடைமேற்கொண்டுநின்றவர்முன்னின்றவர்தா ..*
மொருங்கியநெஞ்சொடுகரங்களுச்சியின்மேற்குவித்தையர் *
பெருங்கருணைத்திறம்போற்றும்பெரும்பேறுநேர்பெற்றார் *

(இதன்பொருள்.)

அருகில் பெருமைபொருந்திய சிவகணத்தலைவர்கள் வணங்கி
த்துதிக்கவும், தேவர்கள்சூழவும், ரிஷபவாகனத்தின்மேலெழு
ந்தருளிநின்ற பரமசிவன்முன் நின்ற மானக்கஞ்சாறநாயனார்
குவிந்தமனதோடு கைகளைத் தலைமேல்வைத்துக் குவித்துக்
கொண்டு சுவாமியினது உயர்ந்த கிருபையினது திறத்தைப்பு
கழ்ந்துகொண்டிருக்கும் பேற்றைப்பெற்றார்.—(எ-று) (௫௫)

தொண்டனார்தமக்கருளிச்சூழ்ந்திமையோர்துதிசெய்ய ...*
விண்டைவார்சடைமுடியாரெழுந்தருளிப்போயினார் .... *
வண்டுவார்குழற்கொடியைக்கைப்பிடிக்கமணக்கோலங் ...*
கண்டவர்கள்கண்களிப்பக்கலிக்காமனூர்புகுந்தார் ......*

(இதன்பொருள்.)

அடியார்க்கு இவ்விதமாக அருள்செய்து தேவர்கள் நாற்புற
த்திலுஞ்சூழ்ந்து துதிக்க, இண்டைப் பத்திரத்தைத்தரித்தநீண்
ட சடைமுடியையுடைய பரமசிவன் மறைந்த திருக்கோலங்
கொண்டார். நீடிய வாசனை நெய் ஒழுகுகின்ற வண்டுகள்
மொய்க்குங் கூந்தலையுடைய கொடிபோன்ற மானக்கஞ்சாற
நாயனார்மகளைக் கல்யாணஞ்செய்யும்பொருட்டுக் கொண்ட ம

ணக்கோலத்தைப்பார்த்தவர்கள் கண்கள் களிகூரகலிக்காம
நாயனார் வந்தடைந்தார்.—(எ-று) (௬௪)

வந்தணைந்தவேயர்குலமன்னவனார்மற்றந்தச் .... ....... *
சிந்தைநினைவரியசெயல்செறிந்தவர்பாற்கேட்டருளிப் .. *
புந்தியினன்மிகவுவந்துபுனிதனாருள்போற்றிச் .... .... *
சிந்தைதளர்ந்தருள்செய்ததிருவாக்கின்றிறங்கேட்டு.. .... *

(இதன்பொருள்)

கஞ்சாறென்னும் ஊருக்குவந்து சேர்ந்த கலிக்காமநாயனார்-மனதால்நினைக்கிறதற் கருமையாகிய அப்படிப்பட்ட தெய்விகச்செயலை அங்குஇருக்கிறவர்களிடத்தில் கேட்டுவகைமனதோடுமிகவும்விரும்பிச் சுவாமியின்கருணை அவ்வடியார் விஷயமாக இப்படியிருந்ததைப்பற்றி ஸ்தோத்திரஞ்செய்து மனதளர்ச்சியை அடைந்து சுவாமி சொல்லியருளிய திருவாக்கினைக்கேட்டு —(எ-று) (புந்தியினன் மிகவுவந்ததலாவது) பரமசிவனனுக்கிரகம்பெற்ற தொண்டருடைய மகள் தமக்குப்பாரியாக ஏற்பட்டாளேயென்று சந்தோஷத்தை அடைதலாம். கலிக்காமநாயனார் அந்தப்பெண்ணை கலியாணம் பண்ணிகொண்டபின்பு சுவாமிவந்து வேட்டாலவேட்டதை அறிந்து கொடுக்கத் தமக்கதிகாரம் உண்டாயிருக்கும். அதன்முன் தாம் அடையவேண்டிய பேறு தமது மாமனாரோ பெற்றாராகக்கொண்டாரென்று வருந்தினரென்பதைச் சிந்தைதளர்ந்து என்பதனால்தெரிவித்தார். பரமசிவனுக்குச் சிறந்த அன்பராகிய மானக்கஞ்சாறநாயனார் தம்முடைய மகள் கலியாணத்துக்கு இல்லாமல் கயிலாசத்துக்குச் சென்றதைக்குறித்தும் அதற்காகச் சுற்றத்தார்முதலியோர் ஒருவகையா யிருப்பதுபற்றியும் விசனப்பட்டாரென்றலும் பொருந்தும். (திருவாக்கின்திறமாவது) சுவாமி அசரீரியாய்க்கலிக்காமா நீ துக்கப்படாதே மனங்களிப்பாக அந்தப்பெண்ணை விவாகஞ்செய்துகொள்ளென்று எழுந்த வார்த்தையாம். (௬௫)

மனந்தளருமிடர்நீங்கிவானவர்நாயகரருளாற் ....... .... *
புனைந்தமலர்க்குழல்பெற்றபூங்கொடியைமணம்புணர்ந்து .*
தனம்பொழிந்துபெருவதுவையுலகெலாந்தலைசிறப்ப ... *
இனம்பெருகத்தம்முடையவெயின்மூதூர்சென்றணைந்தார் *

(இதன்பொருள்.)

கலிக்காமநாயனார்-மனத்துக்குத்தளர்ச்சியையுண்டாக்குந்து

நகற்கு இடமாகியஒப்பில்லாதநகரமானது ஆண்வண்டுகள்பெண்வண்டுகளோடுகூடிற்றொலிக்கக்கரும்புகள் தமதுமென்மையானகணுக்கள்பிளந்து மிகுதியாகமதுரமாகியசாற்றைச்சொரிகின்ற கணமங்கலமென்னும் நகரமாம் — (எ-று) (௧)

செந்நெலார்வயல்காட்டச்செந்தாமரை.... .......... *
முன்னர்நந்துமிழ்முத்தஞ்சொரிந்திடத்.... ......., .... *
துன்னுமள்ளர்கைமேற்கொண்டுதோன்றுவார்.......... *
மன்னுபங்கயமாநிதிபோன்றுளார்.. ............ ....*

(இதன்பொருள்)

செந்நெற்பயிர்வளர்கின்ற வயல்கள் செந்தாமரை மலர்களைப் புட்பிக்க அந்தமலர்களின்மேல் சங்குகள் தாங்கள் பெறுகின்ற முத்துக்களைச்சொரிய நெருங்கியபள்ளர்கள் அந்தமுத்துக்களையுடைய தாமரைமலர்கள்கையில் ஏந்திக்கொண்டுவருவார்கள் நிலைபெற்றபதுமநிதியை உடையவர்கள்போல் — (எ-று)

வளத்தினீடிப்பதியதன்கண்வரி.......... ........ .... *
யுளர்தருமைப்பாலுடையோர்முகத்தினும்.. .......... *
களதுன்மீதுங்கயல்பாய்வயலயற்....... .... ........ *
குளத்துநீருங்குழையுடைநீலங்கள்.. .................. *

(இதன்பொருள்)

பலவளங்களாலும் மிகுந்த பெருமை அடைந்திருக்கின்ற அந்நகரத்தில் வண்டுகள்கிண்டுகின்ற கூந்தலையுடைய ஸ்திரீகள்முகத்திலும், அவர்கள்கழுத்திலும் கெண்டைமீன்கள்பாய்கின்ற வயல்களுக்கு அயற்புறத்திலுள்ள குளங்களில் இலைகளையுடைய நீலோற்பலங்கள் நீண்டுவளர்ந்திருக்கும். — (எ-று) (௨)

அக்குலப்பதிதன்னிலறநெறித்................ .. .. *
தக்கமாமனைவாழ்க்கையிற்றங்கினார் .... .... ..... ..... *
தொக்கமாநிதித்தொன்மையினோங்கிய .......... .... *
மிக்கசெல்வத்துவேளாண்டலைமையார்.. .......... .... *

(இதன்பொருள்)

அந்தச் சிரேஷ்டம்பொருந்திய நகரத்தில் தருமவழியில்செல்லுதலால் தகுதியை அடைந்திருக்கிற பெருமைபொருந்திய இல்வாழ்க்கையில் தங்கினவர் தலைமுறை தலைமுறையாகத்

லுயிர்திருக்கும் அளவற்ற திரவியத்தால் பெருமைபெற்ற சம்பத்தையுடைய வேளாளர்குலத்துக்குத் தலைமைபூண்டவர். (எ-று) (௪)

தாயனென்றுநாமந்தரித்துளார்..........................*
சேயகாலந்தொடர்ந்துந்தெளிவிலா....................*
மாயனார்மண்கிளைத்தறியாத்தவத்....................*
தூயதாண்மலர்ப்பாதந்தொடர்ந்துளார்..................*

(இதன்பொருள்.)

தாயனென்கின்ற பேரைத்தரித்தவர் ஞானமில்லாத விஷ்ணுவானவர் பன்றியின் அவதாரங்கொண்டு அனேககாலமாகப் பூமியைத்தோண்டி யறியக்கூடாத பரமசிவனது மகிமைபொருந்திய பரிசுத்தமாகிய அன்றுமலர்ந்த தாமரைப்பூவையொத்த பாதத்தை அறிந்திருக்கின்றவர்.—(எ-று) (௫)

யின்னுசெஞ்சடைவேதியர்க்காமென்று.....................*
செந்நெலின்னமுதோடுசெங்கீரையு.......................*
பன்னுமைத்துணர்மாவடுவுங்கொணர்ந்.....................*
தன்னவென்றமுதுசெய்விப்பால்.........................*

(இதன்பொருள்)

பிரகாசிக்கின்ற சிவந்தசடையையுடைய கைலாசபதிக்கு ஆகுமென்று செந்நெலரிசி அன்னத்தோடு சிவந்தகீரையும் நிலைபெற்ற பசுமைபொருந்திப் பூங்கொத்துக்களையுடைய மாமரத்தில்காய்க்கின்ற வடுவுங் கொண்டுவந்து இப்படிப்பட்டவைகளை எப்போதும் படைத்துக்கொண்டு வருவார்.—(எ-று)

இந்தநன்னிலையின்னல்வந்தெய்தினுஞ்.....................*
சிந்தைநீங்காச்செயலினுவந்திட........................*
முந்தைவேதமுதல்வர்வர்வழி...........................*
வந்தசெல்வமறியாமைமாற்றினார்........................*

(இதன்பொருள்.)

இந்தப்படிசுவாமிக்குப்படைத்துக்கொண்டுவருகிறதைத் தரித்திரம் வந்தகாலத்திலும் மனந்தளராத செய்கையோடுவிரும்பி நடப்பித்துவரப் பழமையாகிய வேதங்களையுண்டாக்கிய முதல்வராகிய பரமசிவன் அந்த அடியவரிடத்திலிருந்த செல்வமெல்லாம் இப்படிப்போயிற்றென்று ஒருகாரணமுந் தெரிந்துகொள்ளக்கூடாமலேயே மாறிப்போகச்செய்தார்(எ-று)

மேவுசெல்வங்களிறுண்விளங்கனி ........ ...... ....*
யாவதாகியழியவுமன்பிஞற் .... .... ..... ..... ..*
பாவைபங்கர்க்குமுன்புபயின்றவித் .... .... ..... ....*
தாவில்செய்கைதவிர்ந்திலர்தாயனூர் ........ .. ........*

(இதன்பொருள்.)

தாயனார் பெற்றிருந்தபாக்கியம் முதலில் விர்த்தியாவதுபோல தோன்றிப் பின்பு யானையுண்ட விளாம்பழம்போல் நிலை கெட்டு அழியவும், பத்தியினாலே பார்வதீசமேதராகிய பரம சிவனுக்குத் தரித்திரமில்லாதகாலத்தில் கெடுதலில்லாத செய்கையோடு சுவாமிக்குநடப்பித்துக்கொண்டுவந்தபடி செந்நெலரிசியுமாவடுவும் கீரையுந்தவறாமல் நைவேத்தியத்துக்குக்கொடுத்துக்கொண்டுவந்தார்.—(எ-று) (அ)

அல்லனல்குரவாயிடக்கூலிக்கு ...... .................*
நெல்லறுத்துமெய்ந்நிடியவன்பினு ........... ........*
னல்லசெந்நெலிற்பெற்றனநாயனார்க் ....................*
கொல்லையின்னமுதாக்கொண்டொழுகுவார் ........ ....*

(இதன்பொருள்)

நாயனார் மிகுந்ததரித்திரத்தை அடைந்து அவ்வூரிலேதானே கூலிக்காக நெல்லறுத்து-உண்மையாகவளர்ந்துள்ள பக்தியினால்தாம்கூலியாகப்பெற்ற சிவட்புநெல்லைஅரிசியாக்கிச்சுவாமிக்குச்சீக்கிரத்தில் இனிமைபொருந்திய அன்னமாகச்செய்வித்துவருவார்.—(எ-று)அல்லனல்குரவாயென்பதனால் வீடு-பொன்-நிலம்-மாடு-முதலியவெல்லாம் இழந்துதரித்திரரானாரென்பதுபெற்றாம்.செந்நெல்லென்பதுவழக்கத்தில்சம்பாநெல்லாம்

சாலிதேடியறுத்தவைதாம்பெறுங் .... ........... ......*
கூலியெல்லாந்திருவமுதாக்கொண்டு ................. ..*
நீலநெல்லரிக்கூலிகொண்டுண்ணுநாண் ........ ......*
மாலயர்க்கரியாரதுமாற்றுவார் .. .... ........ .........*

(இதன்பொருள்)

செந்நெல்-எவர்கள்வயலில்விளைந்திருக்கின்றதென்றுதேடிஅதற்கு உரியவர்களைக்கண்டு உத்தரவுபெற்று நெற்கதிர்களைஅறுத்து அதற்காகஅந்தநெல்லாகவேபெறுகின்றகூலியெல்லாம் சுவாமிக்குப்படைக்கும்அன்னமாகச்செய்வித்துப் பின்புகார்நெல்லைஅறுத்துக்கூலியாகப்பெறுகின்ற அந்தநெல்லினரிசியி

ஞர்சிவனம்பண்ணிக்கொண்டிருக்குங்காலத்தில்விஷ்ணுவிற்கு
ம்பிரமனுக்குமரியவராகிய பரமசிவன் அதைநீக்கத்திருவுள்
ளங்கொண்டார் (எ-று) சுவாமிக்குச்சம்பாவரிசியன்னம்படை
த்தலால்தாமும் அவ்வரிசியன்னத்தைப் புசிக்கிறதற்குப் பாத்
திரமன்றென்று காரரிசிச்சோறு சாப்பட்டுக்கொண்டு வந்தா
ரென்று இச்செய்யுளால்விளங்கிற்று-கார்நெல்விளைந்திருக்கிற
கழனிகளிருக்கிறபடியாலன்றோ, இவன் அவ்வரிசியன்னத்தை
ப்புசிக்கின்றான் அக்கறுப்புநெல்லெல்லாம் சிவப்புநெல்லாயி
ருக்க மாற்றுவோமென்றுதிருவுள்ளங்கொண்டாரென்பதற்கு
அதுமாற்றுவாரென்றும். (௰)

(வேறு.)

நண்ணியவயல்களெல்லாநாடொறுமுன்னங்காண..... ..*
வண்ணவார்கதிர்ச்செஞ்சாலியாக்கிடமகிழ்ந்துசிந்தை ....*
யண்ணலாரறுத்தகூலிகொண்டிஃதடியேன்செய்த ......:*
புண்ணியமென்றுபோதவமுதுசெய்விப்பாரானார் .... ..*

(இதன்பொருள்)

அவ்வூரினுள்ளவயல்களிலெல்லாம் அன்றைத்தினமுதலாகவ
ருகின்றநாள்கடோறும்-மாணக்கஞ்சாறநாயனாருடையகண்
ணுக்குமுன்னே தோன்றும்படி அழகும் நீட்சியும்பொருந்தி
யகதிர்களையுடைய சம்பாநெல் விளைச்சலாகச்செய்ய அவ்வடி
யவர் மனமகிழ்ந்து நெல்வயலிலசென்று அறுத்த கூலியைப்
பெற்றுக்கொண்டு இப்படிக்கிடைத்தது அடியேஞ்செய்த பு
ண்ணியத்தாலென்று சுவாமிக்கு மிகவும் அமுது செய்விக்கத்
தொடங்கினார். (எ-று) தமருடையசிவனத்துக்காகக் கார்நெ
ல்விளைச்சலின் அறுப்புக்கிடைக்காதபடியால் நாள்முழுதும்
சம்பாநெல்லை அறுத்துக்கூலியெல்லாம்சுவாமிக்கேஉபயோ
கப்படுத்தலால் போதவமுதுசெய்விப்பாரென்றார். (௰௧)

வைகலுமுணவிலாமைமனைப்படப்பையினிற்புக்கு .......*
நைகுறவில்லாவன்பினங்கைமற்றடகுகொய்து..............*
பெய்கலத்தமைத்துவைக்கப்பெருந்தகையருந்தித்தங்கள்.*
செய்தொழில்முட்டாவண்ணந்திருப்பணிசெய்யுநாளில். ....*

(இதன்பொருள்.)

மேற்சொன்னபிரகாரம் நடக்கின்றபடியால் நாள்முழுதும்
சாப்பாடுஇல்லாமைபற்றிவீட்டின் பின்புறத்திலுள்ளதோட்ட
த்திற்குப்போய்க் குறைவில்லாத அன்பினையுடைய அரிவாட்

டாயநாயனாருடைய மனைவியார் கீரைகொய்து சமைத்து இலை
யிலிடப்பெருமைபொருந்திய குணத்தையுடைய அடியாரான
வர் அதைப்புசித்துத் தினம்செய்யவேண்டியகடன்தடைபடா
மலிருக்கும்படி அப்படிப்பட்டதிருப்பணிவிடைசெய்துகொ
ண்டு வருநாளையில்.—(எ-று) (செய்கடனாவது) சுவாமி நை
வேத்தியத்துக்காக அரிசி- மாவடுகீரைகொண்டுபோய்ச் சமர்
ப்பித்தலாம். (௰௨)

டினைமருங்கடனுமாளவடநெடுவானமீனை .......... ....*
யனையவர்தண்ணீர்வார்க்கவமுதுசெய்தன்பனாரும் .. .. ...*
வினைசெயன்முடித்துச்செல்லுமேவுநாளொருநாண்மிக்க [ன்
முனைவனார்தொண்டர்க்கங்குநிகழ்ந்ததுமொழியப்பெற்றே*

(இதன்பொருள்)

தோட்டத்திலுள்ள கீரையெல்லாம் அற்றுப்போக அருந்ததி
க்குச்சமானமாகிய அந்தமாதராசவர்-சுத்தஜலத்தைத் தம
முடையகணவருக்கு வார்க்க அதனைட்பானம்பண்ணி அடியவ
ரும் சுவாமிபூசைக்குவேண்டிய அரிசிக்காகச்செய்யுந் செய்
யசமுசுத்து நடட்பிக்கச் சென்றுகொண்டிருக்கும் நாள்களி
ல் ஒருநாள் ஒப்பற்றபரமசிவனால் பக்தருக்குச் சம்பவித்த
தைச் சொல்லத்தொடங்குகின்றேன்.—(எ-று) (கீரை-அற்று
ப்போகிறதற்குக்காரணம்யாதெனின், பின்னும்பாத்திகள்கோ
லிக் கீரைவிளைத்து நீர்வார்க்கிறதற்குப் பொழுதில்லாமல்கா
லமெல்லாம் நெல்லறுக்கிறதிலே போயினபடியாலென்க-
வடமீன்-அருந்ததி. நெடுவானம்-நெடிய ஆகாயம். (௰௩)

முன்புபோன்முதல்வனாயமுதுசெய்விக்கமாறு ..... ..*
மன்புபோற்றூயசெந்நெலரிசிமாவடுமென்கீரை ........*
துன்புபோமனத்துத்தொண்டர்கூடையிற்சுமந்துபோகட் ..*
பின்புபோமனைவியாரான்பெற்றவஞ்சேர்த்திச்சென்றார் .... *

(இதன்பொருள்.)

தமக்குச் செல்வமிருந்த காலத்திற்போல் ஆண்டவர்க்கு அமு
துசெய்விக்க-எழுகின்றபக்திபோலப் பரிசுத்தமாகிய செந்
நெல்லரிசியும், மாவடுவும், மென்மையாகிய கீரையும், துன்ப
த்தை ஒழிந்த அடியவர் கூடையில்வைத்துச் சுமந்துகொண்டு
போக அவர்பின்னாகப்போகின்றமனைவியாரானவர் சுவாமிக்கு
ப்பஞ்சகவ்வியம்எடுத்துக்கொண்டுநடந்தார்.—(எ-று) ஆன்
பெற்ற ஐந்து-பசுவாலுண்டாயஐந்து. அவை-பால்-தயிர்-
நெய்-கோசலம்-சாணமாம். (௰௪)

போதாநின்றபோதுபுலர்ந்துகாறளர்ந்துதப்பி ...... ...*
மாதரார்வருந்திவிழ்வார்மட்கலமூடுகையார் .. .........*
காதலாலணைத்துமெல்லாங்கமரிடைச்சிந்தக்கண்டு .........*
பூதநாயகர்தந்தொண்டர்போவதங்கினியென்னென்று .. ...*

(இதன்பொருள்)

நாயனார் கூடையெடுத்துக்கொண்டு போகும்போது உணவி
ல்லாமையால் தேகம்உலர்ந்து கால்தள்ளாடித் தவறிவிழுந்தா
ர் அவர்பெண்சாதி பஞ்சகவ்வியம் வார்த்திருக்கின்ற கலயத்
தை மூடிக்கொண்டிருக்கிறகையால்அப்போது அவளைகட்டிக்
கொண்டும் எல்லாம்கமரில்சிந்திப்போகக்கண்டு பூதகணங்களு
க்குத்தலைவராகிய சுவாமியின்தொண்டரானவர் இனிச்சுவாமியி
ன்சன்னிதிக்குப்போவதினாற்பயன்யாதென்று. (எ-று) கமர் எ
ன்பது வெடிப்பு. வெறுநிலத்தில்அரிசிசிந்தினாலும்எடுத்துமண்.
கல்-போக்கிச்சுவாமிக்குஉபயோகப்படுத்தலாம்-பூமியின்வெ
டிப்பில்கொட்டுண்டபடியால் கோவிலுக்குப் போவதற்குக
ருத்தில்லாதவராயிருந்தாரென்பார் (போவதங்கினியென்னெ
ன்றார்) (௰௫)

நல்லசெங்கீரை தூயமாவடுவரிசிசிந்த .......... .......*
வல்லநீர்த்தாளவல்லாரமுதுசெய்தருளுமப்பே ..........*
றெல்லையிறீமையேனிங்கெய்திடப்பெற்றிலேனென் ... .....*
றொல்லையிலரிவாட்பூட்டிப்பூட்டியையரியலுற்றார் ..... ....*

(இதன்பொருள்)

தன்மையாகிய செங்கீரையும் தூய்மையாகியமாவடுவும் அரிசி
யும் சிந்திப்போதலால்-பிறவித்துன்பத்தைநீக்கி ஆளவல்லகை
லாசபதிஅமுதுசெய்யும் உயர்ந்தபேறு அளவில்லாததீமையை
உடையநான் அடையும்படிபெற்றிலேனென்று விரைவில் அரி
வாளைத்தம்முடைய ஊட்டியில்சேர்த்து அதை அறுக்கத்தொ
டங்கினார். (எ-று) தம்முடைய உயிருள்ளவளவாக்கும்அரிசிமா
வடுகீரை சுவாமிக்கு அமுதுசெய்துகொண்டு வரவேண்டுமெ
ன்றுநினைவுற்றவர் உயிருள்ளபோதே தடைபட்டபடியால் பி
ராணனைவிடவேண்டுமென்று அரிவாளால் கழுத்தையறுத்து
க்கொள்ளத்தொடங்கினார். ஊட்டிகழுத்தின்முன்பக்கம் (௰௬)

ஆட்கொள்ளுமையர்தாமிங்கமுதுசெய்திலரொவென்றுப் *
பூட்டியவரிவாட்பற்றிப்புரையறவிரவுமஃப் ..............*
காட்டியநெறியினுள்ளந்தண்டறக்கழுத்தினோடே .... ...*
பூட்டியுமரியாநின்றுறுபிறப்பரிவாரொத்தார் .. ......*

(இதன்பொருள்.)

தம்மையாட்கொண்ட பரமசிவன் இங்குஅமுதுசெய்யமாட்டா னென்று பூட்டிய அரிவாளைக்கொண்டு குற்றமறகலந்த அன்பு பொருந்திய நல்லவழிபிற்செல்கின்றமனமென்னுந் தூளூட்டியோடு கழுத்தையும் மிகவுமற்றுப்போக அறுத்துக்கொண்டார் ஆனபடியால் அந்த அடியார் தமக்கிருந்தசமுசாரமென்னும் பிறப்பை அறுத்து நீக்குகிறவர் போலானார்.—(எ-று) (௰௭)

மாசறுசிந்தையன்பர்கழுத்தரியரிவாட்பற்று ...... ......*
மாசில்வண்கையைமாற்றவம்பலத்தாடுமையர் .... ......*
வீசியசெய்யகையுமாவடுவிடேல்விடேலெனு .... ......*
மோசையுங்கமரினின்றுமொக்கவேயெழுந்ததன்றே ......*

(இதன்பொருள்.)

களங்கமில்லாதமனதையுடையஅடியார்தம்முடையகழுத்தையறுத்துக் கொள்ளுகிறதற்காக அரிவாளைபிடித்தகுற்றமற்றகையை மாற்றும்படியாகப் பொன்னம்பலத்தில் நடனஞ்செய்கின்ற சுவாமியானவர் உயரவீசியசிவந்தகையும் மாவடுவைக்கடிப்பதனாலே உண்டாகும் விடேலென்னும் ஓசைபோன்ற ஓசையும் கமரிலிருந்து ஏககாலத்திலே எழும்பியது.—(எ-று) (௰௮)

திருக்கைசெல்றரிவாட்பற்றுந்திண்கையைப்பிடித்தபோது *
வெருக்கொடங்கூறுநீங்கவெவ்வினைவிட்டுநீங்கிப் .... .. *
பெருக்கவேமகிழ்ச்சிநீடத்தம்பிரான்பேணித்தந்த .... ...*
வருட்பெருங்கருணைநோக்கியஞ்சலிகூப்பிநின்று ...... *

(இதன்பொருள்)

பரமசிவனது அழகியகையானது வெளியில்வந்து கழுத்தையறுத்துக்கொள்ள அரிவாளைப் பிடித்துக்கொண்டிருக்கும் பலம்பொருந்திய கையைப்பிடித்தபோது அவ்விடத்திலே அடியார்பயங்கொண்டு அடைந்ததுன்பம்நீங்க வெட்டமாகியகொடியவினையை யொழித்துச் சந்தோஷம்பெருகிவளரப்பரமசிவன் விருப்பத்தோடு அனுக்கிரகஞ்செய்த பெருமைபொருந்தியகிருபாவிசேஷத்தை ஆலோசித்து அஞ்சலிகூப்பிக்கொண்டு நின்று.—(எ-று) (௰௯)

அடியனேனறிவிலாமைகண்டுமென்னடிமைவேண்டிப் ...*
படியிலைசக்கமரில்வந்திங்கமுதுசெய்பரனேபோற்றி .....*
துடியிடைபாகமானதூயநற்சோதிபோற்றி .... ..... ..*
பொடியணிபவளமேனிப்புரிசடைப்புராணபோற்றி ......*

(இதன்பொருள்.)

அடியேன் மூடனாயிருக்கிறதை யறிந்திருந்தும் என்னை யடிமைகொள்ளவிரும்பிப்பூமியின்மேல் கமரிலே எழுந்தருளிவந்து அமுதுசெய்தருளிய ஆண்டவரே- உமக்குவந்தனம், உடுக்கைபோன்ற இடையையுடைய பார்வதியின் பாகத்திலிருக்கும் பரிசுத்தமாகிய சோதியானவரே வந்தனம், விபூதியைத்தரிக்கின்ற பவளம்போன்ற நிறமுள்ள-முறுக்காகிய சடையையுடைய ஆதியாயிருக்கின்றவரே வந்தனம்.—(எ-று) (உ௧)

என்றவர்போற்றிச்செய்யவிடபவாகனராய்த்தோன்றி ....*
நன்றுநீபுரிந்தசெய்கைநன்னுதலுடனேகூட... ... ....*
வென்றுநம்முலகில்வாழ்வாயென்றவருடனேநண்ணா ....*
மன்றுளேயாடுமையர்மழவிடையுகைத்துச்சென்றார். .... *

(இதன்பொருள்.)

இந்தப்பிரகாரம்அடியவர்போற்றிவணங்கப்பொன்னம்பலத்தில் நடனஞ்செய்தருளிய சுவாமி-ரிஷபவாகனரூடராய்க் காட்சியுற்று நீ செய்த அன்பின்செய்கையானது நன்றாயிருக்கின்றது உன்மனைவியோடு வந்து நமது சிவலோகத்தில் வாழ்வாயென்றருளிச்செய்து அப்படியேயவர்தம் சுவாமியோடுவா இளமைபொருந்தியரிஷபத்தை நடத்திச்சென்றார்.—(எ-று)

பரிவுறுசிந்தையன்பர்பரம்பொருளாகியுள்ள .. .. . ......*
பெரியவரமுதுசெய்யப்பெற்றிலேனென்றுமாவின், .....*
வரிவடுவிடேலென்றுமுனைவன்கழுத்தரிவாள்பூட்டி.. .. ....*
யரிதலாலரிவாட்டாயராயினார்தூயநாமம்.. ..... .. ..... ..*

(இதன்பொருள்.)

கசிந்த மனநினைவுடைய அடியாரானவர்- பரம்பொருளாயிருக்கின்ற பெரியவர்-அமுதுசெய்யப் புண்ணியஞ் செய்திலேனென்று நீண்ட மாவடுவினது விடேலென்கிற சப்தங் கேட்காததற்குமுன் வலியகழுத்தில் அரிவாளைப்பூட்டி அரிந்தபடியால் அரிவாட்டாயனென்கிற பரிசுத்தநாமத்தை யுடையவரானார்.—(எ-று) (உஉ)

முன்னிலைகமரேயாகமுதல்வனாரமுதுசெய்யச் .. ........*
செந்நெலின்னரிசிசிந்தச்செய்யுறவடுவிடேலோசை ............*
யன்னதுகேட்டதொண்டரடியிணைதொழுதுவாழ்த்தி .. ...*
மன்னுமானாயர்செய்கையறிந்தவாறுரைக்கலுற்றேன். .... .*

(இதன்பொருள்.)

கமரோ மூன்னிலையாயிருக்கப் பாடசிவன் அமுதுசெய்யச்சம் பா நெல்லின் அரிசிசிந்த வடுவின் கடிபட்ட ஓசையானது அப்போதே கேட்ட அடியவரது இரண்டு பாதத்தையும் வணக்கிஸ்தோத்திரஞ்செய்து நிலைபெற்ற ஆனாயனாரது பக்தியின் திறத்தை எனக்குத் தெரிந்த அளவில் சொல்லத் தொடங்குகின்றேன். (எ-று) (உ௩)

அரிவாட்டாயநாயனார்புராண-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-கூங௰.

# ஆனாயநாயனார்புராணம்.

மாவிரைப்பொலிசோலையின் வர்ஞ்மதிவந்தேறச் ...... *
சூடுபரப்பியபண்ணைவரம்புகரும்பேற ...... *
வீடுபெருக்கியபோர்களின்மேகமிளைத்தேற ...... *
நீடுவளத்ததுமேன்மழைநாடெனுநீர்நாடு ...... *

(இதன்பொருள்)

பக்கத்திலிருக்கும் வாசனை பொருந்திய சோலையில் வெண்மையாகிய சந்திரன் ஏறிச்செல்லுதலாலும்; நெல்லரிகளைப் பரப்பியிருக்கின்ற வயல்களின் வரப்பில் வண்டுகள் ஏறிமொய்த்தலாலும் ஒன்றுக்கொன்று சமானமாக உயர்ந்திருக்கும் நெற்போர்களில் மேகங்கள் இளைப்போடு ஏறுதலாலும் நீண்ட வளம் பொருந்தியதாயிருக்கின்றது மேன்மையுள்ளமழநாடென்று சொல்லப்பட்ட நீரினையுடைய நாடு.—(எ-று) (க)

நீவிதிதம்பவுழத்தியர்நெய்க்குழன்மைச்சூழன் ...... *
மேவியுறங்குவமென்சிறைவண்டுவிரைக்கஞ்சப் ...... *
பூவிலுறங்குவநீள்கயல்பூமலிதேமாவின் ...... *
காவினுறங்குளிர்நீழலுறங்குவகார்மேதி ...... *

(இதன்பொருள்)

கொய்சகத்தைத்தரித்த இடையின் பின்புறத்தையுடைய பள்ளஸ்திரீகளுடைய வாசனை பொருந்திய கூந்தலாகிய இருண்டவி

டத்தில் மெல்லிய சிறையையுடைய வண்டுகளடைந்து நித்தி ரையண்ணும் நீண்ட கெண்டைமீன்கள் வாசனைபொருந்திய தாமரைப்பூவிலுறங்கும்புட்பங்கள் நிறைந்திருக்கும் தேமா மரத்தினது சோலையின் குளிர்ச்சிபொருந்திய நிழலில் கரு மையாகிய எருமை நித்திரைசெய்யும்.—(எ-று) (௨)

வன்னிலைமள்ளருகைப்பவெழுந்தமாக்கோவைப் ........ *
பன்முறைவந்தெழுமோசையின்முழக்கத்தா .... ... *
லன்னமருங்குறைதண்டுறைவாவியதன்பாலைக் ..... .... *
கன்னலடும்புகையாண்முகில்செய்வகரும்பாலை ... ...... *

(இதன் பொருள்.)

வலிமைபொருந்திய பள்ளர்கள் மாடுகள்பூட்டி யோட்டுதலா ல் சுற்றுகின்ற கரும்பாலையின் அவயவமாக இணைத்திருக்கும் மரங்களிடத்திருந்து எழாநின்ற அதிர்ச்சியோடுகூடிய ஓசையினாலும் அன்னங்கள்வாசஞ்செய்கின்ற குளிர்ச்சிபொருந் திய துறையையுடைய தடாகங்களின்பக்கங்களில் கருப்பஞ்சா ற்றைக்காய்ச்சுகின்ற புகையாலும், மேகத்தினதுபோன்ற மு ழக்கமும், உருவமும்புலப்படுகின்றன.—(எ-று) (ஐ சாரிலைய.

பொங்கியமாநதிநீடலையுந்துபுனற்சங்கந் ... ......... *
துங்கவிலைக்கதலிப்புதன்மீதொதாடச்சிப்போய்த் ..... .. *
தங்கியபாசடைசூழ்கொடியூடுதவழ்ந்தேறிப.. .. ...... *
பைங்கமுகின்றலைமுத்தமுதிர்க்குவபாளையென. ........ *

(இதன் பொருள்)

பிரவாகமாகப்பொங்குகின்ற பெரியநதியினுடைய அலைகளா லொதுக்கப்பட்ட நீரிலிருக்கின்றசங்குகள் உயர்வாகிய கதலிப் புதலின்மீதுதவழ்ந்துபோய் அவ்வாழையிலையைச்சுற்றியகொ டிகளின்வழியாகத் தவழ்ந்து பசுமைபொருந்திய கமுகமர த்தின்தலைமேல் ஏறி அம்மரத்தின்பாளை புஷ்பத்தையுதிர்ப்ப துபோல் முத்துகளைச்சொரிகின்றன.—(எ-று) (௪)

அல்லிமலர்ப்பழனத்தயலுளவானேறு. ...... ....... *
மொல்லைமுழூப்படையுகைப்பிறுழக்குழக்கன்று ......... *
சொல்லைமடக்குறுமான்மறியோடுகுதித்தோடு. ......... *
மல்குவளத்ததுமுல்லையுடுத்தமருங்கோர்பால் .... ....... *

(இதன் பொருள்)

அல்லிமலர்களையுடைய வயல்களின்பக்கத்தில் மிகவும்இளமை

பொருந்திய பசுவானது பெறுகின்ற - சீக்கிரத்தில் கர்ப்பப்பை யை உடைத்துக் கலந்திய இளங்கன்றானது கொல்லையிலிருக்கு ம் அறியாமையுள்ள சிறியமான்கன்றுகளோடு குதித்தோடுகின் ற நிறைந்த வளத்தையுடையது - முல்லைநிலத்தை அடுத்திருக்கி ன்ற ஒருபுறம்.—(எ-று) (ரு)

தண்மலர்க்காவியேர்பாயவிருப்பனகார்முல்லைத் ........ *
தன்னகைவெண்முகைமேவுசுரும்புகடைஞ்சாலிப். ...... *
பண்ணைநெடுங்கயல்பாயவிருப்பனகாயாவின். ......... *
வண்ணநறுஞ்சினைமேவியவஞ்சிறைவண்டானம். ......... *

(இதன்பொருள்.)

கார்காலத்தில் மலர்கின்றமுல்லையின் - குளிர்ச்சியும் பிரகாசமு ம் வெண்மையுமுள்ள அரும்பை உடைத்திருக்கின்ற வண்டுகள் தேன்தங்கியநீர்நிலைகளில் பாய்ந்திருக்கின்றன வலிய சிறகினையுடைய பட்சிகள் நெற்பயிர்வளர்கின்ற விசாலமாகிய வயல்களிலிருந்து எழுகின்ற மீன்களைப் பாய - காயாமரத்தினு அழகிய வாசனைபொருந்திய கிளைகளில் மேவியிருக்கின்றன — (எ-று) (சா)

பொங்கரில்வண்டுபுறம்பலைசோலைகள்மேலோடும் ........ *
வெங்கதிர்தங்கவிளங்கியமேன்மைபுனைந்நாடா ........ *
மங்கலமாம்புவினருங்கலமாகவதற்கேயார் ........... *
மங்கலமானதுமங்கலமாகியவாழ்மூதூர் ............ *

(இதன்பொருள்.)

மரக்கொம்பிலிருக்கின்ற வண்டுகள்புறத்தி லலைகின்ற சோ லைகளின்மேல் ஓடுகின்ற.வெவ்விதாகிய சூரியன்தடைபடுதலா ல் - சிறிதுபொழுது தங்கவிளங்குகின்ற மேன்மைபொருந்திய மழநாடென்கிற நாடு - அந்தநாடானது பூலோகத்திற்கு அருமையாகிய ஒரு ஆபரணமாகவிளங்க அதற்கு மங்களமாயி ருக்கின்றது மங்கலமென்றுசொல்லப்பட்டு யாவரும் வாழ்த ற்கிடமாகிய ஒப்பற்றபழமையாகிய ஊர்.—(எ-று) (எ)

ஒப்பில்பெருங்குடிநீடியதன்மையிலோவாமே ........ *
தப்பில்வளங்கள்பெருகியறம்புரிசால்போடுஞ் ........ *
செப்பவுயர்ந்தசிறப்பின்மலிந்ததுசீர்மேவு ......... *
மப்பதிமன்னியவாயர்குலத்தவரானாயர் ......... *

(இதன்பொருள்.)

சிறப்புப்பொருந்திய மங்கலமென்கிற அந்தநகரத்தில்நிலை

பெற்றுவாழ்கின்ற ஆயர்தங்குலத்தில்அவதரித்த ஆனாயரென்பவருடைய ஒப்பில்லாத பெருமைபொருந்திய குடியானது விருத்தியாகிற தன்மையினின்றுங் குறையாமல் குற்றமற்ற இலாபத்தைநிறையஅடைந்து தருமஞ்செய்தலோடு சொல்லுதற்கரிய சிறப்புகளாலும் விளங்கினது.—(எ-று) (அ)

ஆயர்குலத்தைவிளக்கிடவந்துதயஞ்செய்தார்...... .....*
தூயசுடர்த்திருநீறுவிரும்புதொழும்புள்ளார்.... ..... ..*
வாயினின்மெய்யின்வழுத்துமனத்தினினைப்பாரிற்...... *
பேயுடனாடுபிரானடியல்லதுபேணாதார்........ ......*

(இதன்பொருள்.)

ஆயருடையகுலத்தைப் பிரசித்தமாகச் செய்யும்பொருட்டுவந்துஅவதரித்தவர்.பரிசுத்தமான பிரகாசத்தையுடைய திருநீறுவிரும்பித்தரிக்கும் பத்தியையுடையவர்- வாக்கு-காயம்-மனது-இவைகளால்துதித்தலும்,வணங்குதலும்,நினைத்தலுமாகிய செய்கையோடு பேயோடு ஆடுகின்ற பரமசிவனதுபாதமல்லதுவேறொன்றையும் விரும்பாதவர்.—(எ-று) (௯)

ஆனிரைகூடஅகன்புறவிற்கொடுசென்றேறிக் ... ..... ..*
கானுறைதீயவிலங்குறுநோய்கள்கடிந்தெங்குந் ... .....*
தூநறுமென்புலருந்திவிரும்பியதூநீரூண் .... .... ....*
ஊனமிலாயமுலப்பிலபல்கவளித்துள்ளார் ...............*

(இதன்பொருள்)

மாட்டுமந்தைகள் முழுதும் அகன்ற இடத்தையுடையகாட்டிற்கொண்டுபோய்க் காட்டிலுள்ளபுலிமுதலானதீயமிருகங்களால் உண்டாகிறதுன்பத்தைநீக்கி எங்கும்- பரிசுத்தமாகிய நல்லமென்மையுள்ள புல்லைத்தின்று விரும்பத்தக்கநீரையுண்டுகெடுதியில்லாத குறைவற்ற கூட்டமாய் விருத்தியாகக் காப்பாற்றுகின்றவர்.—(எ-று) (௰)

கன்றொடுபான்மறைநாகுகறப்பனபாலாவும்.. .... ....*
புன்றலைமென்சினையானொடுநீடுபுனிற்றாவும்........ .....*
வென்றிவிடைக்குலமோடுமினந்தொறுமெவ்வேறே....*
துன்றிநிறைத்துளகுழலுடன்பலதோழங்கள் ..... ........*

(இதன்பொருள்)

கன்றுகளும்,பால்மறந்த மாடுகளும், நாகுகளும்,பால்கொடுக்கின்ற மாடுகளும், அற்பமாகியமயிர்களுள்ள தலையினையுடைய சினைமாடுகளும், நூதனமாகக் கன்றினையீன்ற மாடுகளும்,

பலம்பொருந்திய ரிஷபக்கூட்டங்களும், இனமாகச்சேர்ந்து வெவ்வேறாக நெருங்கி நிறைந்திருக்கும் அனேக இடங்களும், பலதொழுவங்களும் இருக்கின்றன.—(எ-று) (௰௧)

ஆவினிரைக்குலமப்படிபல்கவளித்தென்றாங் .... ......*
கோவலரேவல்புரிந்திடவாயர்குலம்பேணுங் ... ...... ..*
காவலர்தம்பெருமானடியன்புறுகானத்தின் .... .. ....*
மேவுதுளைக்கருவிக்குழல்வாசனைமேல்கொண்டார் ... ....*

(இதன் பொருள்.)

மாடுகளின்கூட்டம் இவ்விதமாக விருத்தியடையக் காப்பாற்றியெந்நாளும் இடையர்கள் இட்ட வேலைசெய்ய ஆயர்குலத்தை ரக்ஷிக்குந்தலைவராகிய ஆனாயனார்-தமக்கு ஆண்டவராகிய பரமசிவனது திருவடியைக்குறித்துத் துளைக்கருவியாயிருக்கும் புள்ளாங்குழலின் வழியாக இசைபாடவேண்டுமென்னும் விருப்பத்தை மேன்மையாக உட்கொண்டார்.—(எ-று) (௰௨)

(வேறு)

முந்தைமறைநூன்மரபின்மொழிந்தமுறையெழுந்தவே ..*
யந்தமுதலிரண்டிலரிந்துநாய்புறுதானம் ......... ..*
வந்ததுளைநிரையாக்கிவாயுமுதல்வழங்குதுளை .... ......*
யந்தமில்சீரிடையிட்டினங்குலியெண்கவினமைத்து .....*

(இதன் பொருள்)

புராதனமாயிருக்கின்ற காந்தருவவேதத்தில் சொல்லியிருக்கின்றபிரகாரம் நன்றாகவளர்ந்திருக்கு மூங்கிலில் நுனியில்-நாலுபங்கும், அடியில் இரண்டுபங்கும், ஒழிந்து நடுவிலுள்ள பாகத்தை அறுத்துக்கொண்டு*மெட்டுக்களிருக்கவேண்டிய இடங்களில் வரிசையாகத் துவாரங்களையுண்டாக்கிக் காற்றுண்டாகிறதற்கு ஓர் துளையையும் அமைத்துத் துவாரத்திற்குந்துவாரத்திற்கும் நடுவில் ஒவ்வோர் அங்குல அளவு இருக்கக் குற்றமில்லாத சிறப்பினையுடையதாகச் செய்து—(எ-று)(அந்தமுதலிரண்டிலரிந்து என்பதற்கு) ஒருமூங்கிலைப்பன்னிரண்டுபங்காக்கி அடியில்நாலுபங்கும், நுனியில் நாலுபங்குந்தள்ளி நடுவிலிருக்கும் நாலுபங்கினையும் அறுத்தெடுத்துக்கொண்டு என்பாருமுளர். இச்செய்யுளால் மூவகைச் சோதனையில் வஸ்துசோதனை-காலசோதனையென்கிற இரண்டும் பெறப்பட்டன. அவற்றுள் வஸ்துசோதனையாவது-புள்ளாங்குழல் இன்ன இன்ன மரங்களில் செய்யப்படவேண்டுமென்றும் இவ்வளவு அங்குலமுள்ளதா யிருக்கவேண்டுமென்றும் அறிதலாம்.

* மெட்டு-இராயம்.

காலசோதனையாவது-எல்லாத்தாளங்களுக்கும் இசையும்படி பாடத் துவாரங்களைத் தக்க இடத்தில் ஏற்படுத்தி நிச்சயித்தல்.

எடுத்தகுழற்கருவியினிலெம்பிரானெழுத்தஞ்சுந் ........*
தொடுத்தமுறையேழிசையின்சுருதிபெறவாசித்துத் ........*
அடுத்தசராசரங்களெல்லாநீர்தங்கவுருந்தங்கருணை ........*
வடித்தவிசையமுதளித்துச்செல்கின்றாரங்கொருநாள் ....*

(இதன்பொருள்)

மேற்சொன்னபடி அமைத்துக் கையிற்பிடித்த புல்லாங்குழலால் எமக்கு ஆண்டவராகிய கைலாசபதியினது ஐந்தெழுத்தைத் திரிசையும் முறையாக ஒருகின்ற எழுசுரங்களிலும் அமைவு பெறச் சேர்த்துச்செய்து பூமியில் சிருஷ்டிசெய்து வைக்கப்பட்டிருக்கும் சரமும், அசரமுமாகிய எல்லாவற்றிற்கும் நிறைந்திருக்கும் நமக்கு உண்டாயிருக்கும் அன்பினால் பாய்கின்ற இசையாகிய அமிர்தத்தைக் காதின்வழியாகப் புகட்டிப் போய்க்கொண்டிருக்கின்றவர் - அப்படியிருக்கையிலொருநாள். எ-று (௰௪)

வாசமலர்ப்பிணைபொங்கமயிர்நுழுதிமருங்குயர்ந்த ......*
தேசுடைய சிகழிகையிற்செறிகண்ணித்தொடைசெருகிப் ...*
பாசிலைவெண்கொடியின்வடம்பயிலநறுவிலிபுனைந்து ... *
காசறுநாணதற்கயல்கருஞ்சுருளிபுறங்கட்டி.. ........*

(இதன்பொருள்)

மணம்பொருந்திய மலர்களாற் பிணைக்கப்பட்ட மாலையானது பிரகாசிக்க-கோதப்பட்டு உயர்வும் காந்தியும் உண்டாக-முடிக்கப்பட்ட மயிர்முடியில் நெருக்கமாகக் கட்டப்பட்டிருக்கும் கண்ணிமாலையைச்செருகி மென்மையாகிய பச்சிலைகொடியை வடமாகத்தரித்து நறுவிலியிலிலையைத் தரித்துக் குற்றமற்ற கயிற்றினால் கருமையாய்ச் சுருளாயிருக்கிற பச்சிலைகளின்புறத்திலகட்டி.--(எ-று) (௰௫)

வெண்கோடலிலைச்சுருளிற்பைந்தோடுவிளக்கத்தோன்றித்.*
தண்கோலமலர்புனைந்தவடிகாதிலொளிதயங்கத் ... ....*
திண்கோலநெற்றியின்மேற்றிருநீற்றினொளிகண்டோர் ....*
கண்கோடவிறைந்தாராக்கவின்விளங்கயிலசையணிந்து....*

(இதன்பொருள்.)

வெண்காந்தளினிலையைச் சுருளாகச்செய்து அதில் பசுமையாகிய புறவிதழையுடைய மணமுள்ளசெங்காந்தட் பூவைத்துத்தரித்த நீண்டகாதினது பிரகாசமின்னே மிகுந்த அழகுள்ள நெற்றியின்மேலாகத் திருநீற்றினது காந்தியைக்கண்டவர்க

னுடைய கன்றுகள் நன்றாகப்பார்த்தும் திருத்தியில்லாமலிருக்கத்தக்க அழகுண்டாக அந்த விபூதியைத் தேகத்திலுந் தரித்து.— எ-று) (௯௭)

நிரைந்தநீறணிமார்பினிரைமுல்லைமுகைசுருக்கிச் ....... *
தெரிந்தபுனைவடந்தாழ்த்துந்தோள்புடையலங்க ....... *
விரைந்தசுரும்பிசையருப்பவளையுநீந்தமரவுரியின் ....... *
புறந்தழையின்மலிதானைப்பூம்பட்டுப்பொலிந்தசைய ... *

(இதன்பொருள்.)

நிரையாக விபூதியைத்தரித்தமார்பில் முல்லையரும்பை நிரையாகவைத்துக் கட்டிச்சுருக்கியதால் நெருங்கிய மாலையானது தோளுமணைந்தொழுங்கிவிலிம்ப இசைபொருந்தப்பதரிக்கப்பட்ட டதாழ்வடத்தோடு நாரு இடையில்தரித்த மரவுரியின் பின்புறத்தில பச்சைப்பூம்பட்டுப்போல் பிரகாசிப்பத் தழையாற்செய்யப்பட்ட ஆடைவிளங்கி அசைந்துகொண்டிருப்ப —(எ-று)

சேவடியிற்றொடுதோலுஞ்செங்கையினில்வெண்கோலும். .. *
மேவுமிசைவேய்ங்குழலும்விளங்கவினைசெய்யுங் .... .. *
காவல்புரிவலவாயர்கன்றுடையாவின்குழாம். ........... *
பூவலர்தார்க்கோவலனார்நிரைகாக்கப்புறம்போந்தார் ... *

(இதன்பொருள்)

சிவப்பாகிய பாதத்திற்றொடுத்த தரிக்கின்றசெருப்புஞ்செய்யகையில்வெண்மைபொருந்திய கோலும், இசைபாடுகின்ற புல்லாங்குழலும், மிகவும்பிரகாசிக்க, மெய்கருத்தொழிலைச்செய்துகாக்கின்ற வலிய இடையர்கள் கன்றுகளையுடைய மாட்டுமந்தையைச் சூழ்ந்துகொண்டுவர மலர்கள் விளங்கிய மாலையைத் தரித்த ஆனாயனார் - அந்தநிரையைக்காக்கும்படி புறத்தில்வந்தார்.—(எ-று) (௯அ)

நீலமாமஞ்ஞையேங்கநிரைக்கொடிபுறவிற்பாடக் ........ *
கோலவெண்முகையேர்முல்லைக்கோபம்வாய்முறுவல்காட்ட *
வாலுமின்னிடைசூழ்மாலைப்பயோதரமசையவந்தாள் .... *
ஞாலநீடரங்கிலாடக்காரெனும்பருவநல்லாள்... .... .. ... *

(இதன்பொருள்)

பெருமைபொருந்திய நீலநிறத்தையுடைய மயிலானது சப்திக்க, வரிசையாகக்கொடிகளையுடைய முல்லைநிலம்பாட - இந்திரகோபமாகிய வாயையும்அழகும்வெண்மையுமுள்ளமுல்லையரும்பாகிய பற்களையும்காண்பித்து சலிக்கின்ற மின்னலாகிய இடையோடு சூழ்ந்தமாலைப்பயோதரம் அசையும்படியாக வந்

நான் - பூமியாகிய நீண்ட நாட்டியசபையில், கார்காலமாகிய பெண்ணானவள்—(எ-று) இதனால் மழைக்காலம்வந்ததென்பதாம். மாலைப்பயோதரத்திற்கு மாலைக்காலத்தில் தோன்றுகின்றமேகம் அசையவெனவும், மாலையைத்தரித்தஸ்தனங்கள் குலுங்கவெனவும், சிலேடைப்பொருள் செய்துகொள்க. (௰௯)

எம்மருங்குநிரைபரப்பவெடுத்தகோலுடைப்பொதுவர் ... *
தம்மருங்குதொழுதணையத்தண்புறவில்வருந்தலைவ .... .. *
ரம்மருங்குதாழ்ந்தசினையலர்மருங்குமதுவுண்டு ....... *
செம்மருந்தண்சுரும்புசூழ்செழுங்கொன்றைமருங்கணைந்தார்

(இதன்பொருள்)

நாற்புறத்திலும் மாட்டினிரையானது பரவக் கையிற் கோலை பிடித்திருக்கும் இடையர்கள் தம்மிடத்தில் தொழுதுவணங்க-குளிர்ச்சிக்கிடமாகிய முல்லைநிலத்தினது காட்டில்வருகின்றஆனாயனார்-அவ்விடத்தில் தாழ்ந்திருக்குங்கொப்புகளிற் பூத்தமலர்களில் உள்ள தேனையுண்டு களிப்படைந்து வண்டுகள் சூழ்கின்ற செழுமைபொருந்திய கொன்றைமரத்தின் சமீபத்திற் போனார்.—(எ-று) (௨௰)

சென்றணைந்தவானாயர்செய்தவிரைத்தாமமென ... .... *
மன்றன்மலர்த்துணர்தூக்கிமருங்குதாழ்சடையார்போ.... *
னின்றநறுங்கொன்றையினைநேர்நோக்கிநின்றுருகி .... .. *
யொன்றியசிந்தையிலன்பையுடையவர்பான்மடைதிறந்தார் *

(இதன்பொருள்.)

சமீபத்திற்போயின ஆனாயர் கட்டப்பட்ட வாசனைபொருந்திய மாலையைப்போல்பரிமளமாயநீண்ட பூங்கொத்துக்களைத் தாங்கிப்புறத்திற்றாழ்கின்றசடையினையுடையபரமசிவன்போல்நிற்கின்ற கொன்றைமரத்தை நேராகப்பார்த்துநின்று உருக்கத்தையடைந்துபொறிகளின் வழியிற்செல்லாமல் அடங்கிய மனதில்அன்பினையுடையவராய்ச்சுவாமியைக்குறித்துக் கடல்மடைதிறந்ததுபோல் சங்கீதம்பாடத் தொடங்கினார்.—(எ-று)

அன்பூறிமிசைபொங்குமமுதவிசைக்குழலொலியால்...... *
வன்பூதப்படையாளியெழுத்தைந்தும்வழுத்தித்தா ....... *
முன்பூதிவருமளவின்முறைமையேயெவ்வுயிரு............ *
மென்பூங்காந்தருக்குழியின்னிசைவேய்ங்கருவிகளில்.... *

(இதன்பொருள்)

அன்பினாலேஊறி மேலேபொங்குகின்ற அமிர்தம்போன்றச

நீக்கித்தைத் தருகின்ற புள்ளாங்குழலின் துளையினால் வலியபூதங்களைப் படையாகவுடைய பரமசிவனது ஐந்தெழுத்தையும் ஸ்தோத்திரஞ்செய்து நாம - முறைப்புணர்த்திக்கொண்டுவருகின்றமுறைமைப்படி எல்லாவுயிர்களும் எலும்புங் கரைந்துருகும்படி செய்கின்ற இனிய இசையையுடைய துளைக்கருவியாகியபலவகைப் புள்ளாங்குழல்களில்.—(எ-று) பலவகைப்புள்ளாங்குழலாவன - முப்பத்திரண்டு துவாரங்களையுடைய வீட்சாதி *முரளியும் ஒன்பது துவாரங்களையுடைய பஞ்சமாதிமுரளியு முதலானவைகளாம். (உஉ)

எழுவிரலிடையிட்டவின்னிசைவங்கியமெடுத்துத் ..........*
தாழுமலர்வரிவண்டுதாதுபிடிப்பனபோலச் ...........*
சூழுமுரன்றெழநின்றுதூயபெருந்தனித்துளையில் .......*
வாழியநற்றோன்றலார்மணியதரம்வைத்தூத ...........*

(இதன்பொருள்.)

ஒவ்வொருதுளைக்குப் புறத்திலும் ஒவ்வொருவிரலளவு இடம் விட்டிருக்கும் எழுதுவாரங்களைப்பொருந்திய இனிய இசையையுடைய வங்கியமென்னும் ஒருவகைப் புள்ளாங்குழலையெடுத்து மலரில்விழுகின்ற வரிபொருந்தியவண்டுகள் அந்தமலர்களின் தாதுக்களைப்பிடித்துக்கொண்டு அசையாமல் (ஊதுதல்போல) நாற்புறமும் குற்றமற்ற சங்கீதத்தொனியானது நிறைய சொல்லிய லக்ஷணந்தவறாமல் பெருமைபெற்றபுள்ளாங்குழலின் துவாரத்தில் அழகுபொருந்திய அதரத்தைவைத்து ஊத.—(எ-று) வங்கியமென்றதுமூங்கில். இக்காலத்தில் பெரும்பான்மை வழங்குகின்ற குழலென்பதாயிற்று. (உ௩)

முத்திரையேமுதலனைத்துமுறைத்தானஞ்சோதித்து ....*
வைத்ததுளையாராய்ச்சிவக்காணை வழிபோக்கி ........*
யொத்தநிலையுணர்ந்ததற்பின்றன்முன்னல்படிமுறையால் ..*
டத்தகைமையாரோசையமரோசைகளினமைத்தார் .....*

(இதன்பொருள்)

முத்திரையென்கிற - ஸ்தானமுதலாக முறையாகவுள்ள எல்லா ஸ்தானங்களையுஞ் சோதித்து ஏற்படுத்தப்பட்ட துளையின்வழியே இராகசோதனையறிய விரல்களைச்செலுத்தி அந்தஸ்வரங்களெல்லாம் ஒத்து இசைக்கக்கண்டபிறகு சட்சத்தில் நின்று வரிசையாக நிஷாதம்வரைக்கும் எச்சு - தக்கு - என்னும் இவ்விரண்டு ஓசைகளையும் அந்தச்சுரங்கள் பெறும்படியமைத்து

*முரளி - புள்ளாங்குழல்.

உயர்வானதாகுதியாகப் பாடினார். — (எ-று) வக்காணையென்பது - எல்லாராகங்களும் இந்த ஆறுதுவாரங்களினாலேயே உண்டாகும்படி விரல்களினாலே துளைகளின்முன்பக்கமும், பின்பக்கமும், அழுத்தியும், மெலித்தும், சமஞ்செய்தும்சோதித்தல். இது - இராகசோதனையைத் தெரிவித்தது. முதநிலையென்பது - ஆரோகணமுறையில் - இரண்டாந்துளை. அதற்கு முதலிலிருக்குந்துளை அனுசாரியென்று சொல்லப்படும். (௨௪)

மாறுமுதற்பண்ணின்பின்வளர்முல்லைப்பண்ணாக்கி .. .... *
ஏறியதாரமுமுழையுங்கிழமைகொளவிருந்தான .... .... *
மாறுலவுஞ்சடைமுடியாரஞ்செழுத்தினிசைபெருக. ... *
கூறியபட்டடைக்குரலாங்கொடிப்பாலையினிறுத்தி ... .. *

(இதன்பொருள்.)

முதலில்விஷமமாகப்பாடினபின்பு அந்நிலத்திற்குரியமுல்லைப்பண்ணைப்பாடிஉயர்வாகியதாரம் - உழையென்கிற இவ்விரண்டு இசையின் உரிமையைத்தெரிவிக்கின்ற ஸ்தானமுறையாக கங்கையுலாவுகின்றசடைமுடியையுடையபரமசிவனது ஐந்தெழுத்தையுங்கானம்பண்ணுதல்விருத்தியடைய அழுத்தமுள்ள குரலாகிய கொடிப்பாலைப்பண்ணில நிறுத்தி. — எ-று, தாரம் - உச்சவிசை. அதுமூக்கால் உண்டாவது உழை. தலையையிடமாகவுடைய இசை. (கொடிப்பாலைப்பண்ணாவது நெஞ்சையிடமாகவுடைய இளியென்னும்பண்ணே குரலாகஎழும்புவது. ௨௫)

ஆயவிசைப்புகனான்கினமைந்தபுகல்வகையெடுத்து ...... *
மேயதுளைப்பற்றுவனவிடுவனவாம்விரனிரையிற் .... .. *
சேயவொளியிடையலையத்திருவாளனெழுத்தஞ்சுந் .... .. *
தூயவிசைக்கிளைகொள்ளுந்துறையஞ்சின்முறைவிளைத்தார். *

(இதன்பொருள்)

மேன்மைபொருந்திய ஸ்திதி - பிரக்கிரமம் - சஞ்சாரம் - மூர்ச்சனையென்கிற நான்குவகைகளையும் தகுதியான பிரகாரம் எடுத்துப் புள்ளாங்குழலின் துளைகளைப்பொத்துதலும் விடுதலுஞ்செய்கின்ற நிரையாயிருக்கின்ற விரலில் அவ்விரல்களின் செய்யபிரகாசமானது நடுவில் - நடுவில் - ததும்பிவிளங்க - பரமசிவனது ஐந்தெழுத்தையுங்குற்றமற்றஇசையினதுபிரிவாயிருக்கின்ற ஐவகைத்துறையினும் முறையாகப்பாடினார். —(எ-று) இசைத்துறை ஐந்து - ஆயத்தம், எடுப்பு - உற்கிரகம் - சஞ்சாரம் - இடாயம் என்பனவாம், ஆயத்தம் மந்தாரத்தில்நின்றும் அனுமந்தாரமாகிய கீழ்ஸ்தாயிவரைக்குஞ் சென்று மூன்ஸ்தானத்தி

லேவந்து முடிவது; வமைப்பு - மந்தாரத்திலிருந்து பஞ்சமகா ம்வரைக்கும்போய் மறுபடியும் மந்தாரத்தில்வந்து முடிவது. உத்கிசகம் - மந்தாரமுதற்கொண்டு தாரகஸ்தானம் வரைக்கும் போய்ப் பின்னும்மந்தாரத்தில் வந்து முடிவது. சஞ்சாரம் மந்தாரத்திலிருந்து மத்திமம்-தாரகம்-இவ்விரண்டிலும் போய் இறங்கிப் பின்கீழ்ஸ்தாயியான அனுமந்தாரத்திலுஞ் சென்று மீண்டு மந்தாரத்தில்வந்து நிற்பது இடாயம், மந்தாரஸ்தானத்தையே முதன்மையாகச்செய்துகொண்டு- மத்திமதாரகம் இவ்விரண்டிலுஞ்சென்று பின்பு மந்தாரத்தையே வலியுறுத்தி அனுமந்தாரத்திற்சென்று மீண்டு மந்தாரத்தில்முடிவது. (௨௬)

மந்தாரத்துமத்திமத்துந்தாரத்துமீவரன்முறையாத்.. ...... *
தந்திரிகண்மெலிவித்துஞ்சமங்கொண்டுவலிவித்து .. ....*
மந்தாரத்துவிரற்றெழில்களளவுபெறவசைத்தியக்கிச். .... *
சுந்தரச்செங்கனிவாயுந்துளைவாயுந்தொடக்குண்ண ......*

(இதன்பொருள்.)

மந்தாரம், மத்திமம், தாரகம், இம்மூன்று சுருதிகளையும் வரன் முறையாகத் தெரிவிக்கும் துவாரங்களை விரலால் மென்மையாகப்பொத்தியும், சமமாகச்செய்தும், அதன்பின் வன்மையாகப்பொத்தியும், இம்மூன்றுதுவாரமுமல்லாத மற்றைத் துளைகளில் விரல்களால் சுருதிகளின் அளவுகுறையாமல்அசைத்து இயங்குவித்தும் அழகுபொருந்திய சிவப்பாகிய வாயும் புள்ளாங்குழலின் துவாரவாயும் ஒன்றுபட்டிணங்க. (எ-று) (மந்தாரம்) தாழ்ந்தசுருதி. (மத்திமம்)சமமாகியசுருதி. (தந்திரி) ஆகுபெயர்.

(௨௭)

வண்ணியநூற்பெருவண்ணமிடைவண்ணம்வனப்பென்னும் *
வண்ணவிசைவகையெல்லாமாதுரியநாதத்தி .... ...... *
னண்ணியபாணியுமியலுந்தூக்குநடைமுதற்கதியிற் .. ....*
பண்ணமையவெழுமோசையெம்மருங்கும்பரப்பினார் .... *

(இதன்பொருள்.)

உயர்வாக நினைக்கும்படி சொல்லியிருக்கும் சாஸ்திரத்தில் பெருவண்ணம், இடைவண்ணம், வனப்பு என்கின்ற மூவகையிசையோடுமற்றவைகளெல்லாம்இனிப்பாகியநாதத்தால் இராகமும், அதன்மூர்ச்சனையும், ஏற்றமும்விளம்ப கதியின் உற்றுப் பொருந்த எழுகின்ற ஓசையை நான்குபுறத்திலும் பரவச்செய்தார்.—(எ-று) பெருவண்ணம்- நெட்டெழுத்துக்களையே தொடுத்துப்பாடுவது. இடைவண்ணம்-இடையெழுத்தே மி

குதிபாகவருவது. வணட்பு-எழுத்துக்கள் ஒன்றினோடொன்று பிணவுபடாம லிசைந்து அழகுபொருந்தியிருப்பது. (உஅ)

வள்ளலார்வாசிக்குமலித் துளைவாய்வேய்ங்குழலி ........ *
னுள்ளுறையஞ்செழுத்தாகவொழுகியெழுமதுரவொலி .. *
வெள்ளநிறைந்தெவ்வுயிர்க்குமேலமரர் தருவிளைதேன் . *
றெள்ளமுதினுடன்கலந்துசெவிவார்ப்பதெனத்தழைக்க .. *

(இதன்பொருள்.)

ஆனாயனார் வாசிக்கின்ற அழகிய துவாரங்கள்பொருந்திய புல்லாங்குழலினுள்ளே சொல்லத்தக்க மொழி பஞ்சாக்ஷரமாகி அதைக் காரணம்பண்ணுதலால் எழுகின்ற இனிதாகிய ஓசைவெள்ளமானது நிறைவுபெற்று மேன்மைபெற்ற தேவதருவின் தேனைத்தெளிந்த அமிர்தத்துடனே கலந்து காதில்வார்ப்பது போல் சலவையுண்டாய் நிறைய.—(எ-று) (உகூ)

ஆனினங்களருகருந்தியசைவிடாதணைந்தயரப் ...... *
பானுரைவாய்த்தாய்முலையிற்பற்றுமிளங்கன்றினமும் ..... *
தானுணவுமறந்தொழியத்தடமருப்பின் விடைக்குலமும் .... *
மான்முதலாங்கான்விலங்குமயிர்முகிழ்த்துவந்தணைய... *

(இதன்பொருள்.)

பசுக்கூட்டங்கள் அறுகம்புற்களை உண்டு அசைவு இடாமல் இவனை அடைந்து உருக்கத்துடனே மெய்மறக்க - வெளுப்பாகிய நுரையினை வாயிலுடையனவாகித் - தாயின்முலையைப்பற்றிக் கொண்டிருக்கும் இளமையாகிய கன்றுகளின் இனமும், பாலுண்ணுதலைமறந்துவிட்டு இசைகேட்டுக்கொண்டிருக்க - விசாலமாகிய கொம்புகளை உடைய ரிஷபக்கூட்டங்களும், மான்முதலாகிய காட்டுமிருகங்களும், மயிர் சிலிர்த்துக்கொண்டுவந்து சேர.—(எ-று) (௩௰)

ஆடுமயிலினங்களுமங்கசைவயர்ந்துமருங்கணுக .... *
கூடுசெவியிசைநிறைந்தவுள்ளமொடுபுள்ளினமும் ....... *
மாடுபடிந்துணர்வொழியமருங்குதொழில்புரிந்தொழுகுங் *
கூடியவன்கோவலருங்குறைவினையின்றுறைநின்றார் ..... *

(இதன்பொருள்.)

காட்டில் ஆடுகின்ற மயிற்கூட்டங்களும், ஆடுதலொழிந்து சமீபத்தில்வரப் பலவகைப்பட்சிகளும், காதின்வழியாகப்போய்க் கீதம்நிறைந்த அகத்தோடு அருகில்வந்து உணர்வொழிந்து நிற்க - பக்கத்திலே மாடுமேய்த்தல் முதலிய தொழிலைச் செய்து கொண்டிருக்கும் வலிய இடையர்களும், தாங்கள் செய்யும்வே

வெண்மையாகிய பற்களையும் உடைய பாம்புகள் பயமில்லாமல் மயில்களின்மேல மயங்கிவிழும்சலிக்காத பலத்தையுடைய சிங்கமும் பெரிய யானைகளும் பகையில்லாமல் ஒன்றாகச்சேரும் சிறிய உடலினையுடைய மான்களும், புலியினிடமாகச்சேரும்—(எ-று) (௯௪)

மருவியகால்விசைத்தசையாமரங்கண்மலர்ச்சினைசலியா ...*
கருவரைவீழருவிகளுங்கான்யாறுங்கலித்தோடா .. ....*
பெருமுகிலின்குலங்கள்புடைபெயர்வொழியப்புனல்சோரா*
இருவிசும்பினிடைமுழங்காவெழுகடலுமிடைதுளும்பா ..*

(இதன்பொருள்.)

ஆனாயனாரது புள்ளாங்குழலிசையினால்-சஞ்சரிக்கின்ற காற்றானது விசைகொண்டு அசையாமலிருந்தது, மரங்களிலிருக்கும் புஷ்பங்களையுடைய கொம்புகளும் அசையாமலிருந்தன கருமையாகிய மலைகளிலிருந்துவிழுகின்ற அருவிகளும், காட்டாறுகளும்-முழங்கி ஓடாமலிருந்தன, பெரியமேககூட்டங்கள் இடம்பெயர்ந்து மற்றோரிடத்திற்குப் போகாதொழிந்து நீர்பொழியாமலிருந்தன-பெருமைபொருந்திய ஆகாயத்தில் முழக்கங்கள் உண்டாகாமலிருந்தன. ஏழுசமுத்திரமும் நடுவிடத்தில்-ததும்பாமலிருந்தன.—(எ-று) (௯௫)

இவ்வாறு நிற்பனவுஞ்சரிப்பனவுமிசைமயமாய் .. ......*
மெய்வாழும்புலன்கரணமேவியவொன்றாயினவால் .... *
மொய்வாசநறுங்கொன்றைமுடிச்சடையாரடித்தொண்டர் *
செவ்வாயின்மிசைவைத்ததிருக்குழல்வாசனையுருக்க. ....*

(இதன்பொருள்)

இந்தப்பிரகாரம் நிலையாயிருக்கின்ற மரங்கள்-மலைகள்-முதலானவைகளும்சரிக்கின்ற மனிதர் விலங்குபட்சி முதலானபொருள்களும்சங்கீதத்தின்மயமாகித்தங்களிடமாகிய ஐம்பொறிகளும அந்தக்கரணங்களும் கேட்பதில் ஒன்றுபட்டுப்போயின. வாசனையிருந்த நல்லகொன்றை மலர்மாலையைத்தரித்த சடைமுடியையுடைய பரமசிவனது பாதத்துக்கு அன்பராகிய ஆனாயனார் தமதுசிவப்பாகியவாயில் வைத்தூதும் அழகுபொருந்திய புள்ளாங்குழலின் நாதமானது உருகச்செய்தபடியால்.—(எ-று) (௯௬)

மெய்யன்பர்மனத்தன்பின்விளைத்தவிசைக்குழலோசை.. *
வையத்தன்னையுநிறைத்துவானந்தன்வயமாக்கிப் .......*

பொய்யன்புக்கெட்டாதபொற்பொதுவினிடம்புரியு.....*
மையன்றன்றிருச்செவியினருகணையப்பெருகியதால்....*

(இதன்பொருள்.)

மெய்ம்மைபொருந்திய அடியாராகிய ஆனாயருடைய மனதி லுள்ள அன்பினால் உண்டாகிய புள்ளாங்குழலின் இசையான து பூமியையும் நிரப்பி ஆகாயத்தையும் அப்படியே செய்து பொய்யாக அன்புசெய்தலுக்கு எட்டாதபொன்னம்பலத்தில் நடனஞ்செய்தருளுகின்ற நடேசரது திருச்செவியிற்சென்று நிறைந்தது.—(எ-று) (௩௭)

ஆனாயர்குழலோசைகேட்டருளியருட்கருணை...........*
தானாயதிருவுள்ளமுடையதவவல்லியுடன்.............*
கானாதிகாரணராங்கண்ணுதலார்விடையுகைத்து........*
வானாறுவந்தணைந்தார்மதிநாறுஞ்சடைதாழ...........*

(இதன்பொருள்)

ஆனாயநாயனாருடைய புள்ளாங்குழலினோசையைக்கேட்டு-க ருணைபொருந்திய உள்ளத்தையுடைய தவமிகுந்தபார்வதியோ டு அந்தவனத்தில் எல்லாவற்றிற்கும் ஆதிகாரணராயிருக்கின்ற கைலாசபதி ரிஷபத்தைநடத்தி ஆகாயமார்க்கத்தில் எழுந்தரு ளிவந்தார் சந்திரன்றங்கிய சடையானது தாழும்படி. (எ-று)

திசைமுழுதுங்கணநாதர்தேவர்கட்குமுன்னெருங்கி....*
மிசையிடைத்துவருபொழுதுவேற்றொலிகள்விரவாமே..*
யசையவெழுங்குழலொலியோடஞ்செழுத்தாற்றமைப்பாரு...*
மிசைவிரும்புங்கூத்தனாரெழுந்தருளியெதிர்நின்றார்.......*

(இதன்பொருள்)

எல்லாத்திசைகளிலும் சிவகணங்கள் தேவர்களுக்கு முன்னாகவ ந்துநெருங்கி மேலேநிறைந்துவரும்போது மற்றெந்த ஒலிக ளும் உண்டாகாமல் அசைந்து எழுகின்றபுள்ளாங்குழலினுடை ய நாதத்தில் ஐந்தெழுத்துக்களாலும் தம்மைஸ்தோத்திரம்ப ண்ணுகின்றபாட்டினை இச்சித்தருளிய சுவாமி யெழுந்தருளி யெதிராகநின்றார்.—(எ-று) (௩௮)

முன்னின்றமழவிடைமேன்முதல்வனாரெப்பொழுதுஞ்..*
செந்நின்றமனப்பெரியோர்திருக்குழல்வாசனைகேட்க....*
இந்நின்றநிலையேநம்பாலணைவாயெனவவரும்...........*
அந்நின்றநிலைபெயர்ப்பாரையர்திருமருங்கணைந்தார்....*

(இதன்பொருள்.)

இவ்வண்மைபொருந்திய ரிஷபவாகனத்தில் [illegible]

